# சொல்லாரம்



பெ. சௌந்தரபாண்டியன் எம்.ஏ., பி.எல்., எம்.எல்.ஏ.

# சொல்லாரம்

பெ. சௌந்தரபாண்டியன், எம். ஏ; பி. எல்; எம். எல். ஏ;

( சட்டப் பேரவைப் பேச்சு )

பத்து ரூபாய்

அச்சிட்டோர்: ஆனந்தா அச்சகம், திருச்சி - 2.



# என்னுரை

*

மலர்த் தோட்டங்களில் பூத்துக் குலுங்கும் பல மலர்களை எடுத்து சேர்த்துக் கோர்த்து அழகான ஆரமாக உருவாக்கித் தருவதுபோல தமிழ்நாடு சட்டப் பேரவையில் நான் ஆற்றிய பதினாறு உரைகளை மட்டும் எடுத்துச் சேர்த்து தொகுத்து சொல்லாரமாக உருவாக்கித் தந்துள்ளேன். நான் 1967-ஆம் ஆண்டு முதல் திருச்சி மாவட்டம், கிருஷ்ணராயபுரம்தொகுதி மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு சட்டப்பேரவை உறுப்பினராகப் பணியாற்றிய காலத்தில் பேசிய பேச்சுக்கள், கேட்ட கேள்விகள், எழுப்பிய கவன ஈர்ப்புத் தீர்மானங்கள், கிளப்பிய உரிமைப்பிரச்சனைகள், கொடுத்த தனிநபர் தீர்மானங்கள் ஏராளம். எல்லாவற்றையும் எடுத்துத் தொகுத்து அளிக்க அச்சுக் கூலியும் இதர செலவும் ஏராளம் ஆகும் ஆதலால் அவை அனைத்தையும் இந்த சொல்லாரத்தில் இடம்பெறச்

செய்ய இயலவில்லை. ஆகவே தான் குறிப்பிட்ட சில பேச்சுக்களை மட்டும் தொகுத்து அளிக்க முயற்சி எடுத்துக் கொண்டேன்.

ஒரு சட்டப்பேரவை உறுப்பினர் தொகுதி மக்களுக்காகவும், இதரப் பகுதி மக்களுக்காகவும் ஆற்றும் பொதுப்பணிகளுடன் சட்டப் பேரவையில் ஆற்றும் பணி தான் சார்ந்துள்ள கட்சிக்கும், தன் தொகுதி மக்களுக்கும், நாட்டுக்கும் மேலும் வலிவை யும் பொலிவையும் ஊட்டுவதாகும். தன்னைத் தேர்ந்தெடுத்து அனுப்பிய பல்லாயிரக்கணக்கான பொது மக்களின் நம்பிக்கையையும், மதி நுட்பத் தினையும் வெளிப்படுத்தும் ஓர் உரைகல் போலாகும். நான் ஆளுங்கட்சியிலே இருந்த போதும்சரி, எதிர்க் கட்சியான போதும்சரி எனது தொகுதி மக்களுக் காகவும், தமிழக மக்களுக்காகவும் சட்டப் பேரவை யில் எனக்குப் பேச வாய்ப்புக்கொடுத்த நேரங் களில் எல்லாம் என் பணியைச் செம்மையாகச் செய்திருக்கிறேன் என்பதில் எனக்கு மனநிறைவு இருக்கிறது.

வேறு இடங்களில் பேசுகின்ற பேச்சுக்கும், சட்டப்பேரவையில் பேசுகின்ற பேச்சுக்கும் நிரம்ப வேறுபாடு உண்டு. சட்டப்பேரவையில் பேசுகின்ற பேச்சுக்கள் அனைத்தும் எழுத்து வடிவில் பதிவு செய்யப்படுவதாகும். பல்வேறுபட்ட கட்சியைச் சேர்ந்த முதிர்ந்த அரசியல்வாதிகள், நிர்வாகிகள், நிருபர்கள், பார்வையாளர்கள் ஆகியோர் முன்னிலை யில் பேசப்படும் பேச்சு ஆதலால் வார்த்தைகளை அளந்து நிதானமாகவும், புள்ளி விபரங்களுடனும்

உண்மையான கருத்தாகவும்விவேகத்துடனும்பேச வேண்டியுள்ளது. குறுக்கீடுகளும், வாக்குவாதங் களும் எழும்போது சமயோசிதத் தன்மையுடன் பதில் அளித்தால்தான் எதிரிகளின் தாக்குதல்களி லிருந்து மீள முடியும். அப்படிப்பட்ட சூழ்நிலையில் நான் பேசிய சில பேச்சுக்களை மட்டும் படிக்கின்ற வாய்ப்பினை உங்களுக்கு உருவாக்கிக் கொடுத்திருக் றேன்.

சட்டப்பேரவையில் கூற வேண்டிய கருத்துக் களை கூறவேண்டியமுறைப்படி கூறினால்தான் அழுத் தம் ஏற்படும். ஆளுவோருக்கு உள்ள நெஞ்சு அழுத்தத்தைப்போக்க முடியும். என்னைப்பொறுத்த வரையில் கூற வேண்டியவைகளை, கூறவேண்டிய முறைப்படி, கூறவேண்டிய நேரத்தில் அழுத்த மாகக் கூறியிருக்கிறேன். ஆனால் கூறவேண்டிய செய்திகளை முழுவதும்கூறவிடாமல் இடையிடையே ஏற்பட்ட குறுக்கீடுகளையும், போதும் நேரமாகிறது சீக்கிரம் முடியுங்கள் என்கிற தடைச்சொற்களையும் சொல்லாரத்தின் வாயிலாக நீங்கள் ஏராளமாகக் காணலாம்.

நான் இங்கே தொகுத்தளித்துள்ள ஒவ்வொரு பேச்சும் பல பிரச்சனைகளை விளக்கிடும். பல உண் மைகளை உணர்த்தும். சிலருக்கு எரிச்சலை ஊட்டும். பலருக்கு ஏக்கப் பெருமூச்சு வரும். எண்ணற்றவர் களுக்குப் பெரு மகிழ்ச்சியை ஏற்படுத்தும். மாண்பு மிகு கருணாநிதி அவர்களின் ஆட்சி காலத்தில் நிர்வாகத்தில் ஏற்பட்ட முறைகேடான செயல் களையும், ஊழல்களையும், வேண்டியவர்களுக்கு

அளித்த சலுகைகளையும், மாற்றாந்தாய் மனப் பான்மையினையும், போலிக்கூற்றுக்களையும், கட்சி மாட்சரியங்களையும், அஞ்சாமல் எடுத்துக்கூறிப் பேசியுள்ளேன். எனக்கு இத்தகைய ஆற்றலையும், சக்தியையும், வாய்ப்பினையும் அளித்தவர் மரி யாதைக்குரிய புரட்சித்தலைவர் மக்கள் திலகம் எம். ஜி. ஆர். அவர்கள் தான். மாண்புமிகு கருணா நிதி அவர்களின் ஆட்சியில் ஏற்பட்ட ஊழல்களை யும், குறைபாடுகளையும் உலகுக்கு உணர்த்தியவர் புரட்சித்தலைவர் அவர்கள்தான். புரட்சித் தலைவர் அவர்களின் சொல்லுக்கும், கருத்துக்கும் வலிவு ஊட்டும் வகையில்தான் பல ஆதாரங்களுடன் பேசி யுள்ளேன் என்பதைச் சொல்லாரத்தின் மூலமாக நீங்கள் அறியலாம்.

அரசியல் உலகிற்கு என்னை அறிமுகப்படுத்தி ஏற்றம்பெறச் செய்தவர் அறிஞர் பெருந்தகை அண்ணா அவர்கள்தான். அரசியல் உலகில் என்னை ஆளாக்கி உயர்த்தியவர் மரியாதைக்குரிய புரட்சித் தலைவர் மக்கள் திலகம் எம். ஜி. ஆர். அவர்கள்தான். என் கடமையின் வாயிலாக உருவாகிய இந்த சொல்லாரத்தை மறைந்த மாமேதை அறிஞர் அண்ணா அவர்களின் கல்லறைக்கு காணிக்கை யாக்குகிறேன். அறிஞர் அண்ணா அவர்களின் உண்மையான அரசியல் வாரிசு மரியாதைக்குரிய புரட்சித்தலைவர் அவர்களுக்கு என் உண்மையான உழைப்பையும், அன்பையும், ஆதரவையும் காணிக் கையாகச் செலுத்துகிறேன்.

"சொல்லாரம்" உங்கள் கரங்களில் தவழும் வகையில் அரும்பாடுபட்டு உழைத்துச் சிறப்பான

முறையில் அச்சிட்டுத் தந்து உதவிய திருச்சி ஆனந்தா அச்சக உரிமையாளர் திருமிகு. பெ. இராதாகிருஷ்ணன் அவர்களுக்கும் இதர அச்சகப் பணியாளர்களுக்கும் எனது அன்பு கலந்த நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன். தவிர்க்க முடியாத காரணத்தால் சில இடங்களில் அச்சுப் பிழைகள் உள்ளன. அவைகளைத் திருத்திப் படித்துக் கொள்ளுமாறு வேண்டுகிறேன். மறு பதிப்பில் பிழையின்றி வெளியிட ஆவன செய்கிறேன்.

சொல்லாரத்தின் விலை சற்று அதிகம் எனத் தாங்கள் கருதலாம். சொல்லாரத்தை உருவாக்கு வதற்கு ஏற்பட்ட சிரமங்களுக்கும், அதில் இடம் பெற்றுள்ள கருத்துக்களுக்கும் விலை தகும் என்கிற மனநிறைவுடன் உங்களின் திருக்கரங்களில் தவழும் என நம்புகிறேன்.

சொல்லாரத்தை உருவாக்குவதற்கு உறுதுணை புரிந்த எனது அருமை நண்பர்களுக்கும் எனது அன்புகலந்த நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

குளித்தலை
23-1-76

தங்கள் அன்புள்ள.
பெ. சௌந்தரபாண்டியன்.

1973-74 ஆம் ஆண்டுக்கான செலவு குறித்த முதல்துணை நிதிநிலை அறிக்கைமீது சட்டப்பேரவையில் 27—11—73 ஆம் தேதியன்று நடைபெற்ற பொது விவாதத்தில்.

## திரு. பெ. சௌந்தரபாண்டியன் ஆற்றிய உரை

* திரு. பெ. சௌந்தரபாண்டியன் : தலைவர் அவர்களே, மரியாதைக்குரிய முதல் அமைச்சர் அவர்கள் 1973-74-ம் ஆண்டுக்குரிய முதல் துணை மதிப்பீட்டை கொண்டுவந் திருப்பதின் பேரில் சில கருத்துக்களை நான் ஏற்றுக் கொண்டாலும், நடைமுறையில் வருகிற நேரத்தில் எவ்வளவு குறைபாடுகள் இருக்கின்றன என்பதை சுட்டிக்காட்டுவது சாலப் பொருத்தமாக இருக்கும் என்று நான் கருதுகிறேன். தமிழகத்தில் படித்தவர் களுக்கு வேலை இல்லை, பாமர மக்களுக்கு வேலை இல்லை, மருத்துவம் படித்தவர்களுக்கு வேலை இல்லை, பொறிஇயலில் தேர்ச்சி பெற்றவர்களுக்கு வேலை இல்லை, வேலை இல்லை என்று, வேலை தேடித்தரும் அலுவலகத்திற்குச் சென்லுரும் அங்கேயும் ''வேலை காலி இல்லை'' என்கிற நிலைமை இருக் கிறதே தவிர, வேலை உண்டு என்பது நாட்டில் எள்ளளவும் இல்லை என்பதை நாம் அனைவரும் நன்ருக அறிவோம். இந்தக் குறைபாட்டை போக்கத்தான் மாநில அரசும், மத்திய அரசும் நிதி ஒதுக்கி ஏராளமான பேர்களுக்கு வேலை தருகின்ற நல்ல சூழ் நிலையை உருவாக்கியிருக்கிறது. இதை நடைமுறைக்குக் கொண்டுவருகிற நேரத்தில், நிர்வாகத்தில் இருக்கிற அத்துணை பேர்களும் அதை ஒழுங்காகச் செய்கிருர்களா, என்ன ஊழல்கள் நடக் கின்றன என்பதை சுட்டிக்காட்டுவது சாலப் பொருத்தமாக இருக்கும் என்று நான் கருதுகிறேன். இந்த அறிக்கையில் 10,200 ஆசிரியர்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்க திட்ட மிடப்பட்டு, அதை நிறைவேற்றிஞெதாகக் குறிப்பிட

பட்டுள்ளது. நான் இங்கே சுட்டிக்காட்ட விரும்புவது ஊராட்சி ஒன்றியங்களில் ஆசிரியர்கள் நியமிக்கப்படுகின்ற நேரத்தில் எத்தனை ஊழல்கள் நடந்திருக்கின்றன என்பதற்கு சான்று ஒன்றை நான் சுட்டிக்காட்ட கடமைப்பட்டிருக்கிறேன் நேற்றுகூட இந்த மாமன்றத்தில் பேசுகின்ற நேரத்தில் உள்ளாட்சித் துறை அமைச்சர் அவர்கள் ஊராட்சி ஒன்றியங்களில் ஊழல் இல்லை என்றார். நான் சொல்கிறேன், ஊழலுக்கு ஆணிவேரே ஊராட்சி ஒன்றியம் தான். ஆதாரம் என்ன என்று கேட்பார்கள். நிறையக் காட்டுகிறேன். அண்மையில் நடந்த ஆசிரியர் தேர்வில் ஒரு ஆசிரியர் தெர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்றால் ரூ. 1,000, ரூ 2,000, ரூ 3,000 என்று ஏலம் போட்ட காட்சியை நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆதாரம் வேண்டுமென்றாலும் நான் கொடுக்கத் தயாராக இருக்கிறேன்.

**மாண்புமிகு திரு. அ. பெ. தர்மலிங்கம்:** தலைவர் அவர்களே, இதுவரையிலே கனம் அங்கத்தினர் அவர்கள் அப்படிப்பட்ட புகார் எதுவும் கொடுக்கவில்லை. ஒரு சமயம் ஒரு புகார் கொடுக்கப்பட்டது, அவர் தொகுதியைப் பற்றி, கிருஷ்ணராயபுரம் தொகுதியைப்பற்றி நான் அதைப் பற்றி பரிசீலனை செய்த நேரத்தில் சட்டமன்ற உறுப்பினர் பெயரையும் எழுதி, இரண்டு பேர்களுக்கு வேலை வாங்கித் தருவதாகச் சொன்னார் என்றும், சட்டமன்ற உறுப்பினர் போலீஸ் அதிகாரியிடம் சென்று தன்னைப் பற்றி இழிவாகச் சொல்கிறார் என்று சொல்லி, போலீஸ் அதிகாரி இரண்டு பேர்களையும் அடித்து தகராறு செய்த சம்பவம் தான். அதைப்பற்றித் தான் புகார் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதுபற்றி பரிசீலனைச் செய்யச் சொல்லி சம்பந்தப்பட்ட அதிகாரிக்கு அனுப்பியிருக்கிறேன். ஒரே ஊழல்; ஊழலுக்குப் பிறப்பிடமே ஊராட்சி ஒன்றியம் என்று அவர் சொல்வது சரியில்லை என்பதையும் நான் தெரிவித்துக் கொள்கிறேன்

திரு. பெ. சௌந்தரபாண்டியன் : இது வரையில் நான் எந்த ஊராட்சி ஒன்றியத்திலும் ஆசிரியர் வேலைக்காக அணுகியது கிடையாது என்பதை ஆணித்தரமாக சுட்டிக் காட்ட விரும்புகிறேன். ஏதோ நான் குற்றம் சொல்கிறேன் என்பதற்காக திருப்பிச் சொல்லுவது எவ்வளவு தரம் உள்ளது என்பது இந்த மாமன்றத்திலிருப்பவர்களுக்கு நன்ருகப் புரியும். அண்மையில் நடைபெற்ற குளித்தலை ஊராட்சி ஒன்றியத்தில் ஆசிரியர்களைத் தேர்ந்தெடுக்கும் பொழுது ஒருவருக்கு ரூ 500-க்கு மேல் கொடுத்தால் வேலைவாய்ப்பு, ரூ. 1,000 கொடுத்தால் ரூ. 500 அடிபடுகிறது, ரூ 1,000 எடுபடுகிறது, ரூ 1,000ஐ விட்டு ரூ. 2,000 கொடுத்தால் ரூ. 1,000 அடிபடுகிறது, ரூ. 2,000 எடுபடுகிறது இது நடந்து கொண்டிருக்கிறது என்பதை நிச்சயமாக நான் திட்டவட்டமாகச் சொல்ல முடியும்.

* மாண்புமிகு திரு. சி பா. ஆதித்தனுர் : ஒரு சட்டமன்ற உறுப்பினருக்கு 'தகுதியா இல்லையா' என்று சொல்ல தகுதி இல்லை என்று யாரும் சொல்லவில்லை. ஆனால் கனம் சட்டமன்ற உறுப்பினர் யாரோ லஞ்சம் கொடுத்ததை நேரில் பார்த்தேன் என்று சொன்னுர்.

If so, it is the duty of a member, when he sees a crime committed before his very eyes, to report it to the Police for taking immediate action.

அதைச் செய்தாரா ?

திரு. பெ. சௌந்தரபாண்டியன் : நான் என்ன பேசினேன் என்பதைக்கூட மாண்புமிகு வேளாண்மைத் துறை அமைச்சரவர்கள் புரிந்துகொள்ளவில்லை. நான் அமைச்சரவர்களின் தகுதியைப் பற்றிச் சொல்லவில்லை அவர் இருக்கும் இடம் தகுதியா என்பதைப்பற்றி நான் சொன்னேன். ஆகவே, இதை......

மாண்புமிகு திரு. சி. பா. ஆதித்தனர் : நீங்கள் சொன்னீர்கள். நீங்கள் சொன்னதை ரிக்கார்டில் பார்த்தால் தெரியும். ஆயிரம் ரூபாய் லஞ்சம் கொடுத்ததை நானே பார்த்தேன் என்று சொன்னீர்கள் அது தகுதியா இல்லையா என்பதை யாரும் பேசவில்லை. நான் சொல்வது

"When a crime is committed before the eyes of any member of the public, it is not only his duty, but the bounden duty, the basic duty of any public man, more so of a member of the Assembly, to report it immediately to the Police for taking action.

ஆயிரம் ரூபாய் லஞ்சம் கொடுத்ததை நேரில் பார்த்தேன் என்று சொன்னீர்கள். அப்படி சொல்ல வில்லை என்றால் 'இல்லை' என்று சொல்லிவிடுங்கள். பொதுச் சேவையில் ஈடுபட்டிருப்பவர்கள் தவறு நடப்பதை பார்க்கும்போது, உடனடியாக போலீசுக்குத் தெரியப்படுத்தியிருந்தால், அவர்கள் நடவடிக்கை எடுத்திருப்பார்கள். அதைச் செய்தீர்களா?

திரு. பெ: சௌந்தரபாண்டியன்: திரும்பத் திரும்ப நான் என்ன சொன்னேன் என்பதை மாண்புமிகு வேளாண்மைத் துறை அமைச்சரவர்கள் புரிந்துகொள்ளாமல் பேசுகிறார்கள். அதற்காக உள்ளபடியே நான் அனுதாபப்படுகிறேன்.

மாண்புமிகு திரு. சி. பா. ஆதித்தனர்: யாரும் அனுதாபப் படவேண்டாம். புரியாமல் பேசுகிறேன் என்கிறார்கள். யார் புரியாமல் பேசுகிறார்கள் ?

மாண்புமிகு டாக்டர் இரா. நெடுஞ்செழியன்: 500 ரூபாய், 1,000 என்று நீங்கள் சொன்னீர்கள். அதைத்தான் அமைச்சரவர்கள் சொல்கிறார்கள். நானும் கவனித்துக் கொண்டிருந்தேன். பணம் கொடுத்ததைப் பார்த்தேன் என்கிறீர்கள். பார்த்தீர்கள் என்றால் ஏன் தகவல் கொடுக்க வில்லை என்றுதான் அமைச்சரவர்கள் கேட்டார்கள். நீங்கள்

பார்த்தீர்களா இல்லையா என்பதுதான் இப்போதைய கேள்வி. பார்த்தேன் என்று சொல்லுங்கள்; இல்லை என்றால் இல்லை என்று சொல்லுங்கள்.

**திரு. பெ. சௌந்தரபாண்டியன்:** 500 ரூபாய், 1,000 ரூபாய் என்று ரேட் ஏறிக்கொண்டு போனது எனக்குத் தெரியும். அதற்கான ஆதாரம் வேண்டுமென்றால் இங்கே கொண்டுவந்து காட்டத் தயாராக இருக்கிறேன். அதைத் தான் நான் சொன்னேன். பணம் கேட்டார்கள், இன்னார் முன்னிலையில் கொடுத்தேன் என்று யாரும் சொல்ல மாட்டார்கள். இதைப் புரிந்துகொள்ள வேண்டும். ஆகவேதான் இப்படிப்பட்ட குறைபாடுகள் அடிக்கடி ஏற்படுகின்றன என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேனே அல்லாமல் வேறல்ல.

இப்போது என்ன செய்கிறார்கள் என்றால் ஊராட்சி ஒன்றியத்திலே ஒரு குழுவைப் போட்டிருக்கிறார்கள். அவர்கள் ஆசிரியர்களை நியமிக்கின்றார்கள். இதில் முறை கேடுகள் இருக்கின்றன இப்படிப்பட்ட முறைகேடான செயல்களால ஆசிரியர்களை நியமனம் செய்வது சரியல்ல. எப்படி டாக்டர்களில் தேர்ச்சிபெற்றவர்களை பதிவு செய்து, சீனியாரிட்டிப்படி வேலை வாய்ப்பு அளிக்கப்படுகிறதோ அதைப்போன்று ஒவ்வொரு ஆண்டிலும் தேர்ச்சிபெற்ற வர்கள் எத்தனைபேர் என்கிற புள்ளி விபரங்களைச் சேகரித்து அவர்களை வேலைத் தேடித்தரும் அலுவலகத்தில் பதிவு செய்து, அதிலிருந்து சீனியாரிட்டிப்படி தேர்ந்தெடுத்து ஆசிரியர்களாக நியமிக்க வேண்டும் அப்படிச் செய்தால் லஞ்சம், ஊழல் இல்லாமல் தடுக்கலாம். அரசாங்கம் அதற்கு தக்க நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக ஓய்வூதியத்தைப் பற்றி குறிப்பிடுவது நல்லது என்று கருதுகிறேன். இன்று நாட்டில் எத்தனையோ பேர் வேலையிலிருந்து ஓய்வுபெற்று, 5 ஆண்டு, 10 ஆண்டு

காலமாகியும் முறைப்படி அவர்களுக்குக் கிடைக்க வேண்டிய ஓய்வூதியம், சேமநல வைப்பு நிதி ஆகியவை கிடைக்கவில்லை. இதர வசதிகளும் கிடைக்காமல் மிகவும் சிரமப்பட்டுக் கொண்டிருக்கிருர்கள். இதற்கு ஒரு சான்ருக குளித்தலை ஊராட்சி ஒன்றியத்தைப்பற்றி குறிப்பிட விரும்புகிறேன். அங்கே 5 ஆண்டுகளுக்கு முன்னுல் ஆசிரியர்களாகப் பணியாற்றி, ஓய்வுபெற்ற பல பேர் களுக்கு இன்னும் ஓய்வூதியம் வழங்கவில்லை. இதர சலுகைகளும் அளிக்கப்படவில்லை. ஊராட்சி ஒன்றியத் திலே கேட்டால் எங்களுக்கு ஒன்றும் இதில் பொறுப்பு இல்லை, அரசாங்கத்திலேதான் கேட்கவேண்டும் என்கிருர் கள். மேல் மட்டத்தில் இருப்பவர்களுக்கு மனு செய்தால் பதில் இல்லை. வேலையிலிருந்து ஓய்வுபெற்று பல ஆண்டு கள் ஆகிவிட்டபடியால், தங்கள் குடும்பத்தைக் காப்பாற்ற வேறு வருவாய் இல்லாமல் மிகவும் கஷ்டப்படுகிருர்கள். அவர்கள் விஷயத்தில் அனுதாபம் காட்டி, விரைவில் ஓய்வூதியம் வழங்க ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இந்த அறிக்கையிலே இன்னென்றும் இருக்கிறது. அதாவது இளைஞர் அணி. இந்த இளைஞர் அணியில் 2,600 தொண்டர்களைச் சேர்த்துக்கொள்ள அரசு அனுமதித்துள்ளது இதற்கு ஏறத்தாழ 88 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதனுடைய நோக்கம் என்னவென்ருல், படித்துவிட்டு வேலையற்றிருப்பவர் களுக்கு வேலை வாய்ப்பளித்து அவர்களுடைய தொண் டினைப் பயன்படுத்துவதாகும். இந்தத் திட்டத்தின்கீழ் எங்கே இருந்து ஆட்களை எடுக்கிருர்கள் என்பதுதான் கேள்விக் குறியாக இருக்கிறது. எத்தனையோ மாண வர்கள் படித்து வேலையற்றிருப்பவர்கள ஒவ்வொரு மாவட்டத்திலும் வேலை தேடித்தரும் அலுவலகத்தில் பதிவு செய்திருக்கிருர்கள். ஆனுல் இந்த இளைஞர் அணிக்கு தேர்ந்தெடுக்கப்படுகின்ற தொண்டர்களிடம் தனியாக மனுவை வரவழைத்து அங்கே இருக்கிற மக்கள்

தொடர்பு அதிகாரியும், இன்னும் மற்றவர்களும் தேர்ந்தெடுக்கிறார்கள். அவர்கள் தேர்ந்தெடுக்கின்ற தொண்டர்கள் யார் என்பதை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். யார், யார் சிபாரிசு செய்கிறார்கள், எந்த மாணவன் யாரால் அனுப்பப்படுகிறான், யாருடைய சிபாரிசில் வருகிறான் என்று பார்த்து, அவர்கள் தேர்ந்தெடுக்கிறார்கள். வேலைவாய்ப்புத் தேடித்தரும் அலுவலகத்தில் பதிவு செய்திருக்கிற வேலையற்ற படித்த மாணவர்களிலிருந்து ஏன் இளைஞர் அணிக்கு ஆட்களைத் தேர்ந்தெடுக்கக்கூடாது என்று நான் கேட்க விரும்புகிறேன்.

மக்கள் தொடர்பு அதிகாரி யாரால் நியமிக்கப்படுகிறார்? இந்த அரசுக்கு தலைமை தாங்குகிற முதல்வருக்கு யார் யார் தேவை என்று தோன்றுகிறதோ, யார் யார் வரவேண்டுமென்று நினைக்கிறாரோ அவர்களைப் பார்த்து மக்கள் தொடர்பு அதிகாரியாக நியமிக்கிறார். ஆகவே, இளைஞர் அணியில் சேர்க்கப்படுபவர்கள் இந்த அரசுக்கும், ஆளுங்கட்சிக்கும் தேவைப்படுபவர்கள் என்பதை நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். ஆகவே, இதை இளைஞர் அணி என்று சொல்வதை விட கலைஞர் அணி என்று சொல்வது மிக மிகப் பொருத்தமாக இருக்கும். (மணியடிக்கப்பட்டது) எங்களுடைய கட்சியின் சார்பில் நான் ஒருவன் தான் பேசுகிறேன். ஏற்கெனவே குறுக்கீடுகளால் எனக்கு கொடுத்த நேரம் குறைந்து விட்டது. ஆகவே, எனக்கு கொஞ்சம் அதிகமாக நேரம் ஒதுக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

**மாண்புமிகு பேரவைத் தலைவர்:** சரியாக 11 மணிக்கு நீங்கள் முடித்துவிடுங்கள்.

**திரு. பெ. சௌந்தரபாண்டியன்:** நான் ஒருவன் தான் எங்கள் கட்சியின் சார்பில் பேசுவதால் இன்னும் இரண்டு நிமிடங்களாவது கொடுங்கள்.

இந்த மாமன்றத்தில் நான் இன்னொன்றையும் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். இந்த முதல் துணை மதிப்பீட்டில் சக்தி பைப்ஸ் நிறுவனத்திற்கு ஏறத்தாழ 23 லட்சம் ரூபாய் கடனாக கொடுக்கப்பட்டிருக்கிறது. எனக்கு கிடைத்த தகவல்படி இன்றுவரை கொடுக்கப்பட்ட கடன்தொகை ஏறத்தாழ 45 லட்சம் ரூபாய். இதிலே வேறுபாடு இருந்தால் அல்லது தொகையில் மாறுபாடு இருந்தால் முதலமைச்சரவர்கள் பதில் சொல்லும்போது தக்க விளக்கம் அளிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். சக்தி பைப்ஸ் நிறுவனம் யாருடையது, எப்போது துவக்கப்பட்டது, இப்போது எந்த நிலையில் இருந்து வருகிறது என்பதை இந்த நாடும் நாமும் நன்ருக அறிவோம். இதுவரையில் அந்த கம்பெனிக்கு ஏற்பட்டு உள்ள மொத்த நஷ்டம் 297,58,000 ரூபாய். இந்த ஆண்டு மட்டும்—1973-ம் ஆண்டு சக்தி பைப்ஸ் நிறுவனத் திற்கு ஏற்பட்ட நஷ்டம் 63,77;000 ரூபாய். கம்பெனி தன்னுடைய வாழ்வை, வாழ்க்கைத் தரத்தை, உற்பத்தித் திறனை உயர்த்த முடியாமல் இறக்கின்ற தருவாயில் எந்த ஒரு நிறுவனம் இருந்து கொண்டிருக்கிறதோ, அந்த நிறுவனத்திற்கு இந்த நாட்டு மக்களுடைய வரிப்பணத திலிருந்து ஏறத்தாழ 45 லட்சம் ரூபாய் கொடுத்திருக்கிருர் கள். இது முறைதானு என்பதை இந்த நாட்டு மக்கள் கேட்டுக் கொண்டிருக்கிருர்கள். அதற்கு முதலமைச்சர வர்கள் பதில் சொல்லக் கடமைப்பட்டிருக்கிருர். ஆகவே தெளிவாக்க வேண்டுகிறேன்.

இன்னொன்றையும் கேட்க விரும்புகிறேன். நம்முடைய துணை மதிப்பீட்டில் மக்கள் தொடர்பு அதிகாரி களுக்கு என்று ஏராளமாக பணம் ஒதுக்கப்பட்டிருப்பதைப் பார்க்கிருேம். இந்த அதிகாரிகள் தேவைதானு என்பது ஒரு கேள்விக்குறியாக இருக்கிறது. நம்முடைய ஒப்பற்றத் தலைவர் பேரறிஞர் அண்ணு அவர்கள் இதே மாமன்றத்தில் மக்கள் தொடர்பு அதிகாரிகளாக இருந்தாலும் அல்லது விளம்பர அதிகாரிகளாக இருந்தாலும் அவர்களை மேலும்

போட்டு, அரசாங்கத்தின் பணத்தை, இந்த நாட்டு மக்களின் வரிப்பணத்தை நான் வீணாக்க விரும்பவில்லை, இந்த நாட்டு மக்களின் வரிப்பணத்தை சம்பளமாகத் தர விரும்பவில்லை என்று இங்கேயும், பொது மேடைகளிலும் எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள் என்பதை நாம் மறந்து விடக் கூடாது. ஆகவே இதுபோன்ற காரியங்களுக்கு நாம் செலவிடுவதைவிட நாட்டின் ஆக்கப் பணிகளுக்குச் செலவிடுவதே சாலப் பொருத்தம் என்பதை விரும்பி வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன்.

இன்னொன்றைப் பார்க்கிறோம். சென்னை போலோ குதிரை வீரர் சங்கத்திற்கும், குதிரை ஓட்டுநர் சங்கத்திற்கும் ஏறத்தாழ 1 லட்சம் ரூபாயை இந்த அரசாங்கம் கொடுத்திருக்கிறது. குதிரை சங்கத்தில், குதிரை ஓட்டுநர் சங்கத்தில் எந்த ஏழை பயிற்சி பெறுகிறான்? அங்கே பயிற்சி பெறுகிற அத்தனைபேர்களும் முத்தையா செட்டியார் பிள்ளையைப் போன்ற பெரிய பணக்கார குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்தான் பெரும் பெரும் பணக்காரர்கள்தான் அந்தச் சங்கத்தின் உறுப்பினர்களாக இருக்கிறார்கள். எந்த ஏழையும் அங்கே உறுப்பினராக இருப்பதாக நான் அறியேன். இதுபோன்று பணம் அளிக்கப்படுவது வீண்என நான் சுட்டிக்காட்டுவது பொருத்தம் என்று நினைக்கிறேன்.

மேலும் இந்த மதிப்பீட்டில் கட்டிடம் கட்டுவதற்கும், வீட்டு வசதியைப் பெருக்குவதற்கும் ஏராளமான தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதில் நாம் கவனம் செலுத்த வேண்டியது—லோயர் இன்கம் க்ரூப்புக்காக வீடுகள் கட்ட முதல் தவணையாக கடன் வழங்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது, மூன்றாவது தவணைகள் வழங்கப்படாத நிலையில் இன்றைக்கு அவர்களின் நிலை பரிதாபகரமாக இருக்கிற காட்சியை நாம் பார்க்கிறோம். இவர்களுக்கு எல்லாம் உடனடியாக இரண்டாவது, மூன்றாவது தவணைக் கடனை அளிக்க அரசு உடனடியாகப் பணம் ஒதுக்கவேண்டும் என்பதை நான் விரும்பி வேண்டி கேட்டுக்கொள்கிறேன். அடுத்து... (மணி அடிக்கப்பட்டது)

**மாண்புமிகு முதலமைச்சர் மு. கருணாநிதி அவர்கள் திரு. பெ. சௌந்தரபாண்டியன் எம்.எல்.ஏ. ஒருவருக்கு எழுதாத கடிதத்தை எழுதியதாக சட்டப்பேரவையில் படித்தது குறித்து 28–11–73ஆம் தேதியன்று முதலமைச்சர் மீது ஓர் உரிமைப் பிரச்சினையை எழுப்பியபோது நடைபெற்ற விவாதம்.**

**மாண்புமிகு பேரவைத் தலைவர்** : மாண்புமிகு உறுப்பினர் திரு. சௌந்தரபாண்டியன் அவர்கள் ஒரு உரிமைப் பிரச்சினையைக் கொண்டுவந்திருக்கிறார்கள். அந்த உரிமைப் பிரச்சினையை இங்கே எழுப்புமாறு கேட்டுக்கொள்கிறேன்.

**திரு. பெ. சௌந்தரபாண்டியன்** : தலைவர் அவர்களே, நேற்று இந்த அவையில் . . .

**மாண்புமிகு பேரவைத் தலைவர்** : அதை முதலில் படித்து விடுங்கள்.

**திரு: பெ. சௌந்தரபாண்டியன்** : தலைவர் அவர்களே, ''தமிழ்நாடு சட்டப் பேரவையின் விதி 184-ன் கீழ் மாண்புமிகு கருணாநிதி அவர்கள் மீது ஓர் உரிமைப் பிரச்சினையைக் கொண்டுவர விரும்புகிறேன்.

27—11—1973-ம் நாளன்று 1973-74-ம் ஆண்டு முதல் துணை மதிப்பீட்டின் மீது நடைபெற்ற விவாதத்திற்குப் பதில் அளிக்கும்போது மாண்புமிகு முதல் அமைச்சர் நான் ஒரு கடிதத்தை 22—12—1968-ஆம் தேதியன்று ஒருவருக்கு எழுதியதாக அவையில் படித்துக் காட்டினார். அந்தக் கடிதம் என்னால் எழுதப்பட்டது அல்ல அதில் குறிப்பிட்டுள்ள வாசகங்களில் முரண்பாடுகள் உள்ளன. என்னால் எழுதப்படாத ஒரு கடிதத்தை நான் எழுதியதாக கூறி அவையிலும், பொதுமக்கள் மத்தியிலும் என்மீது களங்கம் கற்பிக்கவேண்டும் என்று திட்டமிட்டு செய்த செயலாகும். வேண்டுமென்றே அவையின் கவனத்தை

திசை திருப்பச் செய்யப்பட்ட காரியமாகும். என்னுடைய உரிமையையும், கௌரவத்தையும் பாதிக்கக் கூடியதாக உள்ளது அவையின் உரிமை பறிக்கப் பட்டதாகவும் இருக்கிறது.

ஆகவே, இந்த உரிமைப் பிரச்சினையை அவர்மீது கொண்டுவர அனுமதி அளிக்குமாறு வேண்டுகிறேன்.''

தலைவர் அவர்களே, இந்தப் பிரச்னையை நான் எழுப்புகின்ற நேரத்தில், இதிலே என்ன என்ன முரண்பாடுகள் இருக்கின்றன என்பதை இந்த அவைக்கும் இந்த நாட்டுக்கும் அறிவிக்கவேண்டியது பொறுப்புள்ள ஒரு சட்டப் பேரவை.........

மாண்புமிகு பேரவைத் தலைவர்: இந்தச் செய்தி தவிர, வேறு புது செய்திகள் சொல்லக் கூடாது.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: புதிய செய்திகள் அல்ல. என்ன, என்ன முரண்பாடுகள் இருக்கின்றன என்பதை நான் தெளிவாக்கக் கடமைப்பட்டிருக்கிறேன். கடிதத்தின் முதல் வரியிலேயே, 'தங்கள் கடிதம் கிடைத்தது விஷயம் அறிந்தேன்,' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. என்னுடைய பழக்கம்—விவரம் அறிந்தேன் என்றுதான் எழுதுவேன். விஷயம் அறிந்தேன் என்று வட சொல்லைப் பயன்படுத்தவே மாட்டேன். இன்னொன்றையும் சேர்த்திருக்கிறார்கள், 'கார் நிதியும் கொண்டுவர வேண்டும்' என்று நான் எழுதியதாக. இந்த இடத்தில் இன்னொன்றைக் கவனிக்கவேண்டும். பேரறிஞர் அண்ணா அவர்கள் இருந்த காலத்தில் நடந்தது என்று மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள் என்னுடைய கார் நிதிப் பிரச்சினையே அண்ணா அவர்கள் இறந்தபிறகு, 1969-ல் சட்டமன்ற பட்ஜெட் கூட்டம் முடிந்த பிறகு, நான் புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். அவர்களிடம் தேதி வாங்கி, 25—5—1969-ம் தேதி அன்று, குளித்தலையில் ஒரு சிறப்புக் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்தேன். சிறப்புக் கூட்டம்

ஏற்பாடு செய்து, அந்த நிதி உதவி விழாவை பரிசளிப்பு விழாவாக மாற்றினேன். அன்றைக்கு மாண்புமிகு அரிசன நல இலாகா அமைச்சர் திருமதி சத்தியவாணிமுத்து அவர்கள் தலைமை தாங்கினார்கள். அதே போல், உள்ளாட்சித் துறை அமைச்சர் அன்று அமைச்சராக இல்லை—அப்பொழுது மாவட்டச் செயலாளராக இருந்தார். அவரும் அந்த நிகழ்ச்சிக்கு வந்திருந்தார். அண்ணா அவர்கள் இறந்த பிறகு, மே மாதம் ஒன்றும் தேதிக்கு மேல்தான் இந்த வசூல் செய்யப்பட்டதே தவிர, 1968-ம் ஆண்டு அல்ல. இதற்கு ஆணித்தரமான ஆதாரம் ஏராளம் வைத்திருக்கிறேன்.

உங்களுடைய அரசாங்க குறிப்பேட்டை எடுத்துப் பாருங்கள் 22—12—1968, 28—12—1968 இந்த இடைப்பட்ட நாளிலோ, அல்லது டிசம்பர் மாதத்திலோ எந்த டைரக்டர் பதவி காலியாக இருந்தது என்பதற்கு எனக்கு ஆதாரம் தரவேண்டும்.

அதோடு மட்டுமல்லாமல், 'இப்படிக்கு, தங்கள் அன்புள்ள,' என்று அவர் குறிப்பிட்ட கடிதத்தில் உள்ளது. 'இப்படிக்கு' என்பதைப் போடும் பழக்கமே எனக்குக் கிடையாது. 'தங்கள் அன்புள்ள' என்று போடுவதுதான் என்னுடைய வழக்கம்.

என்னுடைய தகப்பனார் பெயர் பெரியசாமி. இந்த அவையில், ஒதுக்கப்பட்டிருக்கிற எனது இருக்கையில் பெ. சௌந்தரபாண்டியன் என்றுதான் இருக்கிறது. ஆனால், கையெழுத்தில் பி. சௌந்தரபாண்டியன் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது என்பதைத் தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன். என்னுடைய கையெழுத்திற்குப் பின்னால், எம்.எல்.ஏ. என்று போடும் பழக்கம் எனக்குக் கிடையாது. ஆனால், இந்தக் கையெழுத்திற்குப் பின்னால், எம்.எல்.ஏ. என்று போடப்பட்டிருக்கிறது. ஆகவே, இதில் ஏகப்பட்ட முரண்பாடுகள் இருக்கின்றன. 'ஜோ. மு.

விஸ்வநாதன், உன்னியூர்' என்று கூறுகிருர்கள். ஆனுல், 'ஜோ' எதைக் குறிக்கிறது? அவருடைய பாட்டனுர் பெயரா? அல்லது வேறு ஏதாவது பெயரா? ஆகவே, அதற்கான தகவலை நான் வைத்திருக்கிறேன். நான் தெளிவாக, பின்னுலே, நிச்சயமாக, இந்த ஜோ யார், அந்த மு. யார் என்பதையும்பற்றி விளக்கம் அளிக்கத் தயாராக இருக்கிறேன் என்பதையும் இந்த அவைக்குத் தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன்.

ஆகவே, பேரவைத் தலைவர் அவர்களே, நம்முடைய முதலமைச்சர் அவர்கள், நேற்று நான் இந்த அவையில் நடந்த விவாதத்தில் என்ன என்ன ஆதாரங்களைச் சுட்டிக் காட்டி ஊழல்களையும், சக்தி பைப்ஸ் நிறுவனம் பற்றி கூறியதையும், மாண்புமிகு பேரவைத் தலைவர் அவர்கள், மாணவர்களுக்கு நான்தான் அனுமதி சீட்டைக் கொடுத் தேன் என்ற விவரத்தை அளித்த பிறகு, என்மீது இருக் கிற ஆத்திரம் காரணமாக, பொதுமக்கள் மத்தியிலும், இந்த அவையிலும் களங்கத்தை உண்டாக்கவேண்டு மென்ற காரணத்தாலேதான் தவருன தகவல் (குறுக்கீடு) ...தவருன தகவல் கொடுத்து, அவையின் கவனத்தை திசை திருப்பவும், ஒரு பொறுப்புள்ள சட்டமன்ற உறுப்பி னர்மீது களங்கம் கற்பிக்கவும், இந்த கடிதத்தைப் படித் திருக்கிருர். ஆகவே, உண்மையிலேயே ஒரு உறுப்பினரின் கௌரவத்தையும், உரிமையையும் பாதிக்கின்ற காரணத் தால், அதில் ஒரு உரிமைப்பிரச்சினை இருக்கிறது என்பதை நான் தெரிவித்துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன்.

*(முற்பகல் 10-00)*

Thiru K. T. K. THANGAMANI: Mr. Speaker, Sir, I do not want to argue The hon. Member has questioned the veracity of the letter. The letter may be shown to the hon. member. Now the hon Member says that the lette was not written by him. In fairness, the letter may be shown to the hon Member. He must be allowed to peruse that letter.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: நீங்கள் உட்காருங்கள், முதலமைச்சர் அவர்கள் பதில் சொல்கிறார்கள், அதைப் பற்றிப் பிறகு பார்க்கலாம்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: தலைவர் அவர்களே மாண்புமிகு உறுப்பினர் கொண்டுவந்திருக்கின்ற உரிமைப் பிரச்னை அவர் நேற்றைய தினம் ஒத்துக்கொண்ட விஷயங்களுக்கு முரண்பாடாக இருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: நேற்றைய தினம் நான் அதை ஒத்துக்கொள்ளவேயில்லை.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் பேசியதற்குப் பிறகு நீங்கள் பேசுங்கள். இப்பொழுது அவர்கள் பேசட்டும். நீங்கள் உட்காருங்கள்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: நேற்றைய தினம் அ. தி. மு. க உறுப்பினர் மாணவர்களுக்கு அனுமதிச் சீட்டில் கையெழுத்துப் போட்டார் என்ற காரணத்திற்காக அதற்குப் பிறகு வேண்டுமென்றே சௌந்தரபாண்டியன்மீது, ஒரு கடிதத்தைக் காட்டி, பழி சுமத்தினேன் என்று அவர்கள் குறிப்பிட்டார்கள். நேற்றைய தினம் காலையிலே அது நடைபெற்றதற்குப் பிறகு 1968-ஆம் ஆண்டு தபால் முத்திரை கிடைத்து அப்படித் தயாரிக்கப் படுவது என்பது சுலபமான காரியமல்ல என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். அந்தக் கடிதத்திலே 1968-ஆம் ஆண்டு தபால் முத்திரை குத்தப்பட்டு இருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். அவர்கள் பெ. சௌந்தரபாண்டியன் என்றுதான் கையெழுத்துப் போடுவேன், பி. சௌந்தரபாண்டியன் என்று கையெழுத்துப் போட மாட்டேன் என்று சொன்னார்கள். நான் நேற்றைய தினம் அந்தக் கடிதத்தைப் படிக்கும்பொழுது சௌந்தரபாண்டியன் என்றுதான் சொன்னேன், அவைக் குறிப்புகளிலும் அப்படித்தான் இருக்கிறது. ஒருவேளை இப்படிப்

பட்ட சிக்கல்கள் வரும் என்பதற்காகவே அவர்கள் 'பெ' என்று போடாமல் 'பி' என்று போட்டிருக்கலாம், அது அவருடைய தந்திரமாக இருந்திருக்கலாம். நான் சௌந்தரபாண்டியன் எம்.எல்.ஏ. என்று சொன்னதற்குப் பிறகு 'பெ' என்று இருக்கிறதா அல்லது 'பி' என்று ஆங்கிலத்தில் எழுத்து இருக்கிறதா என்று சொல்லாமல் இருக்கும் பொழுது அவர்கள் எப்படி 'பி' சௌந்தரபாண்டியன் என்று எழுதியிருக்கிறது—அவர்கள் கடிதம் எழுதவில்லையென்று சொல்லுகிறபொழுது—'பி' என்று எழுதியிருக்கிறது என்று எப்படி அவர்களுக்குத் தெரிந்திருக்க முடியும்? அவைக் குறிப்புகளிலே 'சௌந்தரபாண்டியன், எம்.எல் ஏ..' என்றுதான் இருக்கிறது, நானும் அவ்வாறு தான் குறிப்பிட்டேன்.

நேற்று அவர்கள் சொன்னது, குளித்தலை உறுப்பினருக்கு ஒரு கார் வாங்கிக்கொடுக்க ஏற்பாடு செய்வதைப் போல அவருக்கும் கார் வாங்கிக்கொடுப்பதற்காக ஏற்பாடு செய்யப்பட்டு ஒரு ஆண்டு இழுக்கப்பட்டது என்று சொன்னார்கள். இப்பொழுது 1969:ஆம் ஆண்டிலேதான் கார் பரிசளிக்கப்பட்டது என்று சொன்னார்கள். ஒரு ஆண்டுக் காலம் இழுக்கப்பட்டதாக அவர்களே நேற்றைய தினம் சொல்லியிருக்கிறார்கள். 1969–ஆம் ஆண்டிலே கார் பரிசளிப்பு விழா நடத்த வேண்டுமென்றால் 1968-ஆம் ஆண்டிலே அந்த விழாவிற்கான ஏற்பாடுகள் நடைபெற்றிருக்கும் என்று ஆகிறது. 1968-ஆம் ஆண்டிலேகூட டிசம்பர்த் திங்களிலேதான் கடிதம் எழுதப்பட்டு இருக்கிறது.

நேற்றைய தினம் நான் அந்தக் கடிதத்தைப் படித்த பொழுது விஸ்வநாதன் என்ற பெயரைச் சொன்னவுடனேயே அவர்கள் எழுந்து யார் அந்த விஸ்வநாதன்? அந்த விஸ்வநாதன் யார் தெரியுமா? என்று கேட்டு அவரைப்பற்றிய விவரங்களையெல்லாம் கூறியிருக்கிறார், இதிலிருந்தே அந்த விஸ்வநாதனுக்கும் அவருக்கும் உள்ள தொடர்பு நன்றாக விளங்குகிறது. பேசிவிட்டு அவர்கள்

முடிவாக இந்தக் கடிதத்தை அதோடு இணைப்பது எந்த விதத்திலே பொருந்தும் என்று கேட்டார்கள். ஆனால் நேற்றைய தினம் அந்தக் கடிதத்திலே உள்ள விவரங்கள் ஒத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன. விஸ்வநாதன் யார் என்பதையும் அவருக்கும் கார் நிதிக்கும் தொடர்பு இருக்கிறது, அதற்காக எழுதப்பட்டிருக்கிறது என்பதையும் நேற்றைய தினம் அவர்கள் ஒத்துக்கொண்டு இன்றைய தினம் முதலமைச்சர் தவறான தகவலைத் தந்திருக்கிறார் என்று அவர் சொல்வது சரியல்ல என்று சொல்லி இதிலே உரிமைப் பிரச்னைக்கு இடம் இல்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: தலைவர் அவர்களே, முதலமைச்சர் அவர்கள் அந்தக் கடிதத்தில் நான் குறிப்பிட்ட எந்த முரண்பாட்டையும் மறுக்கவில்லை. எந்த ஒரு சட்டமன்ற உறுப்பினராக இருந்தாலும், விவரம் தெரியாத யாராக இருந்தாலும் தன் சொந்த அப்பன் பெயரைத் தவறாகப் போடமாட்டார். 'பி' என்று போட்டு இருப்பதை முதலமைச்சர் ஒத்துக்கொண்டார்கள். என்னுடைய தகப்பனார் பெயர் பெரியசாமிதான். நான் ஆங்கிலத்திலே 'பி' என்று போடுகிற பழக்கம் இல்லை. பெரியசாமிக்கும், தமிழிலே 'பி' க்கும் என்ன சம்பந்தம்? எப்படிப் பொருத்தமாகும்? ஆகவே என்னுடைய கையெழுத்து அல்ல என்பதற்கு நல்ல சான்றாகும்.

கார் நிதி ஒரு ஆண்டு இழுக்கப்பட்டது என்று சொன்னார்கள். உள்ளாட்சித் துறை அமைச்சர் அவர்களையும் கேட்டு, திரு. வி. போ. சாமிநாதன் அவர்களையும் கேட்டு, முதலமைச்சர் அவர்களையும் கேட்டு இருக்கிறோம், அத்தனை பேர்களும் முடியுங்கள் என்று சொன்னார்கள். அந்த நிகழ்ச்சி மே மாதம், அதாவது 25—5—1969 ஆம் தேதி தான் நடந்ததே தவிர, 1968-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் எந்த கார் நிதி நிகழ்ச்சியும் நடக்கவில்லை, நானும் கலந்து கொள்ளவில்லை, அந்தக் குழுவும் செயல்படவில்லை என்

பதை இந்த நேரத்திலே நான் தெரிவித்துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன்.

இதனுல் என்னுடைய நல்ல பெயருக்கும், நேர்மைக்கும், கௌரவத்திற்கும் தமிழகத்திலே களங்கம் ஏற்பட்டிருக்கிறது என்பதால் இதிலே உரிமைப் பிரச்னை இருக்கிற காரணத்தினுலே இதை உரிமைக் குழுவிற்கு அனுப்ப வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இதிலே என்மீது தவறு இருந்தால் எந்தத் தண்டனையையும் நான் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறேன். ஆனுல் முதலமைச்சர் அவர்களும் அந்தத் தண்டனைக்குத் தயாராக இருக்க வேண்டுமென்று தெரிவித்துக்கொள்கிறேன்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணுநிதி: தலைவர் அவர்களே, ஒரு ஆண்டுக்காலம் இழுக்கப்பட்டது என்று நான் சொல்லவில்லை, அவர்களே தான் சொல்லியிருக்கிருர்கள். அவர்களுடைய வாக்கு மூலமாக அவர்களே நேற்றைய தினம் சொல்லியிருக்கிருர்கள். 1968-ஆம் ஆண்டிலே நடந்தது என்று நான் சொல்லவில்லை, அவரே சொல்லியிருக்கிருர். விஸ்வநாதன் கடிதத்தை ஏன் அதோடு இணைக்கிறீர்கள் என்று கேட்டார். நேற்றைய தினம் அப்படிக் கேட்டுவிட்டு இன்று மறுக்கிருர். இவர் தி.மு.க விலிருந்து சென்று, அண்ணு தி.மு.க.-விலிருந்து தி.மு.க.-வுக்கு வருவதாக அறிக்கைவிட்டார். அதற்குப் பிறகு நான்கு நாட்கள் கழித்து நிருபர்கள் எல்லாம் என்னைச் சந்தித்துச் சேர்த்துக் கொள்ளப் போகிறீர்களா என்றுகேட்டபொழுது பரிசீலிக்கப்படுகிறது என்று சொன்னேன். பல பேர்கள் தி.மு.க.வுக்கு வந்தால் உடனடியாகச் சேர்த்துக் கொள்ளப்பட்டாலும் சௌந்தரபாண்டியனைச் சேர்த்துக் கொள்வதிலே இடைவெளி இருந்ததற்குக் காரணம் இந்தக் கடிதத்தைப் பற்றிய காரணம்தான்.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: இதன்மீது என்னுடைய தீர்ப்பை நான் நாளைக்குத் தெரிவிக்கிறேன்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: பாயின்ட் ஆப் ஆர்டர், தலைவர் அவர்களே, முதலமைச்சர் அவர்கள் ஏதோ வேறு ஒரு சமயத்தில் நான் கடிதம் எழுதிக் கொடுத்ததாகச் சொல்லியிருக்கிறார்கள். நான்கு நாட்களுக்குப் பிறகு நிருபர்களைச் சந்தித்துப் பேசியதாகச் சொன்னார்கள். அந்தக் கடிதத்தை எதிர்க்கட்சித் தலைவர்களிடத்திலோ அல்லது நிருபர்களிடத்திலோ காட்டவேண்டும். அதிலேயும் பி. சௌந்தரபாண்டியன் என்றுதான் இருந்ததா? அவர்கள் முரண்பட்ட தகவலைச் சபைக்குத் தெரிவித்தார்கள், இப்படி கோயபல்ஸ் மாதிரி ஒன்றையே மீண்டும் சொல்லிவிடுவதால் உண்மை ஆகிவிடாது. முதலமைச்சர் அவர்கள் அதை நிருபிக்க வேண்டும், இதைப்பற்றி அறிவிக்கவேண்டிய அதிகாரம் பேரவைத் தலைவருக்கு இருக்கிறது. ஒரு சட்ட மன்ற உறுப்பினர் ஒரு கட்சியிலிருந்து இன்னொரு கட்சிக்குப்போய் இருக்கிறார் என்பதைப்பற்றி அறிவிக்கவேண்டியது பேரவைத் தலைவர் பொறுப்பு ஆகும். நான் அண்ணா தி.மு.க -வுக்கு வந்ததற்குப் பிறகு வேறு எந்தக் கட்சியிலே இருக்கிறவர்களுக்கும் எந்தவிதமான குறிப்போ கடிதமோ எழுதவில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆகவே, இந்த அவையின் கவனத்தைத் திருப்பவும், மேலும் என் மீது களங்கம் கற்பிக்கவும் மாண்புமிகு முதலமைச்சர் முயற்சிப்பது அவருடைய பதவிக்கு அழகல்ல என்பதை நான் தெரிவித்துக் கொள்கிறேன். இது உண்மையிலே என்னுடைய உரிமையைப் பாதிப்பதாகும். என் மீது களங்கம் ஏற்படுத்த அப்படிப் பேசுவது முறைகேடான செயல், எனவே, இதை உரிமைக் குழுவிற்கு அனுப்ப வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். (சிரிப்பு) உங்களைப் பார்த்து நாடே சிரிக்கிறது.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: இந்த உரிமைப் பிரச்னையின் மீது என்னுடைய தீர்ப்பைப் பிறகு தெரிவிக்கிறேன்.

வேறு யாரும் இந்தப் பிரச்சினையில் குறுக்கிட்டுப் பேச வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன்.

திரு. கே. டி. கே. தங்கமணி: Sir, this is a privilege matter. We would like to see that letter.........

மாண்புமிகு பேரவைத் தலைவர்: அந்தக் கடிதத்தை வாங்கிக்கொள்கிறேன்.

THIRU K. T. K. THANGAMANI : Sir, I would like to know the procedure to be followed in regard to this matter. Yesterday the hon. Member made the speech and how did the Hon. Chief Minister get a copy of that speech? Also, that speech has to be corrected. Whenever we ask for a copy of our speeches, they are given after six days. Now the Hon. Chief Minister has read out a portion of his speech and how did he get a copy of that speech which is not a corrected one? Now the hon. Member is questioning the letter itself We want protection from you. Otherwise, suddenly some letter will be flung at us and it would be stated that we have written such a letter and such a thing has come from no less a person than the Hon. Chief Minister. I submit that that letter must be shown to him and to us also. Otherwise, there is no protection for us. There was also an occasion when it was mentioned in a letter that a sum of Rs. 4,000 was received by Thiru Suppu. So, if any Member has got any grievance, suddenly a letter would be produced. If this is the method to be adopted, then there would be no protection to us. So, I again submit that that letter should be shown to us.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: நேற்றைய தினம் அந்தக் கடிதத்தைப் பொறுத்த அளவிற்கு மாண்புமிகு சௌந்தரபாண்டியன், அவர்கள்மீது சொல்லப்பட்டிருக்கிற குற்றச்சாட்டிற்கு விளக்கம் கூறியிருக்கிறார்கள்.

அது மாத்திரமல்ல அந்தக் கார் நிதி எப்படி வந்தது என்று கூறியிருக்கிறார்கள். அது மாத்திரமல்ல அந்தக் கடிதத்தை இதோடு இணைத்தது எந்தவிதத்திலே பொருந்தும் என்று கேட்டு இருக்கிறார்கள். நேற்றைய தினம் அந்தக் கடிதத்தைப் படித்த பிறகு அந்தக் கடிதத்தில் உள்ள கருத்துக்களை மறுக்கவில்லை என்பதை நான் மாண்புமிகு தலைவரவர்களே தங்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

*திரு. பெ. சௌந்தரபாண்டியன்:* நான் விளக்கம் கொடுக்கிறேன். தலைவர் அவர்களே, நேற்றைய தினம் இதற்கு விளக்கம் கொடுக்கலாம் என்றுதான் இருந்தேன். நான் விளக்கம் சொல்லி மறுக்க இருந்த நேரத்தில் தலைவரவர்கள் 1 மணி ஆகிறது துணை மதிப்பீட்டின் மீது விவாதத்தைச் சுருக்கமாக முடித்துக்கொள்ள வேண்டுமென்று சொன்னதால் உங்களுக்கு மரியாதை தருகின்ற முறையில், அந்த மரபின்படி சுருக்கமாக முடித்துக் கொண்டேன். தலைவரவர்கள் உட்காருங்கள் என்று சொன்ன காரணத்தால் அதை நான் மறுக்கவில்லையே தவிர மற்றபடி மறுத்துப்பேச வேண்டுமென்றுதான் இருந்தேன்.

*திரு. நா. வீராசாமி:* தலைவரவர்களே, முதலிலேயே மறுத்து இருக்க வேண்டும்.

*திரு. பெ. சௌந்தரபாண்டியன்:* * *

**மாண்புமிகு பேரவைத் தலைவர்:** மாண்புமிகு உறுப்பினர் சௌந்தரபாண்டியன்.

(*திரு. சௌந்தரபாண்டியனும், இன்னும் பல மாண்புமிகு உறுப்பினர்களும் எழுந்து நின்றார்கள்.*)

**மாண்புமிகு பேரவைத் தலைவர்:** நான் எழுந்து நிற்கும்போது மற்றவர்கள் உட்கார்ந்துவிட வேண்டும். நான் உட்கார்ந்த பிறகு உங்களுடைய "பாயிண்ட் ஆப் [illegible]" [illegible]

* * * *

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: தலைவரவர்களே, நேற்றிலிருந்து எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டு தான் இருக்கிறேன்.

* * * *

திருமதி ஜோதி வெங்கடாசலம்:

* * * ஒன்றை மாத்திரம் மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் கிளாரிபை செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். மாண்புமிகு உறுப்பினர் அவர்கள் மதிப்பிற்குரிய முதலமைச்சர் அவர்களிடத்திலும், மற்றவர்களிடத்திலும் கூறி இதற்கு உத்தரவு பெற்றதாகக் கூறினார்கள். அதனுடைய விவரத்தைக் கொஞ்சம் தெரிவிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அப்படித் தெரிவித்தால் நன்றாக இருக்கும்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: அப்படி யாரும் உத்தரவு போடவில்லை.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: (எழுந்து நிற்கும் மாண்புமிகு உறுப்பினர் டாக்டர் ஹாண்டே அவர்களைப் பார்த்து) மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் விளக்கம் கொடுத்திருக்கிறார்கள்.

DR. H. V. HANDE: Sir, on a point of order. I would like to know whether it is in order for the Hon. Chief Minister to quote.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: 'நோ, நோ' முதலமைச்சரவர்கள்.........

---

* மாண்புமிகு பேரவைத் தலைவரின் ஆணைக்கிணங்க அகற்றப்பட்டது.

டாக்டர் எச். வி. ஹாண்டே: தலைவரவர்களே, சபையின் நடவடிக்கைகள் ஒழுங்காக நடக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். திரு. கே. டி. கே. தங்கமணி அவர்கள் சொன்ன மாதிரியாக—

Whatever the hon. Member, Thiru Soundarapandian was alleged to have spoken yesterday, has been mentioned in the House and his speech has not been corrected by him. When the hon. Member got up and was about to explain that that was not his letter at all, he was not allowed to do so. If anybody has committed any mistake, I do not want to protect him.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: பாயின்ட் ஆப் ஆர்டர் சம்பந்தப்பட்ட விஷயங்களை மட்டும் நீங்கள் பேச வேண்டும் நடந்த நிகழ்ச்சி ........

டாக்டர் எச். வி. ஹாண்டே: என்னுடைய கட்சியைச் சேர்ந்த உறுப்பினர் ஒருவர் குற்றம் சுமத்தப்பட்டிருக்கிறார். அதைப்பற்றி நான் ஒரு ஒழுங்குப் பிரச்னை கொண்டுவர அதைப்பற்றிப் பேசக் கூடாதா ?

மாண்புமிகு பேரவைத் தலைவர் : நான் சொல்கிறேன் நீங்கள் கேளுங்கள்.

விவாதத்தின்பொழுது கூறப்பட்ட கருத்து சரியா இல்லையா என்பது பாயின்ட் ஆப் ஆர்டர் இல்லை.

டாக்டர் எச். வி. ஹாண்டே : நான் சொல்வதைக் கொஞ்சம் பொறுமையோடு கேட்டால் யாருக்கும் மனக் கஷ்டம் இருக்காது. இரண்டு நிமிஷம் பொறுமையோடு கேட்டால் இது பொருத்தமான பாயின்ட் ஆஃப் ஆர்டர் என்பதைப் புரிந்து கொள்வீர்கள் என்று நினைக்கிறேன். பார்லிமெண்டரி முறைப்படி, சட்டசபை முறைப்படி ஒரு அங்கத்தினர் எழுந்து, I stoutly refute it என்னுடைய கடிதம் இல்லை என்று சொன்னார்கள். அப்படிச் சொல்லிக்

காரணம் காட்டுகிறார்கள். அதில் எழுதப்பட்டிருப்பதில் இன்ஷியல் 'பி'யா, 'பெ'யா என்று எப்படித் தெரியும் என்று கேட்கிறார்கள். அது நவமணி பத்திரிகையில் வந்திருக்கிறது. முதலமைச்சரவர்கள் படித்த கடிதத்தின் காப்பி அவர்களிடம் எப்படி வந்தது என்று தெரியவில்லை. நவமணி பத்திரிகையில் வந்திருக்கிறது. அது எப்படி வந்தது? அதில் வந்ததற்குப் பிறகுதான், சௌந்தர பாண்டியன் ஃபோன் செய்த பிறகுதான் நவமணியைப் பார்த்தேன். அந்தப் பத்திரிகையைப் பார்த்த பிறகு தான் இனிஷியலைப் பற்றிச் சொன்னார்கள்.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: அவர்கள் பேசியதற்கு விளக்கம் தேவையில்லை. இது பாயிண்ட் ஆஃப் ஆர்டர் அல்ல. முதலமைச்சரவர்களின் பேச்சிற்குப் பதில் சொல்கிறீர்கள். அது பாயிண்ட் ஆஃப் ஆர்டர் அல்ல.

டாக்டர் எச். வி. ஹாண்டே: நான் உங்களைக் கேட்கிறேன். தாங்கள் சபையிலே தலைமை தாங்கும் நேரத்தில் உறுப்பினர்கள் எழுந்து stoutly refuting என் கடிதம் இல்லை என்று சொன்னதறகுப் பிறகும் மீண்டும் எந்தவிதமான பிரச்சினையும் இதில் இருக்கிறதா?

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: அதை வன்மையாக மறுத்தார் என்று கூறுவது தவறு. நேற்று அவர் மறுக்கவே இல்லை. நேற்றைய தினம் ஒத்துக்கொண்டு, விஸ்வநாதன் என்பவர் யார் என்பதுபோன்ற காரணங்களை விளக்கினாரே தவிர வேறல்ல. மேலும் அந்தக் கடிதத்தை இந்தப் பிரச்சினையோடு ஏன் இணைக்க வேண்டும் என்றும் கேட்டிருக்கிறார்கள். அதைத்தான் சொன்னேன்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: நான் நேற்று மறுக்கவில்லை என்று சொன்னார்கள். என்னைப் பேசவே விடவில்லை நீங்கள்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: நேற்று என்னுடைய நேரத்தை எடுத்துக்கொண்டு, நான் 20 நிமிஷங்கள் பேச வேண்டுமென்று கேட்ட நேரத்தை எடுத்துக்கொண்டு, நேற்று சௌந்தரபாண்டியனது கடிதத்தைப் படித்துக் காட்டிய பிறகு அவர்கள் நீண்ட நேரம் பேசியிருக்கிறார்கள். அவர்கள், விஸ்வநாதன் என்பவர் யார் என்பதைப் பற்றியும், கார் பரிசளிப்புப் பற்றியும் சொன்னார்கள். குளித்தலை கார் நிதியைப் பற்றியும் அவருடைய தொகுதியில் கார் நிதி திரட்டியது பற்றியும் விஸ்வநாதனைப் பற்றியும் சொல்லியிருக்கிறார்கள். அப்பொழுதெல்லாம் நான் கடிதம் எழுதவில்லை என்று அவர் மறுக்கவில்லை.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: இதன் மீதான தீர்ப்பைப் பிறகு தெரிவிக்கிறேன். அடுத்து 41-வது விதியின் கீழ்...

THIRUMATHI T. N. ANANDANAYAKI: On a point of Order, Sir. This is an important issue affecting the privilege of all hon Members.

திரு. நா. வீராசாமி: பாயிண்ட் ஆஃப் ஆர்டர், சார்.

* * *

மாண்புமிகு பேரவைத் தலைவர்: அவர்கள் பாயிண்ட் ஆஃப் ஆர்டர் முடியட்டும்.

திருமதி. த. ந. அனந்தநாயகி: நான் ஒழுங்குப் பிரச்னை எழுப்பியிருக்கிறேன். இது சாதாரணப் பிரச்னை அல்ல. இதில் எல்லா அங்கத்தினர்களும் கவனம் செலுத்தவேண்டும். நேற்று 1968-ஆம் ஆண்டிலே எழுதப்பட்ட கடிதம் என்று படித்திருக்கிறார்கள். அந்தக் கடிதத்தை எழுதிய காலத்தில் இதே கனம் அங்கத்தினர் அவர்கள் திராவிட முன்னேற்றக் கழக சட்டசபை அங்கத்தினராக இருந்தார்......

---

* மாண்புமிகு பேரவைத் தலைவரின் ஆணைக்கிணங்க அகற்றப்பட்டது.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: இது பாயின்ட் ஆஃப் ஆர்டரில் எப்படி வரும்?

திருமதி. த. ந. அனந்தநாயகி: உரிமைப்பிரச்னை மேலே சொல்கிறேன். 1968ஆம் ஆண்டில் எழுதப்பட்ட கடிதத்தைப்பற்றிச் சொல்கிறேன்.

It is an important point of Order, Sir. It raises an important question of privilege also. It affects all hon. Members and I therefore pleased that all hon. Members should be given a chance to speak.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: இதில் என்ன பாயின்ட் ஆஃப் ஆர்டர் இருக்கிறது?

திருமதி. த. ந. அனந்தநாயகி: Give us hearing நான் சொல்வதை நீங்கள் கேளுங்கள். பிறகு உங்களுடைய தீர்ப்பைக் கொடுங்கள். 1968-ஆம் ஆண்டில் எழுதப்பட்ட கடிதத்தை 1973ஆம் ஆண்டிலே கொண்டு வந்து படிக்கிறார்கள். 1971-லே அவரே திராவிட முன்னேற்றக் கழக சட்டசபை கட்சி அபேட்சகராக நிறுத்தப்பட்டிருக்கிறார். இந்தத் தகவல் இப்பொழுதுதான் கிடைத்தது என்று சொல்கிறார்களா? எப்பொழுது கிடைத்தது?

These things must be known.

அது தெளிவாக்கப்பட வேண்டும்?

So it raises a question of privilege.

எனவே இதை பிரிவிலெஜ் கமிட்டிக்கு அனுப்ப வேண்டும்.

Since the letter is denied by the hon, Member, the genuineness must be examined by a handwriting expert.

அவர்கள் வந்து பார்க்க வேண்டும்.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: இதில் பாயிண்ட் ஆஃப் ஆர்டர் இல்லை.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: கடிதம் எனக்கு அண்மையிலேதான் கிடைத்தது. வேறுசில முக்கியமானவர்களின் கடிதங்களும் இருக்கின்றன. அவைகளும் அவையிலே வைக்கப்படும்.

திருமதி த ந. அனந்தநாயகி: சட்டசபைக்குத் தாராளமாகக் கொண்டு வாருங்கள். எல்லா அங்கத்தினர்கள் எழுதியவைகளையும் கொண்டு வாருங்கள். எல்லாவற்றையும் படிக்கலாம். ஆனால் புதிர் மாதிரி [**] செய்யும் வேலையை வைத்துக் கொள்ளாதீர்கள்.

திரு. நா. வீராசாமி: தலைவரவர்களே, இன்றையதினம் சௌந்தரபாண்டியன் விவகாரத்தில் என்னுடைய பெயரும் வந்ததால் நான் இந்தப் பிரச்னையை எழுப்ப வேண்டியதற்காக மிகவும் வருத்தப்படுகிறேன்.

*  *  *  *

ஆகவே எனக்குப் பாதுகாப்பு வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

திரு. கே. கந்தசாமி: தலைவரவர்களே.........

மாண்புமிகு பேரவைத் தலைவர்: நீங்கள் உட்காருங்கள்.

THIRU K. KANDASAMI: Sir, you have allowed so many Members from that side. You must show that concession to me also.

மாண்புமிகு தலைவரவர்களே.........

மாண்புமிகு பேரவைத் தலைவர்: உரிமைப் பிரச்னைமீது அல்ல, பாயிண்ட் ஆஃப் ஆர்டர் என்ன என்று சொல்லுங்கள்.

திரு. கே. கந்தசாமி: பாயின்ட் ஆஃப் ஆர்டரில்தான் பேசுகிறேன். இன்றைக்கு சௌந்தரபாண்டியன் அவர்

கள் தன்னுடைய நிலையை விளக்க முயற்சித்தார்கள். அதில் நியாயம் இருக்கலாம் அல்லது வேறுவிதமாகவும் இருக்கலாம்.

* * * *

திரு. முனு ஆதி: தலைவரவர்களே.........

மாண்புமிகு பேரவைத் தலைவர்: உட்காருங்கள்.

திரு. முனு ஆதி: நான் பேச வேண்டும்.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: நீங்கள் நிற்பது எதற்காக? பாயின்ட் ஆஃப் ஆர்டரா?

திரு. முனு ஆதி: பாயின்ட் ஆஃப் ஆர்டர்.

* * *

மாண்புமிகு பேரவைத் தலைவர்: கையை அங்கே ஆட்டாதீர்கள்; இங்கே பார்த்துப் பேசுங்கள்.

திரு. முனு ஆதி: அவரைக் காட்டுகிறேன், உங்களைப் பார்க்கிறேன் இதென்ன வாத்தியார் — மாணவன் மாதிரியா? நான் உங்களைத் தான் பார்க்கிறேன், அவர்களைக் காட்டுகிறேன். அதைக் கூடக் காட்டக் கூடாது என்று சொன்னால் எப்படி? ஒன்று பேசவேண்டாமென்று சொல்லி விடுங்கள். அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்திற்குச் சந்தர்ப்பம் தர மாட்டோம் என்று சொல்லி விடுங்கள், உட்கார்ந்து விடுகிறோம்

* * *

திரு. குழ. செல்லையா: தலைவரவர்களே, ......

மாண்புமிகு பேரவைத் தலைவர்: நீங்கள் உட்காருங்கள். நான் முதலிலே சொல்லியதைப்போல இந்த அவையிலே உள்ள உறுப்பினர்கள் தாங்கள் பேசும் நேரம், கேள்வி

---

* மாண்புமிகு பேரவைத் தலைவரின் ஆணைக்கிணங்க அகற்றப்பட்டது.

கேட்கும் நேரம் அந்த நேரங்களில்தான் இருக்கையிலே இருக்க வேண்டுமென்று விதி முறைகள் தெளிவாகச் சொல்கின்றன. மற்ற நேரங்களில் ஒரு இடத்தைவிட்டு இன்னொரு இடத்தில் உட்காருவதில், மற்ற உறுப்பினர் களோடு கலந்து பேசுவதில் எந்தவிதமான தடையும் இல்லை. அப்படிப்பட்ட நிகழ்ச்சியை வைத்துக்கொண்டு [* *] என்று கூறுவது முறையற்றது. அப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் இந்த மன்றத்தில் எதுவும் நடைபெறவில்லை. நடைபெறாத நிகழ்ச்சியை நடைபெற்றதாகக் கூறுவது முறையற்றது. ஆகவே, அந்தக் குறிப்புகள் அவைக் குறிப்பிலிருந்து நீக்கப்படுகின்றன. (குறுக்கீடு) யார் கூறி யிருந்தாலும் சரி,

* * *

எல்லாமே அவைக்குறிப்பிலேயிருந்து நீக்கப்படு கின்றன. பத்திரிகைகளிலும் வெளியிட வேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இதன்மீதான தீர்ப்பைப் பிறகு கொடுக்கிறேன் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்



* மாண்புமிகு பேரவைத் தலைவரின் ஆணைக்கிணங்க அகற்றப்பட்டது.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:- .....

......டைரக்டர்பதவி வாங்கித்தருகிறேன். சென்னைக்குப் போக வழிச்செலவும் கார்நிதியும் கொடு என்று ஒருவருக்கு கடிதம் எழுதியது உண்டா? இல்லையா?

திரு. பெ. சௌந்தரபாண்டியன்:-

இதுவரை நான் எவருக்கும் அதுமாதிரிக் கடிதம் எழுதியது கிடையாது. அவர்கள் நிருபிக்கத் தயாரா?

(27—11—1973 சட்டப் பேரவை நிகழ்ச்சி பக்கம்-542)

"தாம் எழுதிய கடிதம் அன்று எனத் திரு. சௌந்தர பாண்டியன் அவர்கள் கூறுகிறார். அது அவர் எழுதியது அன்று என்பதை நானும் அறிந்தேன். இதை மாண்புமிகு முதல அமைச்சர் அவர்களும் ஏற்றுக்கொள்கிறார்"

(1—12—1973-ல் பேரவைத் தலைவர் மாண்புமிகு புலவர் கோவிந்தன் அவர்கள் அளித்த தீர்ப்பு. சட்டப்பேரவை நிகழ்ச்சி பக்கம்-330)

# 3

**1—12—1973-ஆம் தேதியன்று "நவமணி" நாளிதழ்மீதும் மறுபடியும் முதலமைச்சர் மு. கருணாநிதி மீதும் திரு. பெ. சௌந்தரபாண்டியன் அவர்கள் உரிமைப்பிரச்சினை கொண்டுவந்தபோது நடைபெற்ற விவாதம்.**

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: தமிழ் நாடு சட்டப் பேரவை விதி எண் 184-கீழ் 'நவமணி' செய்தித்தாளின்மீது ஓர் உரிமைப் பிரச்சினையைக் கொண்டுவர விரும்புகிறேன்.

27—11—1973 ஆம் நாளன்று நடைபெற்ற 1973-74 ஆம் ஆண்டிற்குரிய முதல் துணை மதிப்பீட்டின்மீது நான் பேசுகின்ற நேரத்தில் முதலமைச்சர் அவர்கள் குறுக்கிட்டு எதுவும் சொல்லவில்லை. நான் எனது பேச்சை முடித்து சுமார் 1 மணி 45 நிமிடங்கள் கழித்துத்தான் நான் எழுதாத கடிதம் ஒன்றை நான் எழுதியதாக அவையில் படித்தார். ஆனால் 27-11-1973 ஆம் தேதிய 'நவமணி' செய்தித்தாளில் முதல் பக்கம் இரண்டாம் பத்தியில் நான் பேசும்போது முதலமைச்சர் குறுக்கிட்டு கூறியதாகச் செய்தி வெளியிட்டுள்ளது. இது பேரவையில் நடந்த நடவடிக்கையை வேண்டுமென்றே, திட்டமிட்டு, உள் நோக்கத்துடன் திரித்து வெளியிடப்பட்டதாகும். இந்த அவையின் உரிமையைப் பாதிக்கக்கூடியதாகவும் உள்ளது.

பொதுமக்கள் மத்தியில் என் மீது களங்கம் கற்பிக்க வேண்டுமென்ற கெட்ட நோக்கத்துடன் பேரவையின் நடவடிக்கையை மாற்றி நான் விவாதத்தில் பேசும்போது இடையில் முதலமைச்சர் அவர்கள் குறுக்கிட்டு கூறியதாக உண்மைக்கு மாறாக செய்தி வெளியிட்டிருப்பது எனது உரிமையைப் பறிப்பதாக இருக்கிறது.

ஆகவே, இந்த உரிமைப் பிரச்சினையை 'நவமணி' செய்தி தாளின் மீது கொண்டுவர அனுமதி அளிக்குமாறு வேண்டுகிறேன்.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: அதுபோதும், உட்காருங்கள்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: நான் அதை விளக்க விரும்புகிறேன். தலைவர் அவர்களே, நான் பேசும்பொழுது முதலமைச்சர் எதுவும் குறுக்கிட்டுச் சொல்லவில்லை. மாண்புமிகு உள்ளாட்சித் துறை அமைச்சர் அவர்களும், மாண்புமிகு வேளாண்மைத் துறை அமைச்சர் அவர்களும் தான் குறுக்கிட்டுப் பேசினார்கள். முதலமைச்சர் அவர்கள் கூர்ந்து கேட்டுக்கொண்டிருந்தார்களே தவிர வேறு எதுவும் கூற இல்லையென்பது இந்த அவைக்கும் தெரியும், மற்றவர்களுக்கும் தெரியும். அப்படியிருக்க முதலமைச்சர் குறுக்கிட்டுப் பேசியதாக இந்த 'நவமணி' பத்திரிக்கை செய்தி வெளியிட்டிருக்கிறது. அது மட்டுமல்ல. நான் இந்த அவையிலே இரண்டு முறை, இதுவரை எவருக்கும் அது மாதிரி கடிதம் எழுதியது கிடையாது, அவர்கள் நிரு பிக்கத் தயாரா என்று கேட்டு இருக்கிறேன். மீண்டும் ஒரு முறை நான் கடிதம் எதுவும் அப்படி எழுதவில்லை. அவர்கள் நிரூபிக்கத் தயாரா என்று கேட்டிருக்கிறேன். இதெ 'நவமணி' இதழில் அவர்கள் படித்த கடிதத்தை யும் வெளியிட்டிருக்கிறார்கள்......

மாண்புமிகு பேரவைத் தலைவர்: மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் கடைசியிலே தான் விடையளிக்கும்பொழுது தான் பேசினார்கள், குறுக்கிட்டுப் பேசினார்கள் என்று வந்திருக்கிறது என்று வந்திருப்பதாகச் சொல்கிறார்களே, அதுவரைக்கும் பேசுங்கள்.

தாங்கள் உரிமைப் பிரச்னை எழுப்பும் நேரத்தில் கொடுத்துள்ள நோட்டீசிலே, முதலமைச்சரவர்கள் விடை யளிக்கும்பொழுது கூறினார்கள், ஆனால் நவமணி செய்தித் தாளில் நான் பேசும்போது முதலமைச்சர் குறுக்கிட்டு

கூறியதாகக் கூறியிருக்கிறது என்று அதைத்தான் சொல்லி யிருக்கிறீர்கள்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: நவமணி செய்தித்தாளின் மேல் கொடுத்த உரிமைப் பிரச்சினையை எழுப்பும் நேரத்தில் அதில் என்னென்ன சம்பந்தப்பட்டிருக்கிறது என்று சொல்வதற்கு உறுப்பினர்களுக்கு உரிமையிருக்கிறது என்றுதான் கருதுகிறேன்.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: நீங்கள் என்னிடம் நோட்டீஸ் கொடுத்தால் நான் பேப்பரைப் பார்ப்பதற்கு வாய்ப்பு கொடுக்க வேண்டுமல்லவா? (குறுக்கீடு) அதை இப்பொழுது பார்க்க முடியாது. இதில் என்ன குற்றச்சாட்டைக் கூறியிருக்கிறீர்களோ அதைப்பற்றித்தான் கூறலாம். அதை விட்டு வேறு விஷயங்களைச் சொல்வது சரியல்ல.

திரு பெ. சௌந்தரபாண்டியன்: அந்தக் கடிதம் 'போர்ஜரி' என்று தெரிந்தும்......

மாண்புமிகு பேரவைத் தலைவர்: கடிதத்தைப்பற்றிப் பேச்சு இல்லை. உங்களுடைய உரிமைப்பிரச்னை என்னவென்றால், முதலமைச்சரவர்கள் விடையளிக்கும் பொழுது கூறினார்கள், ஆனால் நவமணி செய்தித்தாளில் நான் பேசும் பொழுது குறுக்கிட்டுக் கூறியதாகக் கூறியிருக்கிறது என்று சொல்கிறீர்கள்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: தங்கள் அனுமதியின்பேரில் இதைக் கூறுவதற்கு அனுமதித்தால் கூறுகிறேன். இல்லையென்றால் வேறொரு உரிமைப் பிரச்னையைக் கொண்டு வருவதற்குத் தாங்கள் அனுமதி அளிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: இப்பொழுதுள்ள உரிமைப் பிரச்னை இந்த அளவோடுதான்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: தலைவரவர்களே, இந்தப் பேரவையில் 27—11—1973 ஆம் தேதி நான் பேசுகின்ற நேரத்தில், இளைஞர் அணிக்கு தேர்ந்தெடுக்கப்படும்போது சிபாரிசின் அடிப்படையிலேயே நடைபெறுகிறது என்று...

மாண்புமிகு பேரவைத் தலைவர்: அவர்கள் குறுக்கிடவில்லை. வேறு இரு அமைச்சர்கள்தான் குறுக்கிட்டார்கள், ஆனால் குறுக்கிடாததைக் குறுக்கிட்டதாகச் சொல்லியிருக்கிறது என்ற அந்த அளவோடு சொல்கிறீர்கள்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: நவமணி பத்திரிகையில் இந்த இடத்தில் குறுக்கிட்டார் என்று குறிப்பாகச் சொல்லி யிருக்கிறது. அதுதான் என்னுடைய குற்றச்சாட்டு. குற்றச்சாட்டுக்குரிய பகுதியைப் படிக்காமல் வேறு எதைச் சொல்வது? இளைஞர் அணிக்கு தேர்ந்தெடுக்கப்படும் போது சிபாரிசின் அடிப்படையிலேயே நடைபெறுகிறது என்று போட்டு விட்டு பிறகு சிறிய கொட்டை எழுத்துக் களில், 'முதல்வர் குறுக்கிட்டு......' என்று போட்டுவிட்டு பிறகு சிறிய எழுத்தில், 'அப்போது முதல் அமைச்சர் கருணாநிதி குறுக்கிட்டுக் கூறியதாவது:—நண்பர் சௌந்தர பாண்டியன்......'' என்று தொடங்குகிறது. நான் அந்தக் குறிப்பிட்ட பகுதியைத்தான் சுட்டிக் காட்டினேனே தவிர வேறு எதையும் அல்ல. ஆகவே, நான் பேசும்பொழுது முதலமைச்சரவர்கள் எவ்விதமான குறுக்கீடும் செய்ய வில்லை. ஆனால்நவமணி செய்தித்தாள் வேண்டுமென்றே, வெளி உலகத்தில் பார்ப்பவர்கள் என்னுடைய திறமை யின்மை என்பதாக அவர்கள் தெரிந்து கொள்ளவேண்டு மென்பதற்காக உள்நோக்கத்தோடு, முதலமைச்சருக்குத் தான் ஏதோ திறமையிருப்பதைப்போல உடனே குறுக் கிட்டுக் கூறினார் என்று பொருள்படும் அளவிற்குப் போட் டிருப்பதால் ஒரு அரசியல்வாதிக்கு எத்தெந்த அளவிற்குக் களங்கம் செய்யவேண்டுமோ அந்த அளவிற்கு நவமணி செய்தித்தாள் திரித்து வெளியிட்டிருக்கிறது. இந்தப்

பேரவையின் நிகழ்ச்சியை மாற்றி வெளியிட்டிருக்கிறது. ஆகவே, இது உரிமைப் பிரச்னைக்கு அனுப்பவேண்டிய முக்கியமான ஒன்றாகும் என்பதைப் பணிவோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: மாண்புமிகு உறுப்பினர் அவர்களின் அறிக்கையோடு தரப்பட்ட ''நவமணி'' செய்தித் தாளையும் சட்டப் பேரவை நடவடிக்கைக் குறிப்பையும் நான் பார்வையிட்டேன். ''நவமணி'' செய்தித் தாளில் எழுதியுள்ளபடி, மாண்புமிகு முதல்வர் அவர்கள், திரு. சௌந்தரபாண்டியன் அவர்கள் உரை நிகழ்த்தும் பொழுது குறுக்கிட்டு எதையும் கூறவில்லை, பண ஒதுக்கீடு விவாதத்திற்குப் பதில் அளிக்கும் பொழுதுதான் முதல்வர் அவர்கள், உறுப்பினர் திரு சௌந்தரபாண்டியன் அவர்களால் எழுதப்பட்டுள்ளதாகவுள்ள கடிதம் பற்றிக் குறிப்பிட்டார். எனவே, உறுப்பினர் திரு. சௌந்தரபாண்டியன் அவர்கள் பேசும்பொழுது குறுக்கிட்டு முதல்வர் அவர்கள் கூறியதாகச் செய்தித்தாளில் வெளியிட்டிருப்பது தவறு.

சட்ட மன்ற நடவடிக்கைகளை வேண்டுமென்றே திரித்து வெளியிடுதல் அவையின் உரிமையை மீறியதாகும் என்பதில் ஐயம் இல்லை. ஆயினும், அவ்வாறு தவறாக ''நவமணி'' செய்தித் தாளில் வெளியிட்டுள்ளது, வேண்டுமென்றே வெளியிட்டதாகக் கொள்ளுவதற்கில்லை. உறுப்பினர் அவர்கள் கூறியபடி, எந்தவித உள்நோக்கமும் கற்பிப்பதற்கு இடம் இல்லை என்றே கருதுகின்றேன். உறுப்பினர் மீது களங்கம் கற்பிக்கும் கெட்ட நோக்கத்துடன் இவ்வாறு பிரசுரிக்கப்பட்டிருக்கிறது என்றும் கொள்ளுவதற்கில்லை. எனவே, இதில் உரிமைப் பிரச்சினை ஏதுமில்லை என்று கருதுகிறேன்.

இருப்பினும், ''நவமணி'' செய்தித் தாளின் பொறுப்பாளர்களையும், மற்றும் இதர செய்தித் தாள்களையும் நான் கேட்டுக்கொள்வது, சட்ட மன்ற நடவடிக்கைகளை வெளி

யிருக்கும்பொழுது கவனத்துடன் வெளியிடுமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: அடுத்து, திரு. சௌந்தர பாண்டியன் அவர்கள், தான் ஒப்புக்கொள்ளாத ஒன்றை ஒப்புக்கொண்டதாக முதலமைச்சர் கூறினார் என்ற அளவில் ஒரு உரிமை பிரச்னையை எழுப்பியிருக்கிறார்கள். இந்த உரிமைப்பிரச்னை, முன்பு எழுப்பிய ஒரு உரிமைப்பிரச்னைக் குத் தீர்ப்பளித்த வகையிலே அடங்கிவிடுவதால் இந்த உரிமைப்பிரச்னைக்கு அனுமதி தர மறுக்கிறேன்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: தலைவரவர்களே, நம் முடைய 186-வது விதியில் தெளிவாகத் தெரிவிக்கப்பட் டிருக்கிறது ஒரு உறுப்பினர் உரிமைப்பிரச்னை எழுப்பும் நேரத்தில் அதற்கு முக்கியத்துவம் கொடுத்து சபை உடனே எடுத்துக் கொள்ளவேண்டுமென்று தெளிவாக இருக்கிறது. எப்படி உரிமைப்பிரச்னையில் வருகிறது என்று என்னுடைய கருத்தைக்கூடக் கூறுவதற்கு தாங்கள் அனுமதிக்கவில்லை என்றால்......

THIRU V. KRISHNAMOORTHY: The Hon. Speaker has already given his decision on the matter.

THIRU P. SOUNDARAPANDIAN: It is different matter.

THIRU V KRISHNAMOORTHY: It should not be raised; the Hon. Speaker has already given his decision.

THIRU P. SOUNDARAPANDIAN: It is entirely a different matter. It has no relation with this issue. தயவு செய்து படிக்கவாவது அனுமதிக்குமாறு கேட்டுக்கொள் கிறேன்.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: இது இரண்டும் ஒரே நிலை யில் தொடர்புடைய உரிமைப்பிரச்னைகள். ஆகவே, ஒரு உரிமைப்பிரச்னைக்குத் தீர்ப்பளித்த பிறகு இதற்குத் தீர்ப்

பளிக்க வேண்டியதில்லை என்று சொல்லியதற்குப் பிறகு மீண்டும் அதை எழுப்புவது முறையல்ல.

THIRU P. SOUNDARAPANDIAN: No. No. It is entirely a different matter and not the same thing. எந்த இடத்தில் நான் ஒத்துக்கொண்டேன்? நான் ஒத்துக் கொண்டதாக அவைக் குறிப்பிலே இருக்கிறதா?

மாண்புமிகு பேரவைத் தலைவர்: அதைப் பற்றி விரிவாகத் தீர்ப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: ஏராளமான ஆதாரங்கள் இருக்கின்றன.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: அதைப்பற்றி முடிவு தந்து விட்டபிறகு, அந்தக் கடிதம் உங்களால் எழுதப்படவில்லை என்று முடிவெடுத்தபிறகு அதைப்பற்றி விவாதம் தொடங்குவது முறையல்ல.



# 4

## 21—1—74 ஆம் தேதியன்று ஆளுநர் பேருரைக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தின் மீதான விவாதத்தில் திரு. பெ. சௌந்தரபாண்டியன் அவர்கள் ஆற்றிய உரை

* திரு: பெ. சௌந்தரபாண்டியன்: சட்டப் பேரவைத் தலைவர் அவர்களே, தமிழகத்தின் சீர்கேடுகளைப் போக்கவும், தமிழ்ச் சமுதாயத்தை முன்னேற்றவும், மூட நம்பிக்கைகளை ஒழிக்கவும் தன்னுடைய வாழ்நாள் முழுவதும் பாடுபட்ட தன்னிகரில்லாத் தலைவனுக்கு, தந்தை பெரியார் அவர்களின் மறைவிற்கு இரங்கல் செலுத்தியதற்காகப் பின்தங்கிய தாழ்த்தப்பட்ட மக்களின் சார்பாக ஆளுநர் அவர்களுக்கு எனது நன்றியை மனமாரத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆளுநர் அவர்களின் உரையில் ஏராளமான திட்டங்களையும், இந்த அரசாங்கத்தின் கொள்கைகளையும் தெளிவாகச் சொல்லியிருக்கிறார் நான் என்னுடைய உரையில் முதலாவதாக எடுத்துக் கொள்ள விரும்புவது, குடிநீர்த் திட்டத்தைப்பற்றி. நகரப் பகுதிக்கும், கிராமப் பகுதிகளுக்கும் குடிநீர்த் திட்டத்தை உருவாக்கி இந்த நாட்டு மக்களுக்குத் தண்ணீர் கிடைக்க வழிவகை செய்யப்பட்டிருக்கிறது என்று கூறப்பட்டிருக்கிறது. நாட்டு மக்களின் நா வரண்டால் நாடே வரண்டு விடும், அவர்களின் எதிர்கால வாழ்வு இருண்டுவிடும், பொருளாதாரம் சுருங்கி விடும் என்பது நம்முடைய சமூக பொருளாதாரக் கொள்கையாகும். இந்த அரசாங்கம் பொறுப்பேற்ற பிறகும், அதற்கு முன்பும் ஏறத்தாழ 72,600 கிணறுகள் தோண்டப்பட்டுள்ளன என்று கூறப்பட்டுள்ளது. அந்தக் கிணறுகள் எல்லாம் வெட்டி முடிக்கப்பட்டு விட்டனவா, அவைகளில் தண்ணீர் வந்து விட்டதா என்றால் இல்லை

என்பதற்கு ஏராளமான சான்றுகளை எடுத்துக் காட்ட முடியும். எனனுடைய தொகுதியில் கோணப்பராயன் குளம், வெள்ளியணை கிராமம், குளத்தூர் பாகநத்தம் பஞ்சாயத்துப் பகுதி ஆகிய இடங்களில் 1969 ஆம ஆண்டில் கிணறுகளைத் தோண்டினார்கள். ஆனால் இதுவரையிலும் தோண்டப்பட்ட அந்தக் கிணறுகள் அப்படியே இருக்கின்றனவே தவிர இன்னும் முடிக்கப்படவில்லை, அவைகளில் தண்ணீர் வரவில்லை. இப்படிப்பட்ட நிலைமை தமிழகத்தில் ஏராளமான இடங்களில் இருக்கின்றன என்பதை முதல்வரவர்களின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். விரைவில் நடவடிக்கை எடுத்து அவைகளெல்லாம் முடிக்கப்பட வேண்டுமென்று வேண்டிவிரும்பிக் கேட்டுக் கொள்கிறேன்.

குடிநீர்த் திட்டத்தைப் பொறுத்தவரையில் பேரூராட்சிகளுக்கு முக்கியத்துவம் அளிப்பதை நான் உள்ளபடியே வரவேற்கிறேன். இந்த நேரத்தில் ஒன்றை நான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். குளித்தலை பேரூராட்சியில் சுமார் 11 இலட்சம் ரூபாய் செலவில் ஒரு குடிநீர்த் திட்டத்தை உருவாக்கி நிறைவேற்றி 1973-ஆம் ஆண்டு மாண்புமிகு முதல்வரவர்கள் திறந்து வைத்திருக்கிறார்கள் அவசரம் அவசரமாகத் திறந்து வைத்தார்களே தவிர அதில் தண்ணீர் வருகிறதா என்றால் அங்கே தண்ணீர் வரவில்லை திட்டம் இன்னும் முற்றுப்பெறவில்லை. வீதிகளுக்கு பைப் கனெக்ஷன் கொடுக்கப்படவில்லை. இப்படி முற்றுப்பெறாத திட்டத்தை முதலமைச்சரவர்கள் திறந்து வைத்திருப்பது உள்ளபடியே வருந்தத் தக்கதாகும்.

இதேபோல் என்னுடைய தொகுதியில் சிவாயம் கிராமத்தில் இரும்பூதிப்பட்டியில் உள்ளாட்சித் துறை அமைச்சரவர்கள் ஒரு மேல்நிலை நீர்த் தேக்கத் தொட்டியைத்திறந்துவைத்திருக்கிறார்கள். மேல்நிலைத்தொட்டியில் குடத்திலே தூக்கிச் சென்று தண்ணீரை ஊற்றித் திறந்து வைத்திருக்கிறார்கள். ஆனால் மறுநாள் அங்கேயுள்ள

பெண்கள் பைப்பைத் திறந்தால் தண்ணீர் வரவில்லை. இப்படிப்பட்ட சூழ்நிலை தமிழகம் முழுவதும் ஏராளமாக இருக்கிறது. ஆகவே, தரப்பட்டிருக்கும் புள்ளிவிவரத்தில் எவ்வளவு தவறு இருக்கிறது என்பதற்காக இதைச் சுட்டிக் காட்டுகிறேன் இதுபோன்ற நிலைமைகளை மாற்ற தகுந்த நடவடிக்கைகளை எடுக்க வேண்டுமென்று விரும்பி வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன்.

தமிழகத்தின் தலையாய பிரச்னையாக இருக்கின்ற ஒரு பிரச்னை நீர்ப்பாசன பிரச்னையாகும். நீர்ப்பாசனத்திற்காக நாம் எவ்வளவு ஒதுக்கினாலும் தகும். இதேபோல் நம் முடைய நீர்ப்பாசனத் துறையில் இருக்கும் ஏரிகள் அத்தனையையும் சீர்படுத்த தமிழக அரசு திட்டம் தீட்டி இருக்கிறது என்று கவர்னர் உரையில் கூறப்பட்டிருக்கிறது. 27,000 ஏரி குளங்கள் பழங்காலம் முதற் கொண்டு இது வரையில் சீர்திருத்தப்படாமல் இருக்கின்றவைகளுக்காக ஐந்தாண்டுத் திட்டத்தில் சீர்படுத்த வழிவகை செய்யப் பட்டிருக்கிறது என்று கூறப்பட்டிருக்கிறது அந்த 27,000 ஏரி குளங்கள் யாருடைய பொறுப்பிலே இருக்கின்றன என்றால் ஊராட்சி ஒன்றியங்களின் பொறுப்பில் இருக் கின்றன. நான் பணிவோடு கேட்டுக்கொள்ள விரும்பு கிறேன், பொதுப்பணித் துறையில் அந்த 27,000 ஏரி குளங்களையும் ஒப்படையுங்கள். அப்பொழுதுதான் நம் முடைய பணி பூர்த்தியடையும். செய்யும் காரியம் நேர்மையாகவும், விரைவாகவும் நடைபெறும் என்று முதலமைச்சரவர்களுக்குத் தெரிவித்துக் கொண்டு விரை வில் இவைகளை ஊராட்சி ஒன்றியங்களிலிருந்து பொதுப் பணித் துறைக்கு மாற்ற வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்து, நம்முடைய மாநிலம் உணவுத் துறையில் நல்ல முன்னேற்றம் அடைந்திருக்கிறது, 1973-74-இல் ஏறத்தாழ 74 இலட்சம் டன் உணவு உற்பத்தி பெருக நாம் திட்டம் தீட்டி இப்பொழுது உரப் பற்றாக்குறை காரணமாக

சற்றுக் குறையக் கூடிய சூழ்நிலை இருக்கிறது என்று இந்த அறிக்கையில் பார்க்கிறோம். அதற்குத் தரப்படும் காரணம் பூச்சிக் கொல்லி மருந்து, உரம் நமக்குக் கிடைக்கவில்லை, ஆகவே, நம்முடைய புள்ளி விவரத்தை எட்ட முடியவில்லை என்று சொல்லப்படுகிறது.

உர வினியோகத்தில் ஏராளமான தவறுகளும், சேமிப்பு கிடங்குகளில் உரம் காணமற்போகும் சூழ்நிலையும் தமிழகத்தில் நிரம்ப இருக்கிறது. மதுரை மாவட்டத்தில் உரத்தைப் பொறுத்தவரையில் ஒரு பயங்கரமான மோசடி நடந்துள்ளது என்பதை இந்த மாமன்றத்தில் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். மதுரை மாவட்டத்தின் மொத்த விற்பனை கூட்டுறவு சப்ளை மற்றும் விற்பனை கிடங்கிலிருந்து சுமார் 1,16,000 ரூபாய் மதிப்புள்ள உர மூட்டைகள் காணப்படவில்லை என்றும் சுமார் 106 டன் யூரியாமோசடி செய்யப்பட்டிருக்கிறது என்றும் கூட்டுறவு இலாக்கா அதிகாரிகள் போலீசாருக்குப் புகார் செய்துள்ளதாகவும், எழுத்தர் ஒருவர் கைது செய்யப்பட்டுள்ளதாகவும் அறிகிறேன். ஆகவே, இப்படிப்பட்ட மோசடிகள் தமிழ் நாடு முழுவதும் நடந்து கொண்டிருக்கின்றன என்பதை கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

தென்னார்க்காடு மாவட்டத்தில் அரசாங்கக் கிடங்குகளில் சேமிக்கப்பட்டிருந்த நெல்மூட்டைகள் காணப்படவில்லை என்றும், திருச்சி மாவட்டத்தில் சப் ஜெயில் காம்பவுண்ட் அறையில் இருந்த சிமெண்ட் மூட்டைகள் காணப்படவில்லை என்றும், கோதுமை மூட்டைகள் காணப் படவில்லை என்றும் அடிக்கடி செய்திகளைக் கேட்கிறோம், இப்படி எங்கே பார்த்தாலும் அரசின் சொத்துக்கள் காணப் படவில்லை என்ற நிலைமைகள் இருக்கின்றனவே தவிர யார் எடுத்தார்கள், யார் திருடினார்கள் என்று கண்டு பிடித்து தண்டிக்கப்பட்டதாக எந்தப் பட்டியலும் இல்லை என்பதை வருத்தத்தோடு கூறிக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே, இதுபோன்ற நிலைமைகளைக் கண்டுபிடிக்க வேண்டிய

பொறுப்பு இந்த அரசுக்கு இருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அதேபோல் தாழ்த்தப்பட்ட மக்களுக்காக ஏராளமான கோடி ரூபாய்களை இந்த அரசு ஒதுக்குவதாகவும், அவர்கள் வாழ்வில், அவர்கள் பொருளாதாரத்தில் ஏற்றத்தை உண்டாக்குவதற்காக பல கோடி ரூபாய்களை ஒதுக்கி வருவதாகவும் பட்ஜெட்டிலும் பார்க்கிறோம், கவர்னர் உரையிலும் பார்க்கிறோம், மானியக் கோரிக்கைகளிலும் கேட்கிறோம் ஆனால் இந்த நிலைமைகள் ஏட்டளவில் இருக்கிறனவே தவிர நாட்டளவில் செயல் படவில்லை குடிசை வாழ்வோருக்கு நம்முடைய அரசாங்கம் ஒரு ஆண்டுக்கு 3,000 முதல் 4,000 வீடுகள் வரையில் கட்டித் தருவதை உள்ளபடியே வரவேற்கிறேன், அதேநேரத்தில் இப்படிப் பட்ட பணிகள் எங்கே நடைபெறுகின்றன என்றால் நகரப் பகுதிகளில் நடைபெறுகின்றன.

கிராமங்களில் ஏழை, தாழ்த்தப்பட்ட மக்கள், பின் தங்கிய மக்கள் குந்தக் குடிசையில்லாமல் அவதிப்படும் காட்சிகளைப் பார்க்கிறோம். இதுவரையில் சுமார் ஒரு லட்சம் வீட்டு மனைகளைக் கையகப்படுத்தி, அந்த வீட்டு மனைகளில் வீடுகள் கட்டப்படாமல் காலியாக இருப்பதைப் பார்க்கும்பொழுது வேதனைக் கண்ணீர் வடிக்கும் சூழ் நிலையில் இருக்கிறோம். ஆகவே, இதை இந்த அரசாங்கம் கவனத்திற் கொண்டு நகரப்புறத்தில் மட்டுமல்லாமல் கிராமப்புறங்களில் இருக்கும் தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் காலி மனைகளில் வீடுகளைக் கட்டும் திட்டத்தை விரைவில் ஆரம்பிக்க வேண்டுமென்று விரும்பி வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

இந்த அரசாங்கம் தாழ்த்தப்பட்ட மக்களுக்காக தாழ்த் தப்பட்டோர் நல மேம்பாட்டுக் கழகம் ஒன்றை துவக்கி இருப்பதாக அறிக்கை கொடுத்து ஓராண்டு ஆகியும் அது எந்த நிலையில் இருக்கின்றது என்பதற்கு இது வரையில் எந்த வித பதிலும் இல்லை. ஆகவே இருக்கின்ற குறைகளை

எவ்வளவு விரைவில் நடவடிக்கைகள் மேற்கொண்டு நீக்க முடியுமோ, இவற்றை நீக்குவதற்கு ஏன் காலதாமத மாகிறது என்பதைக் கூர்ந்து கவனித்து தக்க நடவடிக்கை கள் எடுக்க வேண்டுமென்று விரும்பி வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

தாழ்த்தப்பட்ட மக்களுக்கு வீட்டு மனைகள் வழங்க வும், இன்னும் சுடுகாட்டுப் பாதைகள் அமைக்கவும், கிணறு வெட்டவும் மானியம் தருகிறோம் என்கிறார்கள், ஆனால் என்னுடைய தொகுதியைப் பொறுத்தவரையில் உள்ள நிலைமையை நான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். புலியூர் கிராமத்தில் புரவிபாளையம் என்ற ஊர் அரிசன மக்கள் மூதாதையர் காலத்திலிருந்து சுடுகாட்டிற்குப் போகின்ற பாதையையும், சுடுகாட்டையும், புறம்போக்கு நிலத்தில் அனுபவித்துக்கொண்டு வருகிறார்கள் ஆனால் அந்த இடத்தை இப்போது செட்டிநாடு சிமெண்ட் கம் பெனிக்கு திருச்சி மாவட்ட ஆட்சித் தலைவர் சொந்த மாக்கித்தர முயற்சி மேற்கொண்டிருக்கிறார் என்பதை முதலமைச்சர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டு வந்து இதில் தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று விரும்பி, வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன். அவர்கள் அனுபவித்து வந்த உரிமையை அவர்களிடமிருந்து பறிக் காமல் அவர்களிடமே புறம்போக்கு நிலத்தை ஒப்படைக் கத் தகுந்த ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக அடுத்த 5 ஆண்டுக் காலத்தில் இலங்கையிலிருந்து வரப்போகிற குடும்பங்களைப் பற்றி கவர்னர் அவர்கள் எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் இலங்கையிலிருந்து வரப்போகிற 57 ஆயிரம் குடும்பங்களைக் காப்பாற்ற நம்முடைய நிலை என்ன என் பதைப் பற்றி நாம் முதலிலே பார்க்க வேண்டும் ஏற் கெனவே வந்தவர்களுக்கு நாம் தகுந்த முறையிலே வசதி கள் செய்து தரவில்லை. அவர்களுக்கு வீட்டு மனை வழங்கப்

படவில்லை தொழில் செய்வதற்கு கடன் தரப்படவில்லை. வீட்டு மனை உள்ளவர்களுக்கு வீடு கட்டுவதற்குத் தகுந்த உதவி செய்யப்படவில்லை. தகுதி உள்ளவர்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்கப்பட வில்லை. பொருளாதாரத் துறையில் பின் தங்கியவர்களுக்கு வாழ வழி காட்டப்படவில்லை இப்படிப்பட்ட சூழ்நிலையில் நம்மை நம்பி, நம்முடைய மூதாதையர்களுடைய நாட்டை நம்பி வந்துள்ள ஏராள மான இலங்கை அகதிகள் குடும்பம் குடும்பமாகத் தெருத் தெருவாக அலைகின்ற காட்சியை நாம் பார்க்கிறோம். அவர்களுக்கெல்லாம் வாழவழி செய்துகொடுக்கவேண்டும் அதில் ஏன் கால தாமதமாகிறது என்பதை மிகுந்த அக்கறையோடு சிந்தித்துப் பார்க்க வேண்டும். இப்படிப் பட்டவர்களுக்குத் தகுந்த பாதுகாப்பு அளிப்பதற்கு வேண் டிய முயற்சிகளை மேற்கொள்ள வேண்டுமென்று விரும்பி வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன். அவர்களுக்கு இந்த அரசு கைகொடுக்காவிட்டாலும், காலை வாரிவிடாமல் பார்த்துக் கொள்ளுமாறு வேண்டுகிறேன். அதேபோல இன்னொன்றையும் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். இந்த அரசாங்கம் பொறுப்பேற்ற பிறகு மாணவர்கள் மீது எந்த அளவிற்கு அக்கறை காட்டப்படுகிறது? ஆங்காங்கு மாணவர்கள் தாக்கப்படுகிறார்கள். இதற்கு ஆதாரம் பல இருக்கின்றன என்பதை நாம் எண்ணிப் பார்க்கவேண்டும். உதாரணத்திற்குச் சொல்ல வேண்டுமானால் என்னுடைய மாவட்டமாகிய திருச்சியிலே கிளைவ் விடுதிச் சம்பவத்தை எடுத்துக் கொண்டால் அங்கே நடந்த நிகழ்ச்சிகள் எந்த நாட்டு வரலாற்றிலேயும் இல்லாத ஒன்றாகும். நான் அந்த கிளைவ் ஹாஸ்டலுக்குச் சென்று பார்த்த நேரத்தில் அறை களுக்குள்ளே ரத்தம் பீறிட்டுக் கிடந்ததைப் பார்த்தேன். சாப்பிடும் இடத்திலே ரத்தம் சொட்டப்பட்டிருந்ததைப் பார்த்தேன். இந்தச் சம்பவங்களுக்குப் போலீஸ் காரணம் என்றும், இன்னும் பல பெரிய அதிகாரிகள் காரணம் என்றும், நீதிபதி அவர்கள் தெளிவாகச் சுட்டிக் காட்டி இருக்கிறார்கள்.

மாணவர்கள் என் ரத்தத்தின் ரத்தம் சதையின் சதை, என்று சொல்கிற முதலமைச்சர் அவர்களும், கல்வி அமைச்சர் அவர்களும் திருச்சிக்குப் பலமுறை சென்றிருக்கிறார்கள். ஒரு முறையாவது மாணவர்கள் விடுதியை பார்த்திருக்கிறீர்களா? மாணவர்களுக்கு அனுதாபம் தெரிவித்திருக்கிறீர்களா? கிளைவ் ஹாஸ்டல் சம்பவங்களுக்கு யார் காரணம் என்பது நம்முடைய முதல் அமைச்சருக்கும் தெரியும், திருச்சி நகரத்து மக்களுக்கும் தெரியும், எனக்கும் தெரியும். ஆகவே மூல காரணம் யார் என்பதை எண்ணிப் பார்க்கிற நேரத்தில் உள்ள படியே சொல்கிறேன், வேதனைப்பட வேண்டும், இது போன்ற நிகழ்ச்சி இனிமேல் நிகழாவண்ணம் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று விரும்பி வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

நம்முடைய கவர்னர் அவர்களுடை உரையிலே காட்டப்பட்டுள்ள அத்தனையும் மக்கள் நல்வாழ்விற்காக என்றாலும், பாசன வசதியாக இருந்தாலும், குடிதண்ணீர் வசதியாக இருந்தாலும், தொழில் வளர்ச்சியைப் பெருக்குவதாக இருந்தாலும் எல்லாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் அமையக் கூடியவையே தவிர நடப்பு ஆண்டிற்குப் போடப்படுகிற திட்டங்கள் என்பதற்கு எந்தவித ஆதாரமும் இல்லை, சுட்டிக்காட்டப்படவும் இல்லை என்பதை நான் மெத்த வருத்தத்தோடு சுட்டிக்காட்டக் கடமைப் பட்டிருக்கிறேன்.

நேற்றைக்கு முதல் நாள் இந்த மாமன்றத்திலே பேசிய மாண்புமிகு உறுப்பினர் வீராசாமி அவர்கள் இது என்ன இரயில்வே கைடா, எல்லாவற்றையும் புள்ளி விபரங்களுடன் எடுத்து வைப்பதற்கு என்றார்கள். இரயில்வே கைட் 3 மாதத்திற்கு ஒருமுறை, ஆறு மாதத்திற்கு ஒரு முறைதான் புதுப்பித்துப் போடப்படுகிறது. கவர்னர் அவர்களின் உரை ஒரு ஆண்டுக்கு ஒரு முறை புதுப்பிக்கப் படுகிற ஒரு இரயில்வே கைட் போன்றதாகும். இந்த உரை

ஐந்தாண்டுத் திட்டத்திற்கு போடப்பட்ட ஒரு கைட் போன்றதாகும். நடப்பு ஆண்டிற்கு எந்தவிதமான திட்டமோ, அதை நிறைவேற்றுவதற்கு எந்தவிதமான ஆதாரமோ இல்லை என்பதை மெத்த வருத்தத்தோடு தெரிவித்துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன். (மணி யடிக்கப்பட்டது)



# 5

## 1974-75ஆம் ஆண்டுக்கான வரவு–செலவு திட்டத்தின் மீது 13-3-74ஆம் தேதியன்று சட்டப் பேரவையில் நடைபெற்ற பொது விவாதத்தின்போது திரு. பெ. சௌந்தரபாண்டியன் அவர்கள் ஆற்றிய உரை

* திரு. பெ. சௌந்தரபாண்டியன்: தலைவர் அவர்களே, நடப்பு ஆண்டின நிதிநிலை அறிக்கைமீது அண்ணு திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பாக இறுதியாக என்னுடைய கருத்துக்களை வழங்குவதற்கு வாய்ப்பினை அளித்தமைக்காக நன்றி செலுத்த கடமைப் பட்டிருக்கிறேன்.

மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

என்பது வள்ளுவர் காட்டும் வீட்டுப் பொருளாதாரம்.

அதேபோல்தான் நாட்டின் வருவாய்க்குத் தக்கபடி நிதி நிலை அறிக்கையையும் திட்டத்தையும் சமர்ப்பிக்க வேண்டும் அப்பொழுதுதான், பற்றுக்குறை இல்லாத பட்ஜெட்டாகவும், பரிதாபகரமான நிலைமைகளை மக்களுக்கு ஏற்படுத்தாமலும் காப்பதற்கு ஒரு வழிவகை ஏற்படும். இந்த நாட்டுப் பொருளாதாரத்தை காக்க வழி வகை காணக்கூடிய வகையிலும் அது அமையும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்த நிதி நிலை அறிக்கை மீது என்னுடைய விளக்கத்தையும் சில புகார்களையும் கோட்டையிலிருந்து தொடங்கலாம் என்று கருதுகிறேன். தமிழக அரசுத் தலைமைச் செயலகத்தில் கூட்டுறவுக் கடன் வழங்கும் சங்கம் இருப்பதை நாம் அத்தனைபேரும் நன்ருக அறிவோம். அந்தச் சங்கத்தின் பொருளாளர் போலிக்கையெழுத்திட்டு வங்கியிலிருந்து ஏறத்தாழ 38,000-ரூபாயை எடுத்துக்

துக்கொண்டு தலைமறைவாகி விட்டதாகவும் பிறகு அது கண்டுபிடிக்கப்பட்டு, ஏறத்தாழ ரூ. 8,000 அவரிடமிருந்து கைப்பற்றப்பட்டிருக்கிற சூழ்நிலையையும் கேள்விப்படும் போது உள்ளபடியே நான் மெத்த வருத்தப்படுகிறேன். இது உண்மையா இல்லையா என்பதற்கு இந்த அரசாங்கம் தக்க பதிலை அளிக்கவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன். கோட்டையிலே விழுந்த ஊழல் ஓட்டை உண்மை தானா? அந்த அதிகாரியைப் பதவி நீக்கம் செய்யாமல், நம்முடைய வராண்டாவில் பவனி வரச் செய்திருப்பது நேர்மைதானா? என்பதை நாமெல்லாம் சிந்தித்துப் பார்த்து தகுந்த பரிகாரம் தேடவேண்டுமென்று விரும்பி வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

இதேபோல் தென் ஆர்க்காடு மாவட்டத்தில் திருக் கோயிலூருக்கு அருகில் இருந்த சேமிப்புக் கிடங்கிலே 1972-ம் ஆண்டு சேமித்து வைக்கப்பட்டு இருந்த எட்டா யிரம் மூட்டை நெல்லை பெண்ணை யாற்றிலே ஏற்பட்ட வெள்ளம் அடித்துச் சென்றதாக நாம் கேள்விப்பட்டோம். நல்ல உள்ளம் படைத்தவர்களின் எல்லா உள்ளங்களும் மிக்க வேதனைப்பட்டன. நான் கூட ஆச்சரியப்பட்டேன என்னடா இந்த சேமிப்புக் கிடங்கை ஊருக்கு நடுவிலே கட்டாமல் பெண்ணை யாற்றின் நடுவிலேயா கட்டியிருப் பார்கள் என்று. ஆனால் பிறகு விசாரித்துப் பார்த்ததில் அது ஊருக்கு நடுவிலேதான் கட்டப்பட்டு இருக்கிறது என்பதை அறிந்துகொண்டேன். பிறகு அதைப் பற்றி விசாரணை நடத்தப்பட்டு அதிலிருந்து தெரியவந்திருப்பது, வெள்ளம் அடித்துச் செல்லவில்லை, அதிகாரிகள் கையாடல் செய்ததால்தான் அப்படிப்பட்ட நிலைமை ஏற்பட்டது என்று. உள்ளபடியே நாமெல்லாம் மிகவும் வேதனைப் படுகிறோம். அதனுடைய மதிப்பு நான்கு லட்சத்து 87 ஆயிரம் ரூபாய் என்றும் இந்தக் கையாடலின் கதாநாயகன் அங்கே அப்போது பணியாற்றிய தாலூகா சப்ளை ஆபீஸர் என்றும் தெரிகிறது. இந்த அரசாங்கம் உடனடியாக விசாரணை செய்ததா? இதைப்பற்றி விசாரணை செய்யப்

பட்டு அந்த அதிகாரிமீது நடவடிக்கை எடுக்கப்பட்டு அவர் கைது செய்யப்பட்டிருக்கிருர்.

இப்படி 1972-ம் ஆண்டு நடந்த கையாடல் 1974-ம் ஆண்டிலேதான் கண்டுபிடிக்க முடிந்தது என்ருல் இந்த அரசாங்கம் எவ்வளவு தாமதமாக ஊழல் புகார்களை விசாரித்துக் கொண்டிருக்கிறது என்பதற்கு இது ஒரு நல்ல ஆதாரமாகும்.

அதுமட்டுமல்ல, கிண்டியிலே ஒரு சிறுவர் பூங்கா இருக்கிறது 1973-ம் ஆண்டில் அங்கே சூபரின்டென்டாக பணியாற்றிய நந்தகோபால் என்பவர் அங்கே உள்ள பிராணிகள், பறவைகள் மற்றும் ஊர்வன வற்றிற்கு மீன், மாமிசம், தானியம் இவை எல்லாம் விலைக்கு வாங்கிப் போட்டதாக போலி ரசீதுகள் தயார் செய்து ஒரு லட்சம் ரூபாய்வரையில் கையாடல் செய்திருக்கிருர். அதற்காக அவர் கைதுசெய்யப்பட்டு பெங்களூரிலே தங்கியிருந்து நிபந்தனை ஜாமீனில் விடப்பட்டிருக்கிருர். இப்படி ஒவ்வொன்ருக பார்த்தால் ஒவ்வொரு ஆண்டும் ஊழல் ஊழல் என்று வளர்ந்துகொண்டு இருக்கிறதே தவிர குறைந்ததாகத் தெரியவில்லை. இதற்கெல்லாம் பரிகாரம் காண வேண்டுமென்று விரும்பி வேண்டி நான் கேட்டுக்கொள்கிறேன்...........

மாண்புமிகு திரு. மன்னை ப. நாராயணசாமி: தலைவர் அவர்களே...தவறு செய்தவர்கள் கைது செய்யப்பட்டிருக்கிருர்கள், நடவடிக்கை எடுக்கப்பட்டு இருக்கிறது. உறுப்பினர் அப்படி கைது செய்தது நியாயமில்லை என்று சொல்கிருர்களா? அப்படி நடவடிக்கை எடுத்தது தப்பு என்று சொல்லுகிருர்களா?

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: தலைவர் அவர்களே, கைது செய்ததை நானும் அறிந்தேன். ஆனல் காலதாமதம் ஏன் என்றுதான் கேட்கிறேன்.

மாண்புமிகு திரு. மன்னை ப. நாராயணசாமி : காலதாமதம் ஏன் என்ருல் வழக்கு விசாரிக்கப்பட்டு பப்ளிக் பிராஸிக்யூட்டர் குற்றவாளி என்று சொல்லிய பிறகுதான் நடவடிக்கை எடுக்கமுடியும், அப்படியில்லாமல் விசாரிக்காமல் உடனடியாக நடவடிக்கை எடுத்து கைது செய்யவேண்டுமென்று சொல்கிருர்களா? வழக்கறிஞரான அவர்கள் விளக்கம் அளிக்க வேண்டும்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன் : வழக்குப் போட்டவுடன் தான் பப்ளிக் பிராஸிக்யூட்டருக்கும் அதற்கும் சம்பந்தமாகிறது. ஆகவே விசாரணை செய்து அவர்கள் மேல் நடவடிக்கை எடுப்பதில் ஏன் தாமதம் என்பதை அமைச்சர் சொன்ஞல் நலமாக இருக்கும்.

மாண்புமிகு திரு. மன்னை ப. நாராயணசாமி : எந்தவிஷயத்திலேயும் பப்ளிக் பிராஸிக்யூட்டர்தான் புராஸிக்யூஷனை எடுக்கிருர்கள், அதுதான் முறை வழக்கு விசாரணை நடத்துவதும் பப்ளிக் பிராஸிக்யூட்டர்தான் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன் : ஊழல் நடந்திருப்பதை உள்ளபடியே ஒத்துக்கொண்டதற்காக நான் நன்றி தெரிவித்துக்கொள்கிறேன். ஆனுல் அந்த கையாடலை செய்தவர் பெங்களூரிலேயே நிபந்தனை ஜாமீனிலே இருக்கிருர். ஊழல் தொடர்ந்து நடந்து கொண்டிருக்கிறது.

மாண்புமிகு திரு. மன்னை ப. நாராயணசாமி : பல ஆண்டுகளாக நடந்து கொண்டிருந்த ஊழல்கள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன, இப்பொழுது ஊழல்கள் குறைந்துகொண்டு வருகின்றன. இந்த ஆட்சி வந்ததற்குப் பிறகு ஊழல்களைக் கண்டுபிடித்து நடவடிக்கை எடுத்ததால்தான் ஊழல்கள் குறைந்து கொண்டு வருகின்றன என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: ஊழல்கள் பெருகிவிட்டதால்தான் முன்னேற்றக் கழகத்தை ஆட்சியிலே அமர்த்தினார்கள் மக்கள். ஆனால் அதைக் கண்டுபிடிப்பதிலே......

மாண்புமிகு திரு. மன்னை ப. நாராயணசாமி: ஊழலையே முதலாக வைத்து, ஊழல், ஊழல் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். பெருகிவந்த ஊழல்களை முன்னேற்றக் கழக ஆட்சிதான் கண்டுபிடித்தது, கண்டுபிடித்து நடவடிக்கைகள் எடுத்திருக்கிறது, நடவடிக்கை எடுக்காமல் இருக்க வேண்டுமென்று அவர்கள் சொல்கிறார்களா?

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: தலைவர் அவர்களே, யார் ஊழலை முதலாக வைத்திருக்கிறார்கள் என்று என்னையும் அவர்களையும் பார்த்தாலே நன்றாக தெரியும்.

மாண்புமிகு திரு. மன்னை ப. நாராயணசாமி: அதை அவரவர்கள் ஊரிலே போய் விசாரித்தால் நன்றாகத் தெரியும். சும்மா ஊழல் ஊழல் என்று கூறிக்கொண்டே ஏதோ இங்கே உட்கார்ந்து உள்ளவர்கள் எல்லாம் ஊழல் செய்கிறவர்கள் போலவும் அங்கே உட்கார்ந்து இருக்கிறவர்கள் எல்லாம் ஊழல் இல்லாதவர்கள் போலவும் பேசுகிறார்கள். 31-ஆம் தேதி ஊழல் என்றும் 2-ஆம் தேதி ஊழல் போய்விட்டது என்றும் சொன்னவர்கள். ஆகவே அவரவர்கள் ஊரிலே போய் கேட்டால் நிச்சயமாகத் தெரியும்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: தலைவர் அவர்களே, நான் சுட்டிக் காட்டியவைகள் எல்லாம் உண்மைக்கு மாறாக இருந்தால் அதற்குப் பொறுப்பேற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறேன். ஆனால் அவை எல்லாம் உண்மையாக இருந்தால் அமைச்சர் அவர்கள் பொறுப்பேற்றுக்கொள்வார்களா?

மாண்புமிகு திரு. மன்னை ப. நாராயணசாமி: பொறுப்பேற்றுக் கொள்ள எந்த இடத்திலும் நான் தயார்.

திரு. ஆர். பொன்னப்ப நாடார்: தலைவர் அவர்களே, ஏதோ இங்கே உட்கார்ந்திருக்கிறவர்கள் எல்லாம் ஊழல்களிலே ஈடுபடுகிறார்கள் என்று அமைச்சர் அவர்கள் கூறுகிறார்கள்.

எங்களைப் போன்றவர்கள் எல்லாம் அப்படியில்லை, எங்களைப் போன்றவர்களையெல்லாம் விசாரிக்க மக்கள் மன்றத்திலே விசாரணை வைத்தாலும் அதற்கும் தயாராக இருக்கிறோம். அரசாங்கத்திலிருந்து நீதிவிசாரணை வைத்தால் அதற்கு வேண்டுமானாலும் தயாராக இருக்கிறோம் அல்லது! சி.பி.ஐ மூலமாக விசாரணை வைத்தால் அதற்கும் தயாராக இருக்கிறோம் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆனால் அதேமாதிரி அவர்களும் தயார்தானா என்பதை அறிய விரும்புகிறேன்.

மாண்புமிகு திரு. மன்னை ப நாராயணசாமி: நான் யாரையும் சேர்த்துச் சொல்லவில்லை. 31-ஆம் தேதி ஊழல் என்று சொல்கிறவர்கள் 2-ஆம் தேதி மன்னிப்புக் கேட்டார்கள் என்றுதான் சொன்னேனே தவிர யாரையும் குறிப்பிட்டுச் சொல்லவில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். அப்படியிருக்கும்பொழுது பொன்னப்ப நாடார் அவர்கள் ஏன் அந்த ஊழலிலே சேர்ந்து கொள்கிறார்கள் என்று எனக்குப் புரியவில்லை. நமக்கு எல்லாம் அப்படிப்பட்ட பழக்கம் கிடையாது, அப்படிப்பட்ட பழக்கம் உள்ளவர்களோடு சேர்வதும் கிடையாது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். திரு. பொன்னப்ப நாடார் அவர்கள் அந்தக் கூட்டத்திலே சேரவேண்டாம் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: தலைவர் அவர்களே, அந்த ஊழல் கூட்டத்தில் இருக்கக்கூடாது என்பதற்காகத்தான் நாங்கள் இங்கே வந்திருக்கிறோம் என்பதைத் தவிர வேறு ஒன்றும் இல்லை. நான் ஒன்றை ஆணித்தரமாகச் சொல்ல விரும்புகிறேன். பேரறிஞர் அண்ணா அவர்கள் முதலமைச்சராக இருந்த நேரத்தில் என்னுடைய தொகுதியில் கொரூரில் பணியாற்றிய கணக்கப்பிள்ளை ஒருவர் ஒரு லட்ச ரூபாய் கையாடல் செய்தார் என்று புகார் மனு ஒன்று என்னிடம் பொது மக்களால் கொடுக்கப்பட்டு நான் அன்றைய தினம் முதலமைச்சராக இருந்த ஒப்பற்ற தலைவர்

பேரறிஞர் அண்ணு அவர்களிடத்தில் கொடுத்தேன். பேரறிஞர் அண்ணு அவர்களும் அதைப்பற்றி நடவடிக்கை எடுத்து, விசாரித்து, அது உண்மை என்று அறிந்தவுடன் அந்த கணக்கப்பிள்ளையின் வேலை நீக்கம் செய்யப்பட்டது. ஆனல் மதிப்பிற்குரிய கருணநிதி அவர்கள் முதலமைச்சராகப் பொறுப்பேற்றுக் கொண்டதற்குப்பிறகு, அறிஞர் அண்ணு அவர்கள், யார்மீது ஊழல் குற்றம் சாட்டப்பட்டு யாரை வேலை நீக்கம் செய்தார்களோ அவருக்கு திரும்பவும் வேலை கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதை மெத்த வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். முதலமைச்சர் அவர்கள் உறவுக்குக் கை கொடுப்போம் என்று சொல்வார். ஆனல் இப்போது ஊழல் செய்தவரை கைதூக்கி விட்டுக் கொண்டிருக்கிருர் என்பதை எண்ணிமிகவும் வேதனைப் படுகிறேன்.

மாண்புமிகு திரு. ப. உ. சண்முகம்: நான் விவரம் தெரிந்து கொள்ள வேண்டுமென்பதற்காக கேட்கிறேன். முதலமைச்சர் பதில் சொல்வதற்கும் வசதியாக இருக்கும் என்பதற்காகக் கேட்கிறேன். யார், எந்த ஊர் என்பதைத் தெளிவாகச் சொல்ல வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: நான் தெளிவாகச் சொல்லியிருக்கிறேன். கொசூர் கணக்கப்பிள்ளை, குளித்தலை வட்டம் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். பொதுப் பணித்துறை அமைச்சர் விவரம் கேட்டார். கொசூர், குளித்தலை வட்டம் என்னுடைய தொகுதி. கவர்னர் உரை விவாதத்தில் நம்முடைய முதலமைச்சர் அவர்கள்.........

மாண்புமிகு திரு. ப. உ. சண்முகம்: நான் விவரம் தெரிந்து கொள்வதற்காக கேட்கிறேன். அறிஞர் அண்ணு அவர்கள் காலத்திலே வேலை நீக்கம் செய்யப்பட்டவர் கலைஞர் காலத்திலே வேலை கொடுக்கப்பட்டார் என்று சொன்னுர்கள். பின்னுலே வேலைக்குச் சேர்த்துக்கொண்டது ஒன்றுமே தவறில்லை என்று சொல்லி சேர்த்துக்கொள்ளப்பட்டாரா ?

அல்லது விசாரணை நடைபெற்று அவர் குற்றவாளி என்று தெரிந்து கொண்டதற்குப் பிறகு வேலைநீக்கம் செய்யப் பட்டு அதற்குப் பிறகு வேலையில் சேர்த்துக்கொள்ளப் பட்டாரா ?

திரு. பெ. சௌந்தரபாண்டியன் : விசாரணை செய்து வேலை நீக்கம் செய்யப்பட்டார். மீண்டும் வேலை கொடுக்கப்பட் டிருக்கிறது, அதைத்தான் சொன்னேன். கவர்னர் உரை விவாதத்தில் நான் சில புகார்களைச் சொன்னேன். அதற் குப் பதில் சொல்லும்பொழுது முதலமைச்சர் பல குடம் பால் இருக்கிறது, அதிலே ஒரு குடம் பாலிலே ஒரு துளி விஷம் விழுந்துவிட்டால் எல்லாக் குடங்களையும் கீழே ஊற்றிவிடுவதா என்று சொன்னார்கள்.

இரண்டு, மூன்று ஊழல் புகார்களை மட்டும் நான் கொடுக்கிறேனே தவிர, எல்லாவற்றையும் கொடுக்க வில்லை. காரணம், எல்லாவற்றையும் சொல்வது என்றால் அதற்கு நேரம் போதாது, பேரவைத் தலைவரவர்களும் அந்த அளவிற்கு அனுமதியும் வழங்க மாட்டார்கள். ஆகவேதான் எல்லாவற்றையும் சொல்லவில்லையே தவிர வேறொன்றுமில்லை. ஏறத்தாழ ஒவ்வொரு ஆண்டும் ஓரா யிரம் புகார்களுக்கு மேல் வருகின்றன. எனவே, ஓராயிரம் குடத்திலே விஷம் கலக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, நிர்வாகத்தைச் சீர்படுத்த வேண்டும், நிர்வாகிகளிடம் கண்டிப்பு காட்டி நேர்மையாக நடப்பதிலே மிகுந்த அக்கறை எடுத்துக்கொள்ள வேண்டும், அப்படி இந்த நாட்டைக் காக்க வேண்டுமென்றுதான் சொல்கிறேனே தவிர, எனக்கு எந்தவிதமான கருத்து மாச்சரியமோ, மன மாச்சரியமோ இல்லை என்பதைத் தெரிவித்துக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

இந்த நிதிநிலை அறிக்கையில் கல்விக்காக 110·15 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. முதலமைச்சரவர் கள் ஏறத்தாழ 53 பக்கங்கள் கொண்ட நிதிநிலை அறிக் கையை இங்கே படித்துக் காட்டினார்கள் இந்த 53 பக்கங்

களில், பணம் மட்டுமல்ல, பக்கங்கள் கூட கல்விக்காகத் தான் அதிகமாக ஒதுக்கப்பட்டிருக்கிறது. ஏறத்தாழ நான்கேகால் பக்கங்கள் ஒதுக்கப்பட்டிருக்கின்றன.

நம்முடைய நாட்டின் கல்வித் தரம் என்ன? எந்தச் சூழ்நிலையில் கல்வியின் தரத்தை உயர்த்தியிருக்கிறோம், கட்டுப்பாட்டை எந்த அளவில் வளர்த்திருக்கிறோம்? கல்விக்கூடங்களை எவ்வளவு நாட்கள் திறந்து வைத்திருக்கிறோம் என்பதை இந்த அரசாங்கம் எண்ணிப் பார்க்க வேண்டும். ஆசிரியர்கள் - மாணவர்கள் விதாச்சாரம் குறையவும், ஆசிரியர்கள் - மாணவர்கள் மத்தியில் கட்டுப்பாடு வளரவும், ஆசிரியர்கள் - மாணவர்கள் மத்தியில் அவர்களது உறவு பாதிக்காமல் இருக்கவும், கல்விக்கூடங்களில் வேலைநிறுத்தங்கள் நிகழாமல் முன்கூட்டியே கவனித்துக் கொள்ளவும், கல்வியின் தரத்தை உயர்த்தவும், அறிவைப் புகச்செய்து அரசியல் புகாமல் தடுக்கவும் முயற்சிகளை இந்த அரசு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று வேண்டி விரும்பிக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, வேளாண்மைத் துறையைச் சீரமைக்க வேண்டுமென்று 1970-ம் ஆண்டில் இந்த அரசாங்கம் முடிவெடுத்தது. எடுத்த முடிவு இதுவரையில் ஊறுகாய் பானைக்குள் போடப்பட்ட ஊறுகாயைப் போல் ஊறிக்கொண்டு இருப்பதற்கு என்ன காரணம்? ஒவ்வொரு மாவட்டத்தையும் எடுத்துக்கொண்டால் வேளாண்மைத் துறையில், பருத்திக்காக ஒரு மாவட்ட வேளாண்மை அதிகாரி, எண்ணெய் வித்துக்களை கவனிப்பதற்காக ஒரு அதிகாரி, கரும்பு சாகுபடியைக் கவனிப்பதற்கு ஒரு அதிகாரி, பொதுவாக ஒரு வேளாண்மை அதிகாரி என்று இப்படிப் பல வாருகப் பிரிக்கப்பட்டு, பல அலுவலகங்கள் திறக்கப்பட்டு இருக்கின்ற சூழ்நிலை இருக்கிறது அதனால் படிக்காத விவசாயி அலுவலகங்களைத் தேடி அலைகின்ற சூழ்நிலையை இந்த அரசு உருவாக்கியிருக்கிறது. அந்தத் துறையிலேயே உள்ள பெரிய அதிகாரிகள், அனுபவம்

உள்ளவர்கள் இதைச் சீரமைக்க வேண்டுமென்ற கருத்தைச் சொல்லியும் கூட இந்த அரசாங்கம் அதை ஏற்றுக் கொண்டும் கூட இதற்கு இவ்வளவு காலதாமதம் ஆவதற்கு என்ன காரணம் என்பதைச் சிந்திக்க வேண்டும் எனவே இதில் உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று பணிவன்போடு கேட்டுக்கொள்கிறேன்.

உரத்தைப் பொறுத்த வரையில் எடுத்துக்கொண்டால் உள்ளபடியே சொல்கிறேன், நாம் அதற்காக மெத்த வருத்தப்பட வேண்டும். விவசாயிகள் இயற்கை உரத்தை முன்பு பயன்படுத்தினர்கள். மாட்டு எரு, பன்றி எரு, தழைகள், அவுரிச்செடி, கொழுஞ்சிச்செடி போன்றவற்றைப் பயன்படுத்தினர்கள். ஆனல் இடைக்காலத்தில் இந்த அரசாங்கமும், மத்திய அரசாங்கமும் இரசாயன உரத்தைப் பயன்படுத்தி உற்பத்தியைப் பெருக்குங்கள் என்று விளம்பரம் செய்ததால் பாஸ்பேட் உரம் அறிமுகப் படுத்தப்பட்டது. இப்பொழுது அந்த பாஸ்பேட் உரம் பாஸ்போர்ட் எடுத்துக் கொண்டு, தான் வந்த நாட்டிற்கு சென்று விட்டதோ என்று கருத வேண்டியுள்ளது. அதைப் போல் யூரியாவை அறிமுகப்படுத்தினர்கள். கடையிலே சென்று யூரியா கொடு என்றல், நீ யாரையா என்று கேட்கும் சூழ்நிலை இருக்கிறது. மீண்டும் இயற்கை உரத்தையே பயன் படுத்த அரசு தீவிர திட்டம் வகுத்து செயல் படுத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

கால்நடைத்துறையில் ஒரு கார்ப்பரேஷனை அரசு நிறுவி இருக்கிறது. 1973-ம் ஆண்டில் கோழி வளர்ப்பு கார்ப்பரேஷன் என்ற நிறுவனத்தை இந்த அரசு துவக்கியிருக்கிறது. இது அவசியம்தான, தேவைதான என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். கோழி வளர்ப்பு கூட்டுறவுச் சங்கங்கள் மட்டும் இப்பொழுது கால்நடை வளர்ச்சித் துறை தெறியாளரின் கண்காணிப்பில் இருக்கிறது. மற்றவை இந்த கோழி வளர்ப்பு கார்ப்பரேஷனிடம் ஒப்படைக்கப்பட்டு கண்காணிக்கப்பட்டுவருகிறது. அதனல் நிர்வாகச் செலவு பல லட்சக்கணக்கான ரூபாய் வீணுகிறது என்று கூற விரும்புகிறேன்.

பஞ்சாபில் இதேபோல் கோழி வளர்ப்பு கார்ப்ப ரேஷனைத் துவக்கினார்கள். ''ப்ரயூர்மென்ட் அண்ட் டிஸ்ட்ரிப்யூஷன்'' என்ற பணியை மட்டும் பஞ்சாப் கார்ப் பரேஷன் ஏற்றுக்கொண்டிருக்கிறதே தவிர எல்லாப் பொறுப்புகளையும் அல்ல என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஆகவேதான் அங்கே லாபகரமாக நடக் கிறது, இங்கே நஷ்டம் ஏற்படுகிற சூழ்நிலை ஏற்பட்டிருக் கிறது, நிர்வாகச் செலவும் வீணாகி பொருளாதார விரயத்தை ஏற்படுத்துகிறது. எதற்கு இந்த கார்ப்ப ரேஷன்? இன்னும் கொஞ்சநாள் போனால் கோழி முட்டைக்கு ஒரு கார்ப்பரேஷன், கோழிக் குஞ்சுக்கு ஒரு கார்ப்பரேஷன், ஆட்டுக்கு ஒரு கார்ப்பரேஷன், மாட்டுக்கு ஒரு கார்ப்பரேஷன் என்று இப்படி வளர்த்து நம்முடைய பணத்தை வீணாக்கக் கூடாது என்றுதான் சுட்டிக்காட்டு கிறேனே தவிர வேறு எதற்காகவும் அல்ல என்பதைப் பணிவோடு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். எனவே, தயவு செய்து கோழி வளர்ப்புக் கழகத்தை இந்த நாட்டு மக்கள் கேலி பேசும் அளவிற்கு உண்டாக்க வேண்டா மென்று நான் விரும்பி வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: கார்ப்பரேஷன்களை அதிகமாகப் போட்டு காரியங்களைச் சுலபமாக ஆக்குவதற் கும், பண வசதிகளை பேங்க் மூலமாகப் பெறுவதற்கும் அரசு ஏற்பாடு செய்தது தவறு அல்ல. அதற்காக கோழிக்கு ஒரு கார்ப்பரேஷன், முட்டைக்கு ஒரு கார்ப்பரேஷன், குஞ்சுக்கு ஒரு கார்ப்பரேஷன் என்றெல்லாம் கிண்டல் செய்வது முறையல்ல. சில கட்சிகள் 18, 20 செயலாளர் களை போட்டு, அதிகாரத்தைப் பரவலாக்கி காரியங்களை பார்க்கிறார்கள்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: கட்சியையும், ஆட்சியை யும் இணைப்பது மாட்சியா?

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: இது என்ன காட்சி என்றே புரியவில்லை.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: இதுதான் உங்கள் கோரக் காட்சி.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: பார்த்தாலே தெரிகிறது.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: முன்புதான் பார்த்தோமே இதே அவையில் (போலிக் கடிதம் பற்றியவிவகாரத்தில்)

அடுத்து, உள்ளாட்சித் துறையைப் பொறுத்தவரையில் இன்னொன்றும் நான் சொல்ல விரும்புகிறேன். நாம் கேட்கிறோம், மத்திய சர்க்காரில் ஒரு சுகாதார அமைச்சரா? மாநிலத்தில் ஒரு சுகாதார அமைச்சரா? அங்கே ஒரு கல்வியமைச்சரா? இங்கே ஒரு கல்வி அமைச்சரா என்று அடுக்கிக் கொண்டே போகிறோம். ஆனால் இங்கே என்ன வாழ்கிறது? உள்ளாட்சித் துறையை எடுத்துக் கொண்டால் சாலை பராமரிப்புப் பணிகளையும் கவனிக்கிறது. பொதுப்பணித்துறையும் அதைக் கவனிக்கிறது. மருத்துவப் பணியை எடுத்துக் கொண்டால் உள்ளாட்சித் துறையும் கவனிக்கிறது, அரசாங்கமும் கவனிக்கிறது. கால்நடைப் பண்ணைகளை அரசாங்கமும் கவனிக்கிறது..........

மாண்புமிகு திரு. ப. உ. சண்முகம்: பொதுப்பணித் துறையும் கவனிக்கிறது, உள்ளாட்சித் துறையும் கவனிக்கிறது என்று சொல்கிறார்கள். உள்ளபடியே அவர்கள் விவரம் தெரிந்து பேசுகிறார்களா, அல்லது தெரியாமல் பேசுகிறார்களா என்று ஐயமாக இருக்கிறது. பொதுப்பணித் துறை கவனிப்பது தனி ரோடுகள். உள்ளாட்சித் துறை கவனிப்பது தனி ரோடுகள். அது கூடத் தெரியாமல், பாவம் அவர் சட்டமன்ற உறுப்பினராக இருக்கிறார். அவரைச் சொல்லிப் பயனில்லை, தேர்ந்தெடுத்த முதலமைச்சரைத் தான் சொல்ல வேண்டும்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: தலைவரவர்களே, உள்ளபடியே நான் மிகவும் அனுதாபப்படுகிறேன். சாலையைக் கவனிக்க என்றுதான் நான் சொன்னேன், அமைச்சரவர்கள் சோலையில் இருக்கிறார்கள் என்று கருதுகிறேன்,

ஆகவே, இதனுல் வீண் நிர்வாகச் செலவுதான் ஏற்படு கிறது. இதைக் குறைப்பதற்கு நிர்வாகச் சீர்திருத்தம் மிகமிகத் தேவை என்று விரும்பி வேண்டிக் கேட்டுக்கொள் கிறேன்.

உள்ளாட்சித் துறை ரிப்பன் காலத்திலிருந்து தொடங் கப்பட்டது. அதில் இதுவரையில் ஏற்படாத ஒரு வரலாற் றைத் தமிழகம் கண்டிருக்கிறது என்பதைப் பார்க்கும் பொழுது உள்ளபடியே நான் வேதனைப்படுகிறேன். போடி நாயக்கனூர் நகராட்சித் தலைவர், நிர்வாக அதிகாரியின் நிர்வாகத்தில் குறுக்கிட்டதால் அவர் நிர்வாகத்தைச் சரிவர நடத்த முடியாத சூழ்நிலை உருவானதால் இருவருக் கும் கருத்து வேற்றுமை ஏற்பட்டு, கசப்பு மனப்பான்மை உருவாகியது, தகராறு முற்றியது. திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த நகராட்சி மன்றத் தலைவர் ஹைகோர்ட்டில் அந்த நிர்வாக அதிகாரிமீது ரிட் மனு தாக்கல் செய்திருக்கிறுர். இது நியாயமா? இதைத் தடுத் திருக்கக்கூடாதா? நிர்வாக இயந்திரத்தை ஒழுங்காக நடத்த, வேண்டிய நடவடிக்கைகளை எடுத்திருக்கக் கூடாதா?

திருச்சி மாவட்டத்தில் உள்ள ஆரம்ப ஆசிரியர்களை சில ஊராட்சி ஒன்றிய ஆணையாளர்கள் அறுவைச் சிகிச் சைக்கு ஆள் பிடிக்கும் பணியில் ஈடுபடுத்தவும், அவர்கள் சம்பளத்தில் கொஞ்சம் நன்கொடை பெறவும் எவ்வளவு கடுமை காட்டுகிறுர்கள் என்பதை எண்ணிப் பார்த்து அதைத் தடுக்க தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டு மென்று விரும்பி வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன்.

ஏற்கெனவே புதுக்கோட்டையில் இதுபோன்ற சம்பவம் நடந்து அது சம்பந்தமாக நடந்த சூழ்நிலைகளை மறந்து விடக் கூடாது. ஆரம்ப ஆசிரியர்கள் ஒரு மாபெரும் கிளர்ச்சியைத் துவக்கியிருக்கிறுர்கள். அதற்கு அணைபோட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து, தாழ்த்தப்பட்டோர் நல இலாகாவில், திருச்சி மாவட்டத்தில் ஏற்கெனவே வெளி மார்க்கெட்டில் பொருள்களை விடுதிகளுக்கு வாங்கினார்கள். ஆனால், இப்பொழுது அங்கேயுள்ள அதிகாரியின் ஆலோசனையின்பேரில் கூட்டுறவு மார்க்கெட்டில் வாங்குகின்ற சூழ்நிலையைப் பார்க்கிறோம். வெளி மார்க்கெட் விலைக்கும், கூட்டுறவு மார்க்கெட் விலைக்கும் எவ்வளவு வித்தியாசம் உள்ளது என்பதை சிந்தித்துப் பார்க்க சில சான்றுகளைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

அரிசி 75 கிலோ கொண்ட மூட்டை வெளி மார்க்கெட்டில் 90 ரூபாய். சூப்பர் மார்க்கெட்டில் 128 ரூபாய். புளி ஒரு கிலோ வெளி மார்க்கெட்டில் 2.75 ரூபாய்; சூப்பர் மார்க்கெட்டில் ரூ. 5.50 ; பருப்பு ஒரு கிலோ வெளி மார்க்கெட்டில் ரூ 2.20 ; சூப்பர்மார்க்கெட்டில் ரூ. 2.60 ; பொட்டுக் கடலை ஒருகிலோ வெளி மார்க்கெட்டில் ரூ. 2 25; சூப்பர் மார்க்கெட்டில் ரூ 3 ; மிளகாய் ஒரு கிலோ வெளி மார்க்கெட்டில் ரூ. 3.50 ; சூப்பர் மார்க்கெட்டில்......

மாண்புமிகு திருமதி சத்தியவாணி முத்து : தலைவர் அவர்களே, மாண்புமிகு உறுப்பினர் அவர்கள் வெளி மார்க்கெட்டுக்கும் சூப்பர் மார்க்கெட்டுக்கும் இடையே இருக்கிற விலை வித்தியாசத்தைப் படித்துக் கூறுகிறார்கள். விலை வித்தியாசம் இருக்கலாம். வெளி மார்க்கெட்டில் வாங்குகிற பொருள்கள் கலப்படமாக இருக்கலாம். அளவில் குறைவாக இருக்கலாம். சூப்பர் மார்க்கெட்டில் அப்படி இருக்க முடியாது. சூப்பர் மார்க்கெட்டில் வாங்கினால் அவர்களே சாமான்களை வண்டியில் வைத்து விடுதிக்குக் கொண்டு வந்து கொடுத்து விட்டுப் போகிறார்கள். எல்லாவற்றுக்கும் மேலாக கூட்டுறவு மார்க்கெட்டில்தான் வாங்க வேண்டுமென்று 1956-ம் ஆண்டிலிருந்து விதி முறை வகுக்கப்பட்டுத்தான் வாங்கிக் கொண்டிருக்கிறார்கள். கூட்டுறவு மார்க்கெட் இல்லாத இடங்களிலே வெளி மார்க்கெட்டில் வாங்கிக் கொண்டிருக்கிற நிலை இருந்துகொண்டிருக்கிறது.

திரு. பெ. சௌந்தரபாண்டியன் : வெளி மார்க்கெட்டில் பொருள்களின் தரமும் நன்றாகத்தான் இருக்கிறது. அவர் களும் விடுதிக்குக் கொண்டு வந்து போட்டுக் கொண்டு தான் இருந்தார்கள். கேள்வி நேரத்தில் நான் கேட்ட போதுகூட அதிகாரிகள் அனுப்பிய ஆலோசனை பேரில் நடவடிக்கை எடுக்கப்பட்டது என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். ஆகவே, நான் சொல்லுகின்ற கருத்தில் எந்தவிதமான மாறுபாடும் இல்லை என்று சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

அரிசிக்கு மட்டும் ஒரு மாணவனுக்கு மாதம் ஒன்றுக்கு ஆகின்ற செலவுத் தொகை 24 ரூபாய். அரசாங்கம் ஒரு மாணவனுக்கு தருகிற பணம் ஒரு மாதத்திற்கு 28 ரூபாய் தான். எஞ்சியிருக்கும் உப்பு, புளி ஆகியவற்றை எப்படி வாங்குவது என்று எண்ணிப் பார்க்க வேண்டும். அதே போல் கல்லூரி மாணவர்களுக்கு விலைவாசி ஏற்றத்தால் விடுதிக் கட்டணத்தை ஏற்றிக் கொண்டே போகிறார்கள். ஆகவே, அவர்களுடைய உபகாரச் சம்பளத்தை உயர்த்திக் கொடுக்க இந்த அரசாங்கம் மத்திய அரசோடு வாதாடிப் பெற வேண்டுமென்று வேண்டி விரும்பிக் கேட்டுக்கொள்கிறேன்.

குடிநீர்த் திட்டத்திற்காக நாம் ஏராளமான பணத்தை ஒதுக்கி இருக்கிறோம். இதில் கண்ணோட்டம் செலுத்த வேண்டியது காவிரி ஆற்றுப் பகுதிகளைவிட வறண்டிருக் கின்ற பகுதிகளுக்கெல்லாம் குடி தண்ணீர் திட்டத்தை நிறைவேற்றுவதில் முக்கியத்துவம் கொடுக்க வேண்டு மென்று கேட்டுக் கொள்கிறேன். சேலம் மாவட்டத்தில் சங்கரி நகரத்தில் தற்போது கடுமையான தண்ணீர்ப் பஞ்சம் இருந்து வருவதைப் பத்திரிகை வாயிலாகப் பார்த் திருக்கலாம். நகரத்திலுள்ள பெரும்பாலான கிணறுகள் வரண்டு விட்டன. மக்கள் குடிக்கத் தண்ணீர் இல்லாது அலைந்து கொண்டிருக்கிற சூழ்நிலையைப் பார்க்கிறோம். காசு கொடுத்து தண்ணீர் வாங்க வேண்டிய சூழ்நிலை

உருவாகி இருக்கிறது. ஏற்கெனவே, காவிரியிலிருந்து நீர் கொண்டு வரத் திட்டம் தீட்டப்பட்டது. காலதாமதமாவது ஏன் என்று அந்தப் பகுதி மக்கள் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். இதுபோன்ற பின்தங்கிய பகுதிக்கு முக்கியத்துவம் கொடுத்து தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இங்கு பேசிய பெரும்பான்மையான உறுப்பினர்களில் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் கோவைத் தேர்தலைப் பற்றி எடுத்துச் சொன்னார்கள். கவர்ச்சியைக் காட்டி, நடிகரைக் காட்டி ஓட்டு வாங்கிய காரணத்தால்தான் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் வெற்றி பெற்றது என்று கேலியும் கிண்டலும் பேசினார்கள். நம்முடைய முதலமைச்சர் அவர்கள் காரைக்காலில் பேசும்போது ''கவர்ச்சியை வைத்து மக்களை ஏமாற்றி விடலாம் என்று ஒருகட்சி நடத்தப்பட்டு வருகிறது'' என்று சொன்னார்கள். அதற்குப் பின்னால் நான் ஆதாரத்தோடு பதிலளிக்கிறேன். மாண்புமிகு கல்வியமைச்சர் நாவலர் அவர்கள் ''நாங்கள் மூளையைக் காட்டி ஓட்டுகளைக் கேட்கிறோம்; சிலர் முகத்தைக் காட்டிக் கொண்டு அரசியல் நடத்துகிறார்கள்'' என்று புதுவையில் பேசினார். அவருக்கு நான் சொல்லிக் கொள்கிறேன். மக்களிடம் மூளையைக் காட்டினீர்கள்; பார்த்த அவர்கள் ''இல்லை'' என்று தெரிந்த காரணத்தால் உங்களுக்கு ஓட்டு இல்லை என்று சொல்லிவிட்டார்கள் என்பதுதான் என்னுடைய பதிலாகும்.

திரு. எல். கணேசன் அவர்கள் பேசும்போது நடிகர் கட்சி என்று சொன்னார்கள். நடிகர் கட்சி என்று இங்கே எந்தக் கட்சியும் இல்லை. சட்ட மன்றத்திலே பேசிய அவர் இப்படிக் குறிப்பிடுவது நம்முடைய சட்டமன்ற மரபை இழிவுபடுத்துவதாகும். சினிமா கவர்ச்சியால்தான் மக்கள் ஓட்டுப் போட்டுவிட்டார்கள் என்று மெத்த வருத்தப்பட்டார்கள்.

இந்தச் சந்தர்ப்பத்தில் சினிமா கவர்ச்சியைப் பற்றி நம்முடைய முதலமைச்சர் கருணாநிதி அவர்களே 1964-ம் ஆண்டு மார்ச் மாதம் 7-ம் தேதி அன்று எதிர்க்கட்சியாக இருந்த நேரத்தில் நிதி நிலை அறிக்கை மீதான விவாதத்தில் பேசுகிற போது சொன்னவற்றை நான் சுட்டிக் காட்டுவது சாலப் பொருத்தமாக இருக்குமென்று கருதுகிறேன்.

''முரண்பட்ட கொள்கைக்குத் தான் தமிழ் நாட்டு மக்கள் அண்மைக் காலத்தில் தங்களுடைய மேலான தீர்ப்பை வழங்கிக் கொண்டிருக்கிறார்கள். அப்படிப்பட்ட தீர்ப்பு திருச்செங்கோட்டில் வழங்கப்பட்டது. பிறகு திருவண்ணாமலையில் தொடர்ந்தது. இப்பொழுது சென்னை மாநகராட்சித் தேர்தலிலே வழங்கப்பட்டிருக்கிறது. தோல்வி அடைந்த காங்கிரஸ் நண்பர்கள் அந்த நல்ல தீர்ப்பை ஏற்றுக் கொள்ளாதது மட்டுமல்ல. கேலி பேசும் அளவுக்கு முற்பட்டிருக்கிறார்கள். 'அது கொள்கைக்குக் கிடைத்த வெற்றி அல்ல, ஏதோ சில சினிமா நடிகர்களுக்காகக் கிடைத்த வெற்றி என்றும், சினிமா நடிகர்கள் தேர்தல் பிரசாரம் செய்யலாமா'' என்று சட்டமன்றத்திலே கேள்விகள் எழுப்பப்பட்டன என்பதை நாம் நன்றாக அறிவோம். சினிமா நடிகர்கள் திராவிட முன்னேற்றக் கழகத் தேர்தல் பிரசாரத்தில் ஈடுபட்டால் அது தங்களுடைய உள்ளத்தில் பெரிய எரிச்சலை ஏற்படுத்தும் என்று கருதுகிறார்களே அவர்கள் அமெரிக்க நாட்டு ஜனாதிபதி தேர்தலில், கென்னடி வெற்றி பெற்றதற்குப் பாடுபட்டது சினிமா நடிகர்கள் என்பதை மறந்து விட்டார்களா? இந்தியத் துணைக் கண்டத்தில் கிருஷ்ணமேனன் பம்பாயிலே தேர்தலில் போட்டியிட்ட நேரத்திலே, கிருஷ்ண மேனன் வெற்றிக்குப் பாடுபட்டது வடபாகத்தில் இருக்கிற பிரபல சினிமா நடிகர்கள் என்பதை ஏனோ மறந்து விட்டார்கள். சினிமா என்றால் ஏதோ ஒரு தீண்டத்தகாத ஒன்று என்றும், சினிமா என்றாலே நாட்டிலே இருக்கக் கூடாத ஒரு கலை என்றும் எண்ணக்கூடிய எண்ணம் காங்கிரஸ் கட்சியிலே இருக்கிற ஒரு சில அமைச்சர்களுக்கு

இல்லாவிட்டாலும், காங்கிரஸ் கட்சியிலே இருக்கிற ஆளும் கட்சி உறுப்பினர்களிடம் பெரும்பாலோருக்கு இருப்பது ஏனோ எனக்குப் புரியவில்லை'' என்று அன்று பேசியிருக்கிறார்.

அதையேதான் நானும் இன்று கேட்கிறேன். உறுப்பினர்கள் இப்படிப் பேசினாலும் தலைவர்கள் அப்படிச் சொல்லலாமா என்பதுதான் என்னுடைய கேள்வி. ஆகவே, அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் சினிமா கவர்ச்சியால் வெற்றி பெற்றதல்ல; கொள்கையைச் சொல்லி வெற்றி பெற்றிருக்கிறது என்று முதலமைச்சர் அவர்களுக்கு சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

1966-ம் ஆண்டு கோவையில் புரட்சித் தலைவர் எம்.ஜி ஆர். அவர்கள் ஒரே நாளில் 80,000 ரூபாயைத் தேர்தல் நிதியாகத் திரட்டித் தந்த நேரத்தில் முரசொலியில் தலையங்கம் எழுதினார் கருணாநிதி. அது இதோ! ''கொடுக்க ஒரு கரம், கொடியவரின் கொடுக்கை நறுக்க மறுகரம் கொண்டவர் புரட்சி நடிகர் எம் ஜி ஆர்.''

1969-ல் இருந்த நிலைமை மாறி 1974-ல் என்ன நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்பதை எண்ணும் போது உள்ளபடியே பரிதாபப்படுகிறேன்.

முதலமைச்சர் அவர்கள் நிதிநிலை அறிக்கையைப் பற்றி முரசொலியில் கருத்துத் தெரிவித்திருக்கிறார். 1974-ம் ஆண்டு மார்ச் திங்கள் 5-ம் நாளில் ''உடன் பிறப்பே'' என்ற கடிதத்தில் ''சட்டியில் உள்ள மாவைக் கொண்டு நம்மால் செய்ய முடிந்த பலகாரம் இது. சூடும் சுவையும் குன்றாமல் இருக்கிறது'' என்று எழுதியிருக்கிறார். இது அவருடைய விமர்சனம்.

மாவுக்குத் தகுந்த பலகாரந்தான் செய்ய முடியும் என்பதை நான் ஒத்துக் கொள்கிறேன், ஆனால் தற்போது சுட்டுவைத்த பலகாரம் ஏற்கனவே மக்கள் முன்னால் புட்டு

வைக்கப்பட்டு ஆறிப் போனவை என்பதை மட்டும் தயவு செய்து மறந்து விடக்கூடாது என்று சொல்லிக் கொள்கிறேன்.

''கூனன் நிமிர, குருடன் பார்வை பெற இந்த அரசு புதிய திட்டத்தை அறிவித்திருக்கிறது'' என்று சொன்னார்கள். 53 பக்கங்கள் கொண்ட நிதிநிலை அறிக்கையை அவையில் படிக்கின்ற நேரத்தில் நான் நன்றாகக் கூர்ந்து கவனித்தேன். சட்டமன்றத்திலே உள்ள உறுப்பினர்கள் முதுகுவலி தாங்காமல் நிமிர்ந்து உட்கார்ந்தார்களே தவிர, நாட்டிலுள்ள கூனன் நிமிரவில்லை.

மாண்புமிகு டாக்டர் மு கருணாநிதி: தாங்களாவது நிமிர்ந்ததில் எனக்கு மகிழ்ச்சி.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: நீங்களும் சேர்ந்துதான் நிமிர்ந்தீர்கள்.

நாவின் நடனங்களும், நளினங்களும் ஏராளமாக உள்ளன. நாட்டு மக்களுக்குத் தேவையான திட்டங்கள் குறைந்துள்ளன. நிதிநிலை அறிக்கையில் பக்கங்கள் நீண்டிருக்கிறதே தவிர, நாட்டு மக்களின் துக்கங்கள் குறைய என்ன ஆலோசனை சொல்லப்பட்டிருக்கிறது என்று இனிமேல்தான் பொறுத்துப் பார்க்கவேண்டும். (குறுக்கீடு) முதலமைச்சர் அவர்கள் ஏதாவது கருத்துச் சொல்ல வேண்டுமென்றால் எழுந்து சொல்லலாம்.

எனவே இந்த நான்கு ஆண்டு அனுபவத்தை வைத்துப் பார்க்கின்ற நேரத்தில் முதலமைச்சர் அவர்கள் புதிதாக ஒரு கழகத்தைத் துவக்கி இருக்கிறார். பூம்புகார் போக்குவரத்துக் கழகத்தை—காலையிலே கூட ''புகாரிலே ஆரம்பிக்கலாமே''? என்று கேட்ட நேரத்தில் அது சிறந்த ஆலோசனை என்று பொதுப்பணித் துறை அமைச்சர் அவர்கள் சொன்னார்களே தவிர, ''செய்வோம்'' என்ற உறுதியைத் தரவில்லை. புகார் நகரத்திற்கு ஒரு சிறப்பு

ஏற்படுத்துவதற்காக இந்தப் பூம்புகார் கப்பல் போக்கு வரத்துக் கழகத்தின் தலைமையிடமாக பூம்புகார் நகரில் துவங்கவேண்டுமென்று நான் விரும்பி வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

மாண்புமிகு திரு. க. அன்பழகன்: இது கப்பல் போக்குவரத்துக் கழகம். பூம்புகார் ஓரத்தில் கப்பல் நிற்கக்கூடிய அளவிற்கு —ஏற்கனவே இருந்த நகரம் மூழ்கிப் போய்விட்டது—ஐந்து மைல் தொலைவில், ஆறு மைல் தொலைவில் கூட கப்பல் நிற்கமுடியாது. வேண்டுமானால் கட்டு மரத்தை விடச் சொல்லலாம். பூம்புகார் கப்பல் போக்குவரத்துக் கழகம் என்பது அந்த நிறுவனத்தின் பெயரே தவிர, அந்த ஊரிலிருந்து புறப்படுவது என்பதல்ல.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: வேண்டுமானால் கட்டு மரத்தை விடச் சொல்லலாம் என்று சொல்கிறார் அமைச்சர் அவர்கள். நீங்கள் யாரையும் கட்டுமரத்தில் கட்டி கடலில் விடாமல் இருந்தால் சரி, அந்தக் கப்பல் போக்குவரத்துக் கழகத்தை நிறுவும் போது அதன் தலைமையிடத்தை அங்கு வைத்தால் என்ன என்றுதான் நான் கேட்கிறேன். அது ஒரு நிறுவனத்தின் பெயர் என்று அமைச்சர் அவர்கள் சொலகிறார்கள். கப்பல் விடும்போது என்னென்ன சொல் வார்களோ பொருத்திருந்துதான் பார்க்கவேண்டும்.

முதலமைச்சர் அவர்கள் இந்த நிதிநிலை அறிக்கையில் ஏராளமான திட்டங்களை எல்லாம் கோடிட்டுக் காட்டியிருக் கிறார். செய்த திட்டங்கள் அத்தனையையும் சுட்டிக் காட்டு வது என்பது அரசாங்கத்தின் பெருமையை உயர்த்துவ தற்கு என்றாலும் ஏற்கனவே அரசியல் அனுபவம் பெற்று, முதல் அமைச்சராக இருப்பதையும் வைத்தும், தன் அனுப வத்தை வைத்துக்கொண்டும், தன் எண்ணத்தை நிறை வேற்ற ஒரு ஆராய்ச்சிக் கட்டுரை எழுதி இன்னொரு டாக்டர் பட்டம் பெறுவதற்கு இந்த நிதிநிலை அறிக்கையை அளித்துள்ளார் எனறு கூறி இந்த நிதிநிலை அறிக்கையை என்னால் வரவேற்க முடியாமைக்கு மெத்த வருத்தப்பட்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன். நன்றி, வணக்கம்.



# 6

## 1974—75ஆம் ஆண்டுக்கான பின்தங்கிய வகுப்பினர் நலம், பத்திரப்பதிவு ஆகிய மானியக் கோரிக்கை களின் மீதான விவாதத்தில் 16—3—74ஆம் தேதியன்று சட்டப் பேரவையில்

## திரு. பெ. சௌந்தரபாண்டியன் அவர்கள் ஆற்றிய உரை.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: தலைவரவர்களே, நடப் பாண்டுக்காக பின்தங்கிய வகுப்பினர் நல அமைச்சரவர் கள் கொண்டுவந்திருக்கின்ற மானியக் கோரிக்கைகள் மீது அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் என்னுடைய வெட்டுத் தீர்மானங்களை ஒட்டி சில கருத்துக் களைச் சொல்வதற்கு வாய்ப்பு கிடைத்தமைக்காக முதலில் நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

என்னுடைய வெட்டுத் தீர்மானத்தில் பின்தங்கியோர் நலத்துறையில் அதிகமான அலுவலர்களை நியமித்து— அதாவது மாவட்டந்தோறும் தனியாக அதிகாரிகள் நியமிக்கப்பட்டு, அவர்களுக்கு உதவிப் பணியாளர்களை அமர்த்தி இந்தத் துறையில் பணியை மேலும் விரிவாக்க வும், விறுவிறுப்பாக்கவும் வேண்டிய நடவடிக்கைகளை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

இந்த பின்தங்கிய வகுப்பினர் நலத்துறையைப் பொறுத்தவரையில் 1949-ஆம் ஆண்டு முதல் இந்த அரசாங்கமும் மத்திய அரசாங்கமும் பல திட்டங்களைத் தீட்டி பணிகளை நிறைவேற்றிக் கொண்டிருக்கிறார்கள். இருந்தாலும் 1969-ஆம் ஆண்டு மே மாதம் 2-ம் நாள் அன்று பிற்பட்டோர் நலத்துறை என்ற துறையை பிற்பட்ட மக்களின் நலனுக்காக மேலும் பல நல்ல திட்டங்களைத்

தீட்டி விரைவாக நிறைவேற்றுவதற்காக மாண்புமிகு முதலமைச்சரவர்கள் துவக்கி வைத்தார்கள். துறையைத் துவக்கியதில் எந்த விதமான கருத்து வேறுபாடும் எனக்கு இல்லை. ஆனால், மேற் கொண்டு விரிவாக்கப்படாததினால் செய்யப்படுகிற பணிகள் காலதாமதம் ஆகின்றன; அதனால் பல சிரமங்கள் ஏற்படுகின்றன.

பிற்பட்ட மக்களுக்கு செய்யப்பட வேண்டிய வசதிகள் ஒழுங்காகக் கிடைக்கவில்லை என்பதை நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். பிற்பட்ட மக்களுக்கு, நலிந்த மக்களுக்கு உரிய நேரத்தில் சலுகைகள் சென்றடைய வேண்டுமென்ற நோக்கத்தில்தான் இத்துறை தொடங்கப்பட்டது. அந்த நோக்கத்தை நான் வரவேற்கிறேன். ஆனால் அதற்குத் தகுந்த அளவுக்கு துறை விரிவாக்கப்படவில்லை; அதனால் இது ஒரு மந்தப் போக்கில் இருக்கிறது என்பதை வருத்தத் துடன் குறிப்பிட விரும்புகிறேன்.

1969-ம் ஆண்டு துவக்கப்பட்ட இத்துறை 1974-ம் ஆண்டு வரையில் மாநில அளவிலேதான் ஒரு இயக்குநரை வைத்து செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. மாவட்ட அளவில் இதற்கு என்று தனிப்பட்ட நல அதிகாரிகள் இது வரையில் நியமிக்கப்படவில்லை. மாவட்ட அளவில் தனி அலுவலர்களும் இல்லாமல் இதரப் பணியாளர்களும் இல்லாமல் எப்படிப்பணியாற்ற முடியும் என்பதை ஏன் இந்த அரசு சிந்திக்கவில்லை என்று எண்ணும்போது உள்ள படியே வருத்தப்பட வேண்டியதாகத் தான் இருக்கிறது.

மாவட்ட நல அதிகாரி என்று ஒருவர் அரிசன நலத் துறைக்கும், பிற்பட்டோர் நலத் துறைக்கும் சேர்த்து இருக்கிறார். இந்த இரண்டு துறைகளையும் ஒரே அதிகாரியே கவனித்து வருவதால் அவருக்கு இரண்டு துறைகளையுமே சரியாகக் கவனிக்க முடியவில்லை. அதனால் இந்த இரண்டு பிரிவு மக்களுக்கும் செய்ய வேண்டிய வாய்ப்பும் வசதியும் செய்து கொடுக்க முடியவில்லை. அவர்களும் பெற முடிய வில்லை. இது எவ்வளவு தொல்லைகளைக் கொடுக்கும், எவ்

வளவு கஷ்டங்களைக் கொடுக்கும் என்பதை மாண்புமிகு முதலமைச்சர் அவர்களும், மாண்புமிகு பின்தங்கிய நல அமைச்சர் அவர்களும் சிந்தித்துப் பார்க்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஆகவே ஒவ்வொரு மாவட்டத் திற்கும் தனியாக பிற்பட்டோர் நலத் துறை அதிகாரியை யும் அவருக்கு கீழுள்ள பணியாளர்களையும் இந்த ஆண்டி லாவது அமைத்து உரிய நடவடிக்கைகளை எடுக்க வேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

சமுதாயத்தில் பின் தங்கியோர் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். நம்முடைய நாட்டிலே ஜாதி பாகுபாட்டி லும் கல்வி பாகுபாட்டிலும் பிற்பட்டோர்கள் ஏராளமான வர்கள் இருக்கிறார்கள். அவர்களையெல்லாம் முன்னுக்குக் கொண்டுவர இப்போது இருக்கின்ற நடைமுறையில் கொஞ்சம் மாற்றம் செய்யவேண்டும். சட்டத்தின் போக்கு ஒரு பக்கம் இருந்தாலும், சமுதாயத்தில் இருக்கின்ற பொருளாதாரச் சூழ்நிலையைக் கவனித்து எந்தெந்த சமுதாயத்தினர் பொருளாதாரத்தில் சீர்கெட்டிருக்கிறார்கள் என்று கண்டறிந்து அவர்களுக்கும் அரசாங்கம் உதவி களைச் செய்ய வேண்டும். எந்தச்சமுதாயத்தினராக இருந் தாலும் பொருளாதாரத்தில் நலிந்திருக்கிறவர்கள், பின் தங்கியவர்கள் ஆகியோருக்கும் உரிய வசதிகளைச் செய்து கொடுத்தால்தான் அவர்களும் முன்னேற முடியும். இந்த அரசு அதில் அக்கறை செலுத்த வேண்டுமென்று வேண்டி விரும்பிக் கேட்டுக்கொள்கிறேன்.

பின் தங்கியோர் பட்டியலில் சாதி பாகுபாடு மட்டுமல்ல மத பாகுபாடும் ஏராளமாக இருக்கிறது. கிருஸ்த்துவர்கள், முஸ்லிம்கள், இந்துமதத்தைச் சேர்ந்தவர்கள் என்று அவர்களுக்குள்ளே பாகுபாடு இருக்கிறது. ஒரே மதத்தி லுள்ள கிருஸ்த்துவர்களுக்குள்ளும் அங்கிருக்கிற சாதி பாகுபாடு இன்னும் மாற்றப்படவில்லை. ஆனால், அவர்களை பின்தங்கியோர் பட்டியலில் சேர்க்கிற முறையில் ஏராள மான மாறுபாடுகளும், கருத்து வேறுபாடுகளும் இருப்பதை

நாம் நன்ருக அறிவோம் ஆகவே எந்த மதத்தினராக இருந்தாலும் அவர்களை ஒருங்கிணைத்து பின் தங்கியோர் பட்டியலில் சேர்க்க இந்த அரசாங்கம் தகுந்த நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று விரும்பி வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன்.

நம்முடைய திட்டப்படி இந்தச்சமுதாயத்திற்கு கல்வி வசதியை அதிகப்படுத்துவது, நிறைவேற்றுவது என்பதற்காக அளிக்கப்படுகிற உதவி உயர்ந்து கொண்டே வந்திருப்பதை அறிகிறோம். இதற்காக ஒவ்வொரு ஆண்டும் பின் தங்கியோர் நலத்துறை எவ்வளவு செலவிடுகிறது என்கிற குறிப்பு இங்கே கூறப்பட்டிருக்கிறது. குறிப்பாக அமைச்சரது உரை என்று அளிக்கப்பட்டிருக்கிற புத்தகத்தில் இரண்டாம் பக்கத்தில் 1968-69-ஆம் ஆண்டில் இந்த நலத்துறை ஆரம்பிக்கப்பட்டதற்கு முதல் ஆண்டில் செலவழிக்கப்பட்டது ரூ. 187 இலட்சம் ஆகும்.

அது படிப்படியாக உயர்ந்து 1974-75-ம் ஆண்டிற்கு ரூ. 608 இலட்சமாக ஒதுக்கப்பட்டுள்ளது என்று கூறப்பட்டிருக்கிறது. பிறகு இன்னெரு பக்கத்தில் (பக்கம் 19) 1974-75-ம் ஆண்டிற்கான மொத்த ஒதுக்கீடு ரூ.618.81 இலட்சங்களாகும் என்று கூறப்பட்டிருக்கிறது. எது உண்மை? ஒதுக்கப்பட்டிருப்பது ரூ. 608 இலட்சமா? அல்லது ரூ. 618.81 இலட்சமா? இதை அமைச்சர் அவர்கள் தெளிவுபடுத்த வேண்டுமென்று விரும்பி வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன். குறை சொல்ல வேண்டும் என்பதற்காக சொல்லவில்லை. அச்சுப் பிழை என்ருலும் எது சரி என்பதை விளக்கவேண்டுமென்றுதான் கேட்டுக்கொள்கிறேன்.

மேலும் இந்த சமுதாயத்தின் வளர்ச்சிக்கு இவர்களது பொருளாதார நிலையை உயர்த்திட நாம் பலவகையிலும் மிகுந்த அக்கறை காட்டியாக வேண்டும். ஆகவே பெருகிவரும் இந்தச் சமுதாயத்தின் தேவையைஒப்பிடுகிறபோது,

நாம் இவர்களுக்காக ஒதுக்கியிருக்கிற தொகை மிகவும் குறைவாகும். கூடுதலாக ஒதுக்கவில்லை என்று நான் குறை சொல்லவில்லை 1969-க்கு முன்பு நாம் எவ்வளவு செலவழித்தோமோ அதைவிட அதிகமாகத்தான் இந்த அரசாங்கம் ஒதுக்கியிருக்கிறது. இருந்தாலும் ஒதுக்கப்பட்ட தொகையும் ஓரளவு பாதி நிலையில்தான் இருக்கிறது என்பதை நாம் அத்தனைபேரும் ஏற்றுக்கொண்டாக வேண்டும். இதற்கு பரிகாரம் காண இன்னும் கூடுதல் தொகை ஒதுக்கித்தர வேண்டிய பொறுப்பு இந்த அரசுக்கு இருக்கிறது.

மேலும் சமுதாயத்தில் யார் யார் பின்தங்கிய நிலையில் பயன்பெறத் தகுதி படைத்தவர்களாக இருக்கிறார்கள் என்கிற பட்டியலை மாவட்ட அளவிலும் வட்ட அளவிலும் தயாரிக்கிற ஒரு சூழ்நிலையை நாம் உருவாக்க வேண்டும் அப்படி உருவாக்கி ஆங்காங்கு உள்ளவர்கள் யார் யாரை அணுகி எத்தகைய உதவியைப் பெற முடியும் என்பதை விளக்கினால் தான் மிகுந்த பயன் ஏற்படும் அதற்கான வழி முறைகளை அரசாங்கம் பின்பற்ற வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

பின்தங்கிய வகுப்பு மாணவர்களுக்கு நாம் கல்விக்காக ஒன்பதாவது வகுப்புக்கு மேல்தான் உதவி அளிக்கிற நிலைமை இருக்கிறது. ஆறாவது வகுப்பு முதல் 9-வது வகுப்பு வரை படிக்கிற ஏழை எளிய மாணவர்கள் புத்தகம் வாங்கக் கூட பணமின்றி அவதிப்படுகின்ற சூழ்நிலையைப் பார்க்கிறோம் அதை கருத்தில் கொண்டு ஆறுவது வகுப்பு முதல் படிக்கிற ஏழை, பின்தங்கிய வகுப்பு மாணவர்களுக்கும் இந்தச் சலுகையை நீட்டித்துக் கொடுக்க வேண்டுமென்று நான் வலியுறுத்திக் கூற ஆசைப்படுகிறேன்.

இன்னொன்றையும் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். பின்தங்கிய வகுப்பு என்பதாக சான்றிதழ் வாங்குகிற நேரத்தில் சிலசிக்கல்கள் சிலபல நேரங்களில் விண்ணப்

பத்தையே திருப்பி விடுகின்ற சூழ்நிலை ஏற்படுவதை நடைமுறையில் பார்க்கிறோம். அவர்களுக்கு வழங்கப்படுகிற எஸ்.எஸ்.எல்.சி புத்தகத்தில் அல்லது டி.சி.-யில் அவர்கள் எந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்பது குறிக்கப்படுவதில்லை. அதன் காரணமாக தாசில்தாரிடமோ, வேறு அரசாங்கப் பதிவு பெற்ற அதிகாரியிடமோ கம்யூனிட்டி சர்ட்டிப் பிக்கேட் பெறப்போகும்போது பலவிதமான சங்கடங்கள் ஏற்படுகின்றன. ''உங்கள் புத்தகத்திலேயே குறிப்பிடப்பட வில்லை. நாங்கள் எப்படிக் கொடுப்பது!'' என்று திருப்பிவிடுகிறார்கள். ஆகவே பள்ளிகளிலேயே அந்தந்த மாணவர்கள் எந்தப் பின்தங்கிய வகுப்பைச் சேர்ந்தவர் என்பதைப்பற்றி சர்ட்டிபிக்கேட்டிலேயேகுறிக்கப்பட வேண்டும் என்று தெரிவித்துக்கொள்கிறேன் அல்லது வேறு ஏதாவது சுலபமான வழி முறையைக் கண்டுபிடித்து அதிகாரிகளுக்கு அறிவித்தாகவேண்டும் என்று சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

மேலும் பின்தங்கிய வகுப்பு மாணவர்களுக்கு சம்பளச் சலுகை அளிக்க இப்போதுள்ள வருமான வரம்பு 2 ஆயிரம் ரூபாயாக இருக்கிறது. விலைவாசியேற்றம் அதிகமாகவும், வருவாய் குறைந்தும் இருக்கிற இந்த நேரத்தைக் கருத்தில் கொண்டு இந்த ஆண்டு வருமான உச்ச வரம்பை 3 ஆயிரமாக உயர்த்துவது எவ்வளவோ பொருத்தமாக இருக்கும். இதையும் அரசாங்கம் கருத்தில் வைக்க வேண்டும்.

மேலும் உபகாரச் சம்பளம் வழங்குகிற நேரத்தில், உபகாரச் சம்பளம் வழங்குவதற்கு முதல் ஆண்டில் நடந்த தேர்வில் 40 சதவிதம் மார்க் வாங்கியவர்களுக்கே இது அளிக்கப்படுகிறது. ஏற்கெனவே அது கூடுதலாக இருந்தது. இந்த அரசாங்கம் வந்து அதை 40 சதவிதமாகக் குறைத்தது என்றாலும், இதையும் மறுபரிசீலனை செய்து, முதலாண்டில் தேர்ச்சி பெற்ற எல்லா மாணவர்களுக்கும் உபகாரச் சம்பளத்தை அளிக்கத்தக்க ஏற்பாடு செய்ய

வேண்டும், எந்தவிதமான பாகுபாடும் இருக்கக் கூடாது என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

உதவி பெறுகின்றவர்கள் அதனால் எந்தவகையில் பயன்பெறுகிறார்கள், விடுதியில் இருக்கிற நேரத்தில் எவ்வளவு நேரம் படிக்கிறார்கள், அவர்களுடைய முன்னேற்றம் என்ன என்பதை எல்லாம் அவர்களுடைய முன்னேற்றத்தில் அக்கறை செலுத்தி பார்த்துக்கொள்ள வேண்டியது அரசாங்கத்தின் கடமை என்பதை வலியுறுத்திக் கூறக் கடமைப்பட்டிருக்கிறேன்.

ஆசிரியர்களுக்கு நாம் இன்னும் போதுமான வீடுகள் கட்டித் தரவில்லை. வீட்டுப் பிரச்சினைதான் கிராமாந்திரங்களில் பெரும் பிரச்சினையாக இருக்கிறது. ஆகவே, ஆசிரியர்கள் மீது அதிக அக்கறை காட்டி, கிராமப்புறங்களில் அவர்களுக்கு வீடுகள் கட்டித்தர ஆவன செய்யவேண்டும்.

அடுத்து, இன்றையதினம் பின்தங்கிய மாணவர்கள் விடுதிகள் பல வாடகைக் கட்டடங்களிலேயே இருந்துகொண்டிருக்கின்றன. இன்றைய தினம் ஆண்டுக்குப் பல லட்சம் ரூபாய் வாடகையாகவே கொடுத்துக் கொண்டிருக்கிறோம். ஆகவே ஒரு தீவிர திட்டத்தை ஏற்படுத்தி, ஆண்டுக்கு இவ்வளவு விடுதிகளைக் கட்டுவது என்கிற முறையில் எல்லா விடுதிகளும் சொந்தக் கட்டிடத்தில் இயங்கும்படியாகச் செய்யவேண்டும்.

படித்த மாணவர்களுக்கு வேலைவாய்ப்பை ஏற்படுத்திக் கொடுப்பதில் நாம் எவ்வளவுதான் 31 சதவீதம் பிற்பட்ட இனத்து மாணவர்களுக்குக் கொடுக்கவேண்டும் என்கிற விதியை வைத்திருந்தாலும் அரசுத்துறையிலும், தனியார் துறையிலும் இந்த அளவுக்கு இன்னும் தரப்படவில்லை. ஏதோ காரணங்களைச் சொல்கிறார்கள். அப்படியின்றி கண்டிப்பாக இந்த 31 சதவீகிதமாவது இவர்களுக்குத் தருவதற்கான நடவடிக்கையை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று இந்த நேரத்தில் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

நம்முடைய உள்ளாட்சித் துறையைப் பொறுத்த மட்டில், அங்கே அளிக்கப்படுகின்ற வேலை வாய்ப்பு பின் தங்கிய மக்களுக்கு உரிய சதவிகிதம் தரப்படுவதில்லை. இந்தச் சூழ்நிலைபற்றி பல்லாண்டு காலம் பேசப்பட்டு வருகிறது. ஆசிரியர் பணியாக இருந்தாலும், அலுவலர் பணியாக இருந்தாலும், பியூன் வேலைக்காக இருந்தாலும், அங்கே சிபாரிசு உள்ளவர்களுக்கும், பெருந் தலைவர்கள், ஆணையாளர்கள், பஞ்சாயத்து போர்டு தலைவர்கள், இவர்களிக்கு வேண்டியவர்களுக்கும்தான் வாய்ப்பு அளிக்கப்படுகிறதே தவிர, விகிதாசாரப்படி வேலை அளிக்கிற முறை அங்கே இல்லை.

ஆகவே, இந்த அரசாங்கம் உள்ளாட்சி மன்றங்களைப் பொறுத்த வரையிலும் கண்டிப்பாக இருந்து நாம் ஒதுக்கியிருக்கிற சதவிகிதத்தை அவர்கள் அளிக்கிறார்களோ என்பதைக் கண்காணிக்க, ஒரு கண்காணிப்புக் குழுவை அமைத்தாலும் சாலப் பொருத்தமாக இருக்கும். அப்படி எந்தெந்த ஊராட்சி மன்றங்களில் அளிக்கப்படவில்லையோ, அதை எல்லாம் ஆராய்ந்து, மீண்டும் அளிக்கப்பட தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

பின்தங்கிய சமுதாயத்தினரைப் பொறுத்தமட்டிலும், ஏன் பின்தங்கியவர்கள் என்று வைத்திருக்கிறோம் என்றால், அவர்கள் பொருளாதாரத் துறையில் மிகவும் பின்தங்கி, வருவாய் இல்லாமல் மிகவும் சிரமப்படுகிறார்கள். பொருளாதாரத் துறையில் பின்தங்கியவர்களாக, தொழிலில் முன்னேற முடியாதவர்களாக இருப்பவர்களை நாம் கருத்திலே கொண்டு, தனிச் சலுகை கொடுத்து உதவி செய்து வருகிறோம் நம்முடைய நாட்டைப் பொறுத்தவரையிலும் தனித்தனியாகப் பிரித்து, எது எது பின்தங்கிய பகுதி, எங்கெங்கு பின்தங்கிய சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் வாழ்கிறார்கள், என்னென்ன தொழில்கள் செய்கிறார்கள்

என்பதைக் கண்டறிந்து, அவர்களது வருவாயைப்பெருக்க தக்க வழிமுறைகளைக் காணவேண்டும்.

தொழிற்சாலை துவங்க வேண்டுமா, தொழிற்கூடங்களைத் துவங்க வேண்டுமா, அவர்கள் சிறுதொழில் செய்ய உதவ வேண்டுமா என்பதைக் கண்டறிந்து, அதற்கு வழிவகைகளை உண்டாக்கி, அவர்களுக்கு வேலை வாய்ப்பை உண்டாக்கவும், அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும் வருவாயைப் பெருக்கவும், பின்தங்கிய பகுதிகளில் தொழிற்சாலைகளையும், தொழிற்கூடங்களையும் உருவாக்குவதில் இந்த அரசாங்கம் மிகுந்த கவனம் செலுத்த வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

வேளாண்மைத் துறையைப் பொறுத்தவரையில், இப்பொழுது கொடுக்கப்படுகின்ற விவசாயக் கடன்கள் பின்தங்கிய சமுதாயத்தினருக்கு வழங்கப்படுவதில்லை. அதற்கு என்ன காரணம் என்பதை இந்த அரசாங்கம் எண்ணிப் பார்க்க வேண்டும். பின்தங்கியவர்கள் வேளாண்மையில் ஈடுபட்டு இருந்தால், அவர்களுக்கு எந்த எந்த வகையில் உதவி அளிக்க முடியுமோ, அந்தந்த வகையில் உதவி அளிக்க வேண்டும். ஒவ்வோர் ஆண்டும் கிணறு வெட்டவும் வேறு பல காரியங்களுக்கும் மானியம் தருவதையும் கடன் அளிப்பதையும் மீண்டும் மறுபரிசீலனை செய்ய வேண்டிய அவசியம் இருக்கிறது என்பதை நான் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன்.

நம்முடைய நாட்டைப் பொறுத்தவரையிலும் பின்தங்கியவர்கள் ஏராளம் இருக்கிறார்கள். நாம் மிகுந்த அக்கறையோடு கவனிக்க வேண்டியது நம்முடைய சமுதாயத்திற்கு ஊழியம் செய்கின்ற சமுதாயத்தின் கீழுள்ள சவரத் தொழிலாளர்களையும் சலவைத் தொழிலாளர்களையும் மறந்துவிட முடியாது. ஆகவே, சலவைத் தொழிலாளர்கள், சவரத் தொழிலாளர்கள் எத்தனை பேர் என்ற ஒரு பட்டியலைத் தயாரித்து, புள்ளிவிவரம் தயாரித்து, யார் யாருக்கு இருக்க இடமில்லை, வீட்டு வசதி இல்லை

என்பதை முதலிலே கண்டறிந்து அவர்கள் வசிக்க வீடளிப்பது நம்முடைய கடமையும் பொறுப்புமாகும். இதை உடனடியாகச் செய்ய முடியாது. அந்த அளவுக்கு இந்த நாட்டிலே பொருளாதாரம் இல்லை. ஆகவே, படிப் படியாக அதை நிறைவேற்றுவதற்கு ஒவ்வோர் ஆண்டும் கூடுதலாக தொகை ஒதுக்கி இந்த சவரத் தொழிலா ளர்கள், சலவைத் தொழிலாளர்கள் வாழ்வில் மிகுந்த அக்கறை செலுத்த வேண்டுமென்று நான் விரும்பி வேண்டிக் கேட்டுகொள்கிறேன்.

நாம் ஒவ்வோர் ஆண்டும் சலவைத் தொழிலாளர் களுக்கும் சவரத் தொழிலாளர்களுக்கும் கருவிகள் அளிப் பதிலே கண்ணும் கருத்துமாக இருக்கிறோம். அந்தத் துறைகளில் ஆரம்பத்தில் கொடுத்த கருவிகளைவிட, ஆரம் பத்தில் செலவிட்ட தொகைகளைவிட, ஒவ்வோர் ஆண்டும் படிப்படியாக உயர்த்திக்கொண்டுதான் வருகிறோம். இருந் தாலும், அவர்களுடைய தேவைகளை நாம் முழுவதுமாக நிறைவேற்ற பொருளாதார வசதி இல்லை. ஆகவே, இதைக் கருத்திலே கொண்டு எத்தனை பேர் மனுக்கள் போடுகிறார்களோ, அவர்களிலே எத்தனை பேர்களுக்குக் கொடுக்க முடியும், எத்தனை பேர்களுக்குக் கருவிகளை வழங்க முடியும் என்பதை திட்டவட்டமாக அறிந்து கொண்டு அத்தனை பேர்களுக்கு மட்டும் அதற்கு வேண்டிய மனுக்களை நாம் வழங்கவேண்டும்.

வீணாக ஆயிரக்கணக்கானவர்கள் மனு செய்கிற நேரத்தில், பல பேருக்குக் கிடைக்காத சூழ்நிலை ஏற்படு கிறது. ஆகவே, அதற்கென்று ஒரு பட்டியல் தயாரித்து, இந்த ஆண்டு இத்தனை பேருக்கு வழங்குகிறோம், அடுத்த ஆண்டு இத்தனை பேருக்கு வழங்குவோம், அதற்கு அடுத்த ஆண்டு இத்தனை பேருக்கு வழங்குவோம் என்று முன்னாலேயே அறிவித்து, அந்தத் திட்டத்தை அமுல் நடத்தினால்தான் அவர்களது ஏமாற்றத்தைப் போக்க வழி வகை ஏற்படும். ஆகவே, இந்த அரசாங்கம் அப்படி

திட்டம் போட்டு, அவர்களது ஏமாற்றத்தைப் போக்க வழிவகை காணவேண்டும்.

இந்தப் பின் தங்கியவர்களிலே முக்கியமானவர் மீனவர் சமுதாயத்தினர். கடலோரப் பகுதிகளில் வசிக்க வீடில்லாமல், வருவாயைப் பெருக்க வழியில்லாமல், வாழப் போதுமான வசதியில்லாமல், மீனவர் சமுதாயம் சிரமப்பட்டுக் கொண்டிருப்பதை நாம் மறந்து விடக்கூடாது. கடலிலே சென்று, கடல் வளத்தையும், கடல் உணவையும் இந்த நாட்டு மக்களுக்குத் தருகின்ற அந்த மக்கள் ஆண்டாண்டு காலமாய் நலிந்து கொண்டிருப்பதை கருத்திலே கொண்டு அவர்களுக்கு எந்த எந்த வகையிலே உதவ முடியுமோ, அந்த வகையில் உதவ, கல்வி வசதியையும், இன்னும் பல வசதிகளையும் அளிப்பதற்கு நாம் முன்னோடி திட்டம் தீட்டி செயல்பட வேண்டுமென்பதை இந்த அரசாங்கம் கருத்திலே கொள்ளவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

பொற்கொல்லர்களைப் பற்றி குறிப்பிடாமல் இருப்பது நல்லதல்ல. சமுதாயத்திற்குத் தேவையான அணிகலன்களையும் ஆபரணங்களையும் செய்து தருகின்ற பொற்கொல்லர்களுக்கு எந்த வகையில் உதவி இருக்கிறோம் என்பது கொஞ்சம் கேள்விக் குறியாகத்தான் இருக்கிறது. மத்திய அரசாங்கம் எந்த எந்த வகையில் உதவி செய்கிறோம் என்று வாக்களித்ததோ, மாநில அரசாங்கம் எந்த எந்த வகையில் உங்களுடைய வருவாயைப் பெருக்க, கைதூக்கி விடக் காத்திருக்கிறோம் என்று சொன்னதோ, அத்தனையும் கொஞ்சம் ஆறப்போடப்பட்டிருக்கிறது என்பதைக் காணும் போது நாம் மிகுந்த கவனம் செலுத்த வேண்டியவர்களாக இருக்கிறோம் வாழ வழியில்லாமல், போதுமான வருவாய் இல்லாமல், கிராமங்களில் பல பொற்கொல்லர்களது குடும்பங்கள் சிரமப்பட்டுக் கொண்டிருப்பதை நாம் பார்க்கிறோம் ஆகவே, பொற்கொல்லர்களுக்கு வேலை வாய்ப்பு அளிப்பதிலும், கல்வியில் சலுகை அளிப்பதிலும், அவர்களது பொருளாதார வசதிகளைப் பெருக்குவதிலும்,

அதற்காக தொழிற்கூடங்களைத் துவக்கி, அவர்களை வேலைக்கு அமர்த்த எந்த எந்த வகையில் திட்டம் தீட்ட வேண்டுமோ அந்தந்த வகையில் திட்டம் தீட்டி செயல் படுத்த வேண்டுமென்று நான் இந்த நேரத்தில் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

பின்தங்கியோர் நலக் குழு வருடத்திற்கு இருமுறை தான் கூடிக் கொண்டிருக்கிறது. இரண்டு முறை கூடி ஆய்வு செய்கின்ற நேரத்தில் அவற்றை மறுபரிசீலனை செய்ய இன்னும் 6 மாதம் ஆகிறது. ஆகவே, உரியகாலத் தில் அவர்கள் பணியைச் செவ்வனே செய்ய வேண்டு மென்றால் ஓராண்டுக்கு மூன்று முறையாவது கூடி விவா திக்க வேண்டும், நம்முடைய செயல் திட்டத்தை வகுக்க வேண்டும். ஆகவே 6 மாதம் என்பதை 4 மாதத்திற்கு ஒரு முறை பின்தங்கிய குழு கூடுகின்றவகையில் அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை நம்முடைய அமைச்சரவர்கள் செய்ய வேண்டுமென்று விரும்பி வேண்டுக் கேட்டுக் கொள்கிறேன்.

பின்தங்கிய சமுதாயத்தில் இருக்கிறவர்கள் பட்டியலைத் தொகுத்து, ஒவ்வொரு மாவட்டத்திலும், ஒவ்வொரு வட்டத்திலும் மக்கள் பார்க்கக் கூடிய அளவுக்குப் பகிரங்க மாக அதனை வெளிப்படுத்த வேண்டும். அப்படி செய்வோ மானால், யார் யார் எந்த எந்த ஜாதியினர் பின்தங்கியோர் பட்டியலில் இடம்பெற்றிருக்கின்றனர் என்பதை அனைவரும் தெரிந்து கொள்ள வாய்ப்பு வசதி இருக்கும். ஆகவே, இந்த முறையை அரசு பின்பற்றவேண்டும்.

இந்த அரசாங்கம் எடுப்பது நல்ல முயற்சியாக இருந் தாலும், ஒதுக்குகின்ற பணம் குறைவாக இருக்கிறது. சமுதாயத்தின் அடித்தளத்திலே உள்ள, பாதிக்கப்பட்ட மக்கள் மேன்மேலும் பொருளாதாரத் துறையிலே உயர்வ தற்கு இன்னும் சுறுசுறுப்பாகவும் விறுவிறுப்பாகவும் பொருளாதாரத்தில் கொஞ்சம் தாராளம் காட்டவேண்டு மென்று கேட்டு, இந்த அளவோடு முடிக்கிறேன். வணக்கம்.

*

# 7

## 1974-75 ஆம் ஆண்டுக்கான "மாநில சட்ட மன்றம்" பற்றிய மானியக் கோரிக்கையின் மீதான விவாதத்தில் கலந்துகொண்டு சட்டப் பேரவையில் 8—4—74 ஆம் தேதியன்று

## திரு. பெ. சௌந்தரபாண்டியன் அவர்கள் ஆற்றிய உரை.

* திரு. பெ. சௌந்தரபாண்டியன்: தலைவர் அவர்களே, மாநிலச் சட்டமன்ற மானியக் கோரிக்கையைப் பற்றி என் சார்பாகவும் என் கட்சி சார்பாகவும் கொடுக்கப்பட்டுள்ள வெட்டுத் தீர்மானத்தை ஆதரித்து என் கருத்துக்களைச் சொல்ல முன்வருகிறேன்.

தமிழக சட்டமன்றம் மிகப் பெரும் பாரம்பரியம் வாய்ந்தது என்பதை நாம் அத்தனை பேரும் ஏற்றுக்கொள்கிறோம். இந்த முறை தொடர்ந்து நீடிக்கப்பட வேண்டும் என்பதற்காக நாம் அனைவரும் ஒருமித்த கருத்தோடு இனிமேல் பாடுபடுவது சாலப் பொருத்தமாக இருக்கும் என்பதை நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். நம் அரசியலமைப்பில் சட்டமன்றத் துறை, நிர்வாகத் துறை, நீதித் துறை என்ற பிரிவுகளை ஏற்படுத்தி செயல்பட்டுக் கொண்டிருக்கிறோம். நம்முடைய சட்டமன்றத் துறையைப் பொறுத்தவரையில் தலைமைச் செயலாளர் கண்காணிப்பில் இருக்கிறது என்பதை நாம் தொடர்ந்து ஏற்றுக்கொள்வதா, வேண்டாமா என்பதை சற்று சிந்தித்துப் பார்க்கவேண்டும். எப்படி நிர்வாகத்துறையும் நீதித் துறையும் தனித்தனியாக இருக்க வேண்டுமோ அதேபோல் சட்டமன்றத் துறையும் ஒரு தனித்தன்மையோடு இயங்கவேண்டுமென்பதில் நாம் சற்று சிந்தித்துப் பார்ப்பது சாலப் பொருத்தமாக இருக்கும்.

பணி புரிகிற செயலாளர் யாருடைய கண்காணிப்பிலும் கட்டுப்பாட்டிலும் இல்லாத அளவிற்கு தன்னுடைய கடமையை ஆற்றுவதற்கு நாம் வழி வகுக்கவேண்டும். பணியாற்றுகிற துணைச் செயலாளர்கள் நிர்வாகத்துறையின் கண்காணிப்பிலும் கட்டுப்பாட்டிலும் இல்லாத அளவிற்கு சட்டப் பேரவைத் தலைவர், செயலாளர் ஆகியோருடைய கட்டுப்பாட்டின்கீழ் வருகின்ற அளவிற்கு நாம் இத்துறையின் அமைப்பை உருவாக்குவது நம்முடைய சட்டமன்றப் பணிகளை மேலும் செம்மைப்படுத்துவதற்கு நாம் வழிவகுத்தவர்களாவோம்.

இங்கு பணியாற்றுகிற இதர அலுவலர்கள் எந்தெந்தத் துறைகளிலிருந்து வந்து பணியாற்றுகிறார்கள், எத்தனை காலமாக பணியாற்றுகிறார்கள், என்ன அனுபவத்தைப் பெற்றுக் கொண்டிருக்கிறார்கள், பெற்ற அனுபவத்தை முழுக்க, முழுக்க, சட்டமன்ற துறைக்கு செய்கிறார்களா என்றால் திடீர் என்று வேறு துறைக்கு மாற்றப்படுகிற சூழ்நிலையும் வேறு துறைகளிலிருந்து இங்கு பதவி உயர்வு தருகிற சூழ்நிலையும் இருப்பதை இப்போதைய நிலையில் நாம் பார்க்கிறோம். ஆகவே சட்டமன்றத் துறை தனியாகச் செயல்படுவதற்கு நாம் வழிமுறை காண வேண்டும்.

சட்டமன்ற செகரட்டேரியேட்டை நாம் உருவாக்கினால் இந்தச் சூழ்நிலை இல்லாமல் பாதுகாக்கமுடியும் என்பதை முதலில் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

சட்டமன்றத் துறையில் ஆராய்ச்சிப் பிரிவு ஒன்றை நாம் ஏற்படுத்தியிருக்கிறோம். டெல்லியில் பார்லிமெண்டரி அஃபேர்ஸ்ஐக் கவனிப்பதற்காகவே ஒரு தனி அமைச்சரகத்தையே உருவாக்கியிருக்கிறார்கள். ஆனால் நம் மாநிலத்தில் இதுபோன்ற ஒரு அமைப்பு முறை இல்லை என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

சட்டமன்ற உறுப்பினர்கள் ஆராய்ச்சிப் பிரிவுக்குச் சென்றால் தகுந்த ஆலோசனைகள் வழங்குகிற அளவிற்கு

அங்கு அனுபவம் உள்ளவர்கள், பயிற்சி பெற்றவர்கள் இல்லாத நிலையைப் பார்க்கிறோம். ஆகவே டெல்லி நாடாளுமன்றத்தில் இருப்பதைப்போல் இங்கும் ஒரு தனிப் பிரிவுக்கு ஏற்பாடு செய்து சட்டமன்ற உறுப்பினர்களுக்குத் தேவையான தகவல்களைத் தருவதற்கு உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டியதன் அவசியத்தை நான் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன்.

தமிழக சட்டமன்ற நூல் நிலையம் சிறப்பு வாய்ந்ததாக இருந்தது என்று நாம் ஒருகாலத்தில் பெருமைப்பட்டுக் கொண்டிருந்தோம். இன்று என்ன நிலைமை என்றால் அந்தப் பெருமை குறைந்து அதிக நூல்கள் இல்லை என்கிற நிலை இருந்துகொண்டிருக்கிறது. இந்த ஆண்டு நாம் ரூ. 8,000 தான் ஒதுக்கியிருக்கிறோம். ஒதுக்கப்பட்ட தொகை போதாது. ஆகவே சட்டமன்ற உறுப்பினர்கள் பல மாநிலச் சட்டமன்ற நிகழ்ச்சிகளையும், பாராளுமன்ற நிகழ்ச்சிகளையும் நாட்டு நடப்புகளையும் தெரிந்து கொள்கிற அளவிற்கு இன்னும் பல நூல்களை வாங்கி நூலகத்தைப் பெருக்குவதற்கு உடனடியாக நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று நான் விரும்பி வேண்டி கேட்டுக் கொள்கிறேன்.

சட்ட மன்றச் 'செயலாளர் அவர்களை வேறு எந்தப் பணியிலும் ஈடுபடுத்தக்கூடாது. சட்டமன்றப் பணியைத் தவிர வேறு எதையும் கவனிக்கிற அளவிற்கு ஒரு சூழ் நிலையை நாம் உருவாக்கக் கூடாது என்பது என் தாழ்மையான வேண்டுகோளாகும்.

மேலும் குழுக்கள் அமைக்கிறநேரத்தில்ஒவ்வொரு குழுவிற்கும் ஒரு துணைச் செயலாளரை நாம் போட்டு அந்தக் குழு ஆற்றுகிற பணிகளைக் கண்காணிக்கவும் சொல்கிற கருத்துக்களை நிறைவேற்றுவதற்கும் ஒருநல்ல சூழ்நிலையை இனிமேலாவது உருவாக்க வேண்டுமென்று நான் விரும்பி வேண்டி கேட்டுக் கொள்கிறேன்.

சட்டமன்றம் கூடுகிற நாள் மிகமிகக் குறைவாக இருக்கிறது. பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு நாட்டின் பிரச்சனைகளை ஆராய வேண்டிய நாம் கூடிக் கலைகிற நிலை இல்லாமல் பல நாட்கள் கூடி நம் விவாதத்தை விரிவுபடுத்தி நல்ல கருத்துக்களைக் கூறி என்னென்ன விளக்கங்கள் அளிக்கவேண்டுமோ அவற்றை அளிக்கும் விதத்தில் அதிக நாட்களை விவாதத்திற்காக ஒதுக்குவது பொறுத்தமாகயிருக்கும்.

மற்ற மாநிலச் சட்டமன்றங்கள் எவ்வளவு நாட்கள் நடக்கின்றன என்கிற புள்ளிவிவரத்தை சம்பந்தப்பட்ட துறை அமைச்சர் அவர்கள் தெளிவாக்குவார்கள். நம் மாநிலச் சட்ட மன்றம் ஓரளவிற்கு அதிக நாட்கள் கூடுகின்றது என்பதை நானும் ஒத்துக்கொள்கிறேன். இருந்தாலும், மற்ற மாநிலச் சட்டமன்றங்களை விட பாரம்பரியம் மிக்க மன்றம் நமது மன்றம் என்பதால் நாம் கூடுகிற நாட்களையும் அதிகப்படுத்த வேண்டும் என்று விரும்பி வேண்டி கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து, இந்தச் சட்டமன்றப் பேரவையில் இடம் ஒதுக்குவது பற்றி எனக்கு முன்னால் பேசிய உறுப்பினர்கள் பலரும் எடுத்துச் சொன்னார்கள். நானும் ஒரு சில கருத்துக்களைக் கூறுவது பொறுத்தமாகயிருக்கும் நம் சட்டமன்றத்தில் ஒரு பாரம்பரியத்தை நாம் உருவாக்கி வருகிறோம். முன் வரிசையில் முன்னாள் அமைச்சர்கள், முன்னாள் பேரவைத் தலைவர்கள், முன்னாள் பேரவைத் துணைத் தலைவர்கள், ஆகியோருக்கு இடம் ஒதுக்குகிற ஒரு சூழ்நிலையைநாம் தொடர்ந்து உருவாக்கிக் கொண்டிருக்கிறோம். ஆனால் சில காலமாக இந்தப் பாரம்பரியம் பின்பற்றப் படுகிறதா என்றால் இல்லை என்பதை நான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

(பிற்பகல் 12.30)

உதாரணத்திற்குச் சொல்லவேண்டுமானால், மாண்புமிகு மதியழகன் அவர்கள் இந்த அவையில் பேரவைத் தலைவு

ராக இருந்தவர், அமைச்சராக இருந்தவர். அவர் அண்ணு திராவிட முன்னேற்றக் கழகத்தில் சேர்ந்த பிறகு அவர்களுக்கு இடம் ஒதுக்குவதில் பிரச்னை எழுந்தது. இரண்டாவது வரிசையில் இடம் ஒதுக்கப்பட்டது. அவர் அண்ணு திராவிட முன்னேற்றக் கழகத்தை விட்டு வெளியேறிய பிறகும் அவருக்கு அந்த பாரம்பரியம் பின்பற்றப் படவில்லை. நான் இதைஏன் சுட்டிக்காட்டுகிறேன் என்ருல் நம்முடைய மரபை நாம் காக்கவேண்டும். யாராக இருந்தாலும் பாகுபாடு இல்லாமல் அந்தப் பாரம்பரிய முறைப்படி இடம் ஒதுக்குவதுதான் சாலப் பொருத்தமாக இருக்கும் ஆகவே, அதிலே எந்த விதமான பாரபட்சமும் இருக்கக் கூடாது என்று விரும்பி வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

இன்னென்றையும் சொல்ல விரும்புகிறேன். மாமன்றத்தில் நடக்கும் நிகழ்ச்சிகள் அனைத்தும் வெளிஉலகத்திற்குத் தெரிவிக்கும் பொறுப்பில் உள்ளவர்கள் பத்திரிகை நிருபர்கள். ஆகவே, அவர்களுக்கு இடம் ஒதுக்குவது பற்றி ஒழுங்குப் பிரச்னை எழுப்பிய நேரத்தில் இதற்காக ஒரு குழு அமைக்கப்பட்டு இருப்பதாகவும், அவர்கள் கண்காணிக்கிருர்கள் என்றும் பேரவைத் தலைவர் சொன்னுர்கள். அதை நான் ஏற்றுக் கொள்கிறேன்.

இந்த அவையில் இருக்கும் நடவடிக்கை பற்றியும், இடத்தைப் பற்றியும் கண்காணிக்கும் பொறுப்பு பேரவைத் தலைவருக்கு மட்டும் இருக்கிறது என்பதால்தான் இந்தப் பிரச்னையை வற்புறுத்தி வருகிறேன். அந்த ஒரு குழு இருந்தாலும், அந்தக் குழுவை அழைத்து எப்படி இடம் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பதை கொஞ்சம் கவனிக்க வேண்டும். இப்போது இருக்கிற நிலைமை என்னவென்ருல் ஒரு பத்திரிகைக்கு ஒரு இடம், இன்னெரு பத்திரிகைக்கு இரண்டு பேர் உட்கார இடம் என்ற முறையில் இடம் ஒதுக்கப்பட்டு இருக்கிறது. தென்னகம், சமநீதி, மக்கள் குரல், புரட்சி மலர் போன்ற பத்திரிகைகளுக்கு கீழே இடம் ஒதுக்கப்படாமல், மாடியில் இடம் ஒதுக்கப்பட்டு இருக்

கிறது. இது நியாயமா என்பதைப் பேரவைத் தலைவர் கொஞ்சம் கவனிக்கவேண்டும்.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: பிரஸ் அட்வைசரி கமிட்டி அதை முடிவு செய்கிறது. பேரவைத் தலைவர் இடம் ஒதுக்கு வது இல்லை. அவர்களை இந்தப் பேரவை முடிந்தவுடன் வந்து என்னை சந்திக்கும்படி கூறியிருக்கிறேன். இதிலே பேரவைத் தலைவருக்கு எந்தவித சம்பந்தமும் இல்லை.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: இடம் ஒதுக்கும் பிரச்னை சட்ட மன்றத்திற்குள்ளே இருக்கிறது என்ற காரணத்தால் சுட்டிக்காட்டுகிறேன். உங்கள் அதிகாரத்தைப் பயன் படுத்த வேண்டுமென்று இல்லை, நீங்கள் ஆலோசனை கூறி ஒரு பத்திரிகைக்கு ஒரே நேரத்தில் ஒரே நிருபர்தான் அமர வேண்டுமென்ற முறை அனுசரிக்கப்பட்டால் எல்லா பத்திரிகை களுக்கும் தகுந்த முறையில் இடம் கிடைக்கும் என்று சொல்லிக் கொள்கிறேன். வெளியில் என்ன சொல் கிறார்கள் என்றால் ஏதோ சில குறிப்பிட்ட பத்திரிகைக்கு மட்டும் சலுகை கொடுத்து இடம் ஒதுக்குகிறார்கள். இதிலும் பாகுபாடு காட்டப்படுவதாக வெளியில் பேசிக் கொள்கிற காரணத்தால் அந்தப் பாகுபாட்டைத் தடுப்பதற்கு பேரவைத் தலைவர் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டு மென்று பணிவோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் சட்டப்பேரவைத் துறையைப் பொறுத்தவரை யில் எத்தனையோ கேள்விகள் கேட்கிறோம். கவன ஈர்ப்புத் தீர்மானங்கள் கொண்டு வருகிறோம் உரிமைப் பிரச்னை எழுப்புகிறோம். இப்படிக் கொடுக்கிறபோது பேரவைத் தலைவர் உறுப்பினர் யார் என்று பார்க்கக் கூடாது. எந்தக் கேள்வியைக் கேட்டாலும் ஒரு காரணத்தைக் காட்டி, சில பல நேரங்களில் காரணத்தைக் காட்டாமலும், அவை திருப்பியனுப்பப்படுகின்றன என்று நான் சுட்டிக்காட்டுவது சாலப் பொருத்தமாக இருக்கும் என்று கருதுகிறேன். என்னைப் பொறுத்தவரையில் ஏராளமான கேள்விகள்

கொடுத்து இருக்கிறேன். இருந்தாலும் பல கேள்விகள் திருப்பியனுப்பும் நேரத்தில் நடவடிக்கை எடுக்கக்கூடிய தாக இருப்பதால் திருப்பியனுப்பப்படுகிறதுஎன்று காரணம் காட்டுகிறார்கள். உதாரணத்திற்குச் சொல்கிறேன், கல்லணைக்கு..........

மாண்புமிகு பேரவைத் தலைவர்: கேள்வி டிஸ் அலவ் செய்ததைப் பற்றி சட்டசபையில் பேசக்கூடாது.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: ஏற்கனவே பல உறுப்பினர்கள் அதைப் பற்றிப் பேசியிருக்கிறார்கள்.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: பொதுவாகச் சொன்னார்கள் கோவை செழியன்கூட 150 கேள்விகள் கொடுத்திருக்கிறேன் என்று சொன்னார்கள். இந்தத் தொடர் கூட்டத்தில் 4 தான் கொடுத்திருக்கிறார்கள். பொதுவாகக் கேட்கிற நிலைமை வேறு, ஒவ்வொரு கேள்வியாக எடுத்துப் படித்து, அது டிஸ் அலவ் செய்யப்பட்டிருக்கிறது என்று பேசுவது முறையல்ல.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: இப்படிப்பட்ட கேள்விகள் திருப்பியனுப்பப்படுகிற நேரத்தில்.........

மாண்புமிகு பேரவைத் தலைவர்: உறுப்பினர் அல்லாதவர்களிடமிருந்தும். கேள்விகள் வருகின்றன. அவற்றைப் பார்த்தும் பேரவைத் தலைவர் பரிசீலிக்க வேண்டுமா? யார் யாரோ கேள்விகள் அனுப்புகிறார்கள். சட்டமன்ற உறுப்பினர்கள் தாங்களே கேள்விகளை அனுப்பவேண்டும். அதிலே சில கேள்விகள் எப்படியெப்படி வருகின்றன என்று தெரியும். அதற்கான விளக்கங்களையெல்லாம் இங்கே சொல்லிக் கொண்டிருக்க முடியாது. அறையில் வந்து கேட்பது தான் சரி. இங்கே பேசுவது முறையல்ல.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: பேரவைத் தலைவர் அவர்களும் இந்தச் சட்டமன்றத்தில் ஒரு உறுப்பினர்தான். ஆகவே, உறுப்பினர்களுக்கு இருக்கிற எல்லாஉரிமைகளும்,

கடமைகளும், பேரவைத் தலைவருக்கும் இருக்கிறது என் பதை நான் சில சான்றுகளைக் காட்டி சுட்டிக்காட்டுவது சாலப்பொருத்தமாக இருக்கும் என்று எண்ணுகிறேன். (குறுக்கீடு) தலைவரவர்களைப் பற்றி நான் குறிப்பிடப்பட வில்லை அவர்களுடைய நிகழ்ச்சியைப்பற்றி சிலவற்றைச் சுட்டிக்காட்டுவது நம்முடைய........

மாண்புமிகு பேரவைத் தலைவர்: பேரவைத் தலைவரைப் பற்றிக் குறிப்பிட்டுப் பேசுவது சரியல்ல பாராட்டியும் பேசக்கூடாது, பழித்தும் பேசக் கூடாது.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: தலைவர் அவர்களைப் பற்றிக் குறிப்பிடவில்லை. பேரவையில் நடக்கும் சில முறைகளைப் பற்றிக் குறிப்பிடுகிறேன். அவரைப்பற்றிக் குறிப்பிடவில்லை. நம்முடைய அவையில் நமக்கு ஒரு சில விதிமுறைகள் இருக்கின்றன. இந்த விதிமுறைகளைப்பின்பற்றி நம்முடைய சட்டமன்றத்தை நடத்துவது நம்முடைய மரபாக இருக் கிறது, சட்டமன்ற உறுப்பினர்கள் உரிமைப் பிரச்னை எழுப்பிய நேரத்தில்......

மாண்புமிகு பேரவைத் தலைவர்: இதிலே பேசக்கூடாது என்று சொல்லிக்கொள்கிறேன்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: சட்டமன்றத்தில் இருக்கின்ற ஒரு சில பிரச்னைகளைப் பற்றிப் பேசுவதற்கு இந்த மானியக் கோரிக்கையைப் பயன்படுத்துங்கள் என்று தாங்களே சொன்னீர்கள். ஆனால் இன்று......

மாண்புமிகு பேரவைத் தலைவர்: மானியக் கோரிக்கையில் என்ன பேசலாம் என்று சொன்னால், இந்தத் துறை பற்றி பேசவேண்டும். பேரவைத் தலைவர் கொடுத்த தீர்ப்பு, நடவடிக்கை பற்றி பேசக்கூடாது. சட்டமன்றத்துறை மானியமாக இருந்தாலும் அவற்றைப் பற்றி இதில் பேசக் கூடாது.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: நம்முடைய சட்டமன்றத்திற்கு நல்ல பாரம்பரியம் உள்ளது என்பதை நாம் நன்றாக அறிவோம். ஆகவே, அந்தப் பாரம்பரியத்தை தொடர்ந்து நடத்துவதற்கு நாம் ஒவ்வொரு உறுப்பினரும் உதவி புரிய வேண்டும்.

சட்டமன்ற விதியைப் பொறுத்தவரையில் எனக்கு முன்னாலே பேசிய மாண்புமிகு உறுப்பினர் லத்தீப் அவர்கள் தெளிவாக எடுத்துச் சொன்னார்கள். அவர் சொன்ன கருத்துக்களை நாம் அத்தனை பேரும் கவனித்துப் பார்க்க வேண்டுமென்று நான் பணிவோடு தெரிவித்துக்கொள்கிறேன்.

இருக்கின்ற குறைபாடுகள், நடக்கின்ற சில நிகழ்ச்சிகள், இவற்றை அப்படியே விட்டுவிட்டால் வரும் காலத்தில் நம்முடைய தமிழக சட்டமன்றத்தின் பாரம்பரியமும், பெருமையும் கொஞ்சம் கீழே இறங்கும் நிலை வந்து விடும். ஆகவே, பேரவைத் தலைவர் கண்காணிப்பாக இருந்து, அத்தனை உறுப்பினர்களும் கட்டுப்பாடு உணர்வோடும், கடமை உணர்ச்சியோடும் செயலாற்றி தமிழகத்தில் ஒரு நல்ல பாரம்பரியத்தை உருவாக்குவதற்கு நல்ல யோசனை எடுத்து வைத்து செயலாற்றுவது சாலப் பொருத்தமாக இருக்கும். ஆகவே, அந்த முறையில் நம்முடைய அவை நடவடிக்கைகளை அமைத்துக் கொள்ள வேண்டுமென்று கூறி, என்னுடைய உரையை இந்த அளவில் முடித்துக் கொள்கிறேன்.



# 8

## தமிழ்நாடு 1974ஆம் ஆண்டு நிலச் சீர்திருத்தங்கள் (நில உச்சவரம்பு கட்டுதல்) இரண்டாம் திருத்த சட்ட முன்வடிவு மீதான விவாதத்தில் 10—4—74 ஆம் தேதியன்று சட்டப் பேரவையில் திரு. பெ. சௌந்தரபாண்டியன் அவர்கள் ஆற்றிய உரை

*திரு. பெ. சௌந்தரபாண்டியன்: தலைவரவர்களே, மாண்புமிகு வருவாய்த் துறை அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கிற இந்த நிலச் சீர்திருத்த மூன்ருவது திருத்தச் சட்டத்தை அண்ணு திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பாக வரவேற்க இயலாமைக்கு மெத்த வருத்தப்படுகிறேன்.

நிலச் சீர்திருத்தம் நாம் கொண்டு வருவதன் நோக்கம் வருவாய் பெருகியிருக்கின்ற நேரத்தில் அந்த வருவாயை சமதர்ம சமுதாயத்திற்குப் பரவலாக பகிர்ந்து அளிக்கவும், வருவாய்க் குவியலைத் தடுத்து நிறுத்தவும் வழி வகுப்பது தான். இதுதான் அரசாங்கத்தின் திட்டம் என்பதை நாம் அத்தனை பேரும் மனதில் வைத்துக்கொண்டு இருக்கிரும். இந்தத் திருத்தச் சட்டத்தைப் பொறுத்த வரையிலும் நாம் எத்தனையோ முறை அலசிப் பார்த்து இருக்கிரும். எத்தனை தடவை பரிசீலனை செய்து இருக்கிரும், எத்தனை முறை யார் யார் பரிந்துரை செய்து இருக்கிருர்கள், என்பதை மனதில் கொள்ள வேண்டும். 1961-ம் ஆண்டு நில உச்சவரம்புச் சட்டத்திற்கு உரிய திருத்தச் சட்டமாகத்தான் இந்தச்சட்டத்தை மாண்புமிகு அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கிருர்கள் என்பதை நாம் மனதில் வைத்துக்கொண்டு பார்த்தால்,

1970-ம் ஆண்டு ஒரு சீர்திருத்தச் சட்டம் கொண்டுவரப் பட்டது என்பதை நாம் உள்ளபடியே எண்ணிப்பார்க்க வேண்டும். அந்த நேரத்தில், இந்தச் சட்டத்தை அமுலாக்குவது 1962 முதலா அல்லது 1965-ம் ஆண்டு முதலா என்ற பிரச்னை எழுந்தது.

அப்படி எழுந்த நேரத்தில் மீண்டும் பரிசீலிக்கப் பட்டு 1960-வது ஆண்டு முதல் இந்தச் சட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்தால் சாலப் பொருத்தமாக இருக்கும் என்று ஏற்கனவே எண்ணி, அதிலே முடிவு எடுத்ததை நாம் மறந்துவிட முடியாது.

இன்னொன்றையும் நாம் கருத்தில் கொண்டோம். புதியதாக நிலத்தைப் பயிரிடுபவர்கள் இருந்தாலும், ஏற்கனவே உள்ளவர்களுக்கு அந்த நிலத்தை அப்படியே விட்டுவிடலாமா அல்லது கூடுதலாக அவர்களுக்கு ஒதுக்கித் தரலாமா என்ற கருத்தையும் நாம் அப்பொழுது பரிசீலனை செய்தோம்.

எனவே, ஒன்றை நாம் மறந்துவிடக்கூடாது. அவர் களுக்கு சற்று விதிவிலக்கு அளித்து ஏறத்தாழ கூடுதல் நிலத்தை வைத்துக்கொள்வதற்கு நாம் அனுமதி அளித் தால் அவர்கள் வருவாயைப் பெருக்குவதற்கும், செடி களை வளர்ப்பதற்கும் உறுதுணையாக இருக்கும் என்பதை நாம் கருத்தில் கொண்டு ஆராய்ந்தோம் என்பதையும் நாம் எண்ணிப்பார்க்க வேண்டும்.

அந்த நேரத்தில் மத்திய சர்க்காரும் ஒரு கோரிக்கை எழுப்பியது. மீண்டும் இதைப் பரிசீலனை செய்து அப்ப டியே விட்டுவிட்டால் ஓரளவுக்கு அவர்களைப் பாதுகாக்க முடியும், அவர்கள் வருவாயை பெருக்க உதவியாக இருக்கும், அவர்களுக்கு தொல்லை தராத சூழ்நிலை இருக்கும் என்று மத்திய அரசு மாநில அரசைக் கேட்டது என்பதை மறந்துவிடக் கூடாது. ஆகவே, இந்தச் சட்டத்தை எத்தனையோமுறை திருத்தியிருக்

கிறோம், எத்தனையோ முறை அலசிப் பார்த்திருக்கிறோம். யார் யார் திருத்தச் சொன்னார்கள், யார் யாருடைய சொல்லை நாம் ஏற்றுக்கொண்டு இன்று இந்தச் சட்டத்தைத் திருத்துகிறோம் என்பதை முதலில் மனதில் எண்ணிப்பார்க்க வேண்டும். உண்மையான நிலைமை என்ன என்பது வெகு நன்றாகத் தெரியும். ஆகவே தான், 1970-ம் ஆண்டு கொண்டுவரப்பட்ட திருத்தச் சட்டத்திலும் விதி விலக்கு அளிக்க முடிவு செய்யப் பட்டது.

பிளாண்டேஷனில் உள்ள நிலம் 20 சதவிகிதம் கூடுதலாக வைத்து, அதைக் காப்பாற்றிக் கொள்வதற்கும் நாம் இங்கே வழிவகை செய்திருக்கிறோம். என்பதை நான் இங்கே மெத்தப் பணிவோடு தெரிவித்துக் கொள் கிறேன். இது தேவை தானா அல்லது நியாயம் தானா என்று சிந்தித்துப் பார்க்கிற நேரத்தில் அது எந்த அளவுக்கு நியாயம் என்பதை நாம் எண்ணிப்பார்க்கின்ற நேரத்தில், எள் அளவும் நியாயம் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. நிலத்திற்கு உச்சவரம்பு வேண்டும் என் பதுதான் நம்முடைய மூல சட்டத்தின் நோக்கமாகும். ஆனால் பிளாண்டேஷனைப் பொறுத்த வரையில் நாம் விதிவிலக்கு அளித்துக் கொண்டிருக்கிறோம். மூலச் சட்டத்திலிருந்து விதி விலக்கு அளிக்கப்பட்டது. திருத்தச் சட்டம் 1970-ம் ஆண்டு கொண்டு வந்த நேரத்தில் நாம் பரிசீலனை செய்திருக்கிறோம். இதற்கு உடந்தையாக மத்திய அரசு பிளாண்டேஷன் செய்பவர்களுக்கு ஆதரவாக பரிந்துரை செய்தது இந்த அரசு அதை ஏற்றுக் கொண்டது என்று எண்ணும் பொழுது ஏன் ஏற்றுக் கொண்டது என்பதை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும்.

எதற்காக நாம் இந்தச் சட்டத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும்? பிளாண்டேஷன் செய்பவர்களைக் காப்பாற்ற வேண்டும் என்பதற்காகத்தான். அதை ஏழை எளியவர்களுக்கு பகிர்ந்து அளிக்க வேண்டும்,

அல்லது அவர்களுடைய வருவாயைப் பெருக்குவதற்கு நாம் உறுதுணை புரிய வேண்டும்.

ஆகவே, இந்தச் சட்டத்தின் முக்கியமான நோக்கத்தை எண்ணும்போது, பிளாண்டேஷன் செய்பவர்களுக்கு ஆதரவாக இந்த அரசு இருக்கிறது, மத்திய அரசும் இருக்கிறது என்ற பலமான குற்றச்சாட்டை நான் இங்கே சாட்டக் கடமைப்பட்டிருக்கிறேன். நாம்யாருக்கு சலுகை அளிக்கிறோம். யாருக்குப் பரிந்து பேசுகிறோம். தனியாருக்கு. யார் அந்தத் தனியார்கள் என்பதை நாம் இங்கே எண்ணிப்பார்க்க வேண்டும்.

அரசாங்கம் கன்னியாகுமரி மாவட்டத்தில் பல ஆயிரம் ஏக்கர் ரப்பர் தோட்டத்தை வைத்திருக்கிறது. அங்கே பல நிலச்சுவான்தார்கள் இருக்கிறார்கள். ஆயிரம் ஏக்கர் உள்ளவர்கள் இருக்கிறார்கள். ஐந்நூறு ஏக்கர் நிலம் உள்ளவர்கள் இருக்கிறார்கள். ஐந்து ஏக்கர் நிலம் உள்ளவர்கள் இருக்கிறார்கள். பத்து ஏக்கர் நிலம் உள்ளவர்கள் இருக்கிறார்கள். இவர்களை நாம் எந்த அளவுக்கு பாதுகாக்கப் போகிறோம் என்பதை, இந்த அரசு மனதில் கொள்ள வேண்டும். இந்த அரசாங்கம் சட்டம் கொண்டு வந்திருக்கிறது. யாரைப் பாதுகாக்க என்றால் தனியார்களைப் பாதுகாக்க என்பதை நான் வன்மையாக......

மாண்புமிகு திரு எஸ். ஜே. சாதிக் பாட்சா : மாண்புமிகு உறுப்பினர் அவர்கள் இந்தச் சட்டம் கொண்டு வந்ததற்கு உள் நோக்கம் கற்பிக்க ஆரம்பிக்கிறார்கள். ஆகையால் நான் அதற்கு விளக்கம் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன். தோட்ட உரிமையாளர்கள் மலைத் தோட்டங்களிலிருந்து அன்னியச் செலாவணி கிடைப்பதால், நாட்டின் நலனைக் கருதி, மலைத்தோட்டத் தொழிலுக்கு தனிச் சலுகைகள் அளிக்கப்படவேண்டும் என்று இந்திய அரசு பரிந்துரை செய்துள்ளது. இந்திய அரசின் இன்ஸ்ட்ரக்ஷன் பேரில் தான் இந்தத் திருத்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது.

அது மாத்திரமல்ல. சிறிய, சிறிய பிரிவாக இருக்குமானால், அந்தத் தொழிற்சாலையை நடத்த முடியாது என்ற ஒரு கோரிக்கையையும் அந்த உரிமையாளர்கள் மத்திய அரசுக்கு தெரியப்படுத்தியிருக்கிறார்கள். அதன் பேரில்தான் இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது. யாருக்கும் தனிப்பட்டவர்களுக்கு சலுகை கொடுக்க வேண்டும் என்பதற்காக அல்ல. எஸ்டேட் ஓனர்ஸ் யாரும் எங்களுக்குத் தெரிந்தவர்கள் அல்ல. அம்மாதிரி செய்ய வேண்டிய அவசியமும் கிடையாது.

திரு கோவை செழியன்: அமைச்சர் சொன்னதின்பேரில் ஒரு சந்தேகம். உள்நோக்கம் கற்பிக்கவேண்டுமென்று அவர்கள் சொல்லவில்லை. பிராக்மெண்டேஷன் ஏற்பட்டால் இண்டஸ்ட்ரி பாதிக்கும் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அப்படியானால் இந்தப் பிளாண்டேஷனை அரசாங்கமே எடுத்துக்கொண்டு, இதை லார்ஜ் ஸ்கேலில் செய்வதற்கான ஒரு சட்டத்தைக் கொண்டுவரலாம். அப்படிக் கொண்டு வந்தால் எனக்கு ஒன்றும் ஆட்சேபனை இல்லை. பிராக்மெண்டேஷன் இடைஞ்சலாக இருக்குமென்றால், அதை அரசாங்கமே எடுத்துக்கொள்ளலாம்.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: சீக்கிரம் முடித்துவிடுங்கள்.

* திரு. பெ. சௌந்தரபாண்டியன்: நானும் அதைத்தான் குறிப்பிட்டேன். மத்திய அரசாங்கம் அந்தபிளாண்டேஷன் செய்பவர்களுக்கு சலுகை அளிக்க வேண்டும் என்று பரிந்துரை அளித்தது. மாநில அரசு அதை ஏற்றுக்கொண்டது. ஏன் மத்திய அரசை இந்தக் கருத்தை வலியுறுத்த வேண்டாம் என்று நம்முடைய மாநில அரசு கேட்கக் கூடாது என்பதுதான் என்னுடைய வாதம். பிளாண்டேஷன் செய்கிற தொழிலை வைத்திருப்பவர்கள் தனி நபர்கள்தான் என்னுடைய கருத்துப்படி. யார் அந்தத் தனி நபர்கள் என்பதை இந்த மாமன்றத்தில் உள்ளவர்கள் எண்ணிப்பார்க்கவேண்டும். சாதாரண ஏழைதொழிலாளர்கள் பிளாண்டேஷன் வைத்திருக்க முடியாது. ஆனை

அதிபர்கள், மிட்டா மிராசுகள், பஸ் அதிபர்கள்தான் தங்களுடைய பணத்தைப் போட்டு இதுபோன்ற தோட்டங்களை வாங்கி வைத்திருக்கிறார்களே தவிர, கிராமத்தில் இருக்கிற ஏழை எளியவர்கள் அல்ல என்பதை நாம் முதலில் எண்ணிப்பார்க்க வேண்டும். ஆகவேதான் மாநில அரசு தவறு செய்கிறது, மத்திய அரசு அந்தத் தவறுக்கு மேலும் வலிவூட்டுகின்ற அளவுக்கு பரித்துரை செய்கிறது என்பதுதான் என்னுடைய பணிவான குற்றச்சாட்டாகும்.

இன்னொன்றும் சொல்கிறேன். பிளாண்டேஷனுக்கு நாம் விதிவிலக்கு அளிக்கின்ற நேரத்தில் அவர்களுக்கு என்ன வசதி வாய்ப்பு தருகிறோம் என்பதை நாம் எண்ணிப்பார்க்க வேண்டும். கடன் வழங்க வேண்டும், உரம் தரவேண்டும், உற்பத்தியை விற்பதற்கான மார்க்கெட்டை நாம் தேடித்தர வேண்டும். இதையெல்லாம் இந்த அரசாங்கம் செய்கின்ற நேரத்தில் ஏன் அந்த நிலத்தை அரசுடைமையாக்கி, அரசாங்கம் இதைச் செய்யக் கூடாது என்பதுதான் என்னுடைய பணிவான வேண்டுகோளாகும். இன்றைக்குப் பலர் வருகிறார்கள் இலங்கையிலிருந்து இலங்கையில் ரப்பர்தோட்டத்தில் வேலை செய்த தொழிலாளர்கள், நம்முடைய தமிழ் தேயிலைத் தோட்டத்தில் வேலை செய்த தொழிலாளர்கள் நாட்டுக்கு வந்து வேறு வேலை வாய்ப்பு இல்லாமல் தவிக்கின்ற காட்சியைப் பார்க்கிறோம் தனியார் அத்தனை பேர்களுடைய நிலத்தையும் தேசியமடமாக்கி, அங்கே ரப்பர் தோட்டங்களை உருவாக்கி இலங்கையிலிருந்து வருகின்ற அகதிகளுக்கு நாம் புனர் வாழ்வு அளிக்க முடியாதா என்பதை ஏன் இந்த அரசு சிந்திக்கவில்லை என்பதுதான் என்னுடைய வாதம்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: தலைவர் அவர்களே, பிளாண்டேஷனை நாஷனலைஸ் பண்ணவேண்டும் என்று நண்பர் செழியன் அவர்கள் சொன்ன கருத்து ஏற்றுக் கொள்ளக் கூடியது தான். உச்ச வரம்பு கொண்டு

வந்தால் பிளாண்டேஷன் நல்ல முறையில் செயல்பட முடியாது. அதை ஒட்டி செழியன் அவர்கள் சொன்ன இரண்டு கருத்துக்களில் எந்தக் கருத்தை திரு.சௌந்தர பாண்டியன் அவர்கள் ஆதரிக்கிறார்கள். பிளாண்டேஷனை தேசியமயமாக்க வேண்டும் என்பதற்கு ஆதரவு தருகிறார்களா? அல்லது உச்ச வரம்பிலிருந்து விலக்கு அளிக்க வேண்டும் என்று குறிப்பிடுகிறார்களா?

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: அரசாங்கம் இதை தேசியமயமாக்கி விட்டால் நண்பர் செழியன் அவர்கள் சொன்ன கருத்து தானாகவே அடிப்பட்டுப் போய் விடுகிறது . . .

திரு. கோவை செழியன்: மாண்புமிகு முதல் அமைச்சர் அவர்கள் சொன்ன கருத்தை நாங்கள் ஏற்றுக்கொள்கிறோம். பிராக்மெண்டேஷனால் அந்த இண்டஸ்ட்ரி கெடுகிறது. நாஷனலைஸ் செய்துவிட வேண்டும். முடியவில்லை என்றால் எங்களுடைய உறுப்பினர் திரு சௌந்தர பாண்டியன் அவர்கள் சொன்னது போல் சிறு சிறு யூனிட்டாக இருக்க வேண்டுமென்றால் அப்படி சிறு சிறு யூனிட்டாக இருப்பதை கோஆபரேடிவ் முறையில் செய்து, அதை ஒரு அமைப்பாக வைத்து செய்தால் அந்த இண்டஸ்ட்ரி பாதிக்காது. அப்படி இண்டஸ்ட்ரியல் யூனிட் வைத்து, அதை வளர்க்கலாம் என்பது என்னுடைய கருத்து என்றும் சொல்லிக்கொள்கிறேன்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: தேசியமயமாக்குவதற்கு மத்திய சர்க்காருடைய கன்கரென்ஸ் வேண்டியிருக்கிறது. அதையெல்லாம் பற்றி ராஜமன்னார்குழு அறிக்கையை விவாதிக்கும் பொழுது விரிவாகப் பேசிக் கொள்ளலாம். இது ஒரு முக்கியமான சட்டப்பிரச்னை.

*திரு. பெ. சௌந்தரபாண்டியன்: தேசியமயமாக்கவேண்டும் என்பது தான் என்னுடைய வாதம்.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: சுருக்கமாகப்பேசி முடியுங்கள்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: மத்திய அரசு சொல்லியபடி நாம் கேட்கக்கூடாது என்பது என்னுடைய கருத்தாகும். முதல் அமைச்சர் அவர்கள் தங்களுடைய கருத்தைச் சொல்வார்களா? மத்திய அரசு சொல்வதற்கெல்லாம் நாம் ஆமாம் போடக்கூடாது. ஏன் வலியுறுத்தி நாம் இதைச் செய்ய முடியாது என்று மத்திய அரசிடம் சொல்லவில்லை என்பதுதான் என்னுடைய வாதம்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: மத்திய அரசு மாத்திரம் அல்ல, மத்தியஅரசுக்கு ஆதரவாக இருப்பவர்கள் சொல்லக்கூடியதற்கும் ஆமாம் போடக்கூடாது என்று சொன்னால் நீங்கள் கேட்பீர்களா இல்லையா என்பது எனக்குத் தெரியாது. செழியனுடைய புரட்சிகரமான உள்ளத்தோடு என் உள்ளமும் ஒத்துப்போகும். அவர்களுடைய நிலைமை அப்படியிருக்கிறது.

என்னைப் பொறுத்த வரையில் மத்திய சர்க்கார் நியாயமாகச்சொல்லக்கூடிய விஷயங்களுக்கு நாம் எப்போதும் புறம்பாக நடந்து கொள்வது இல்லை. அதே நேரத்தில், மாநில அரசினுடைய உரிமைகளை விட்டுக் கொடுப்பதும் இல்லை. பௌண்டேஷனை தேசீயமயமாக்குவது வேறு விஷயம். உச்சவரம்பு கொண்டு வருவது வேறு விஷயம்.

செழியன் அவர்களும், சௌந்தரபாண்டியன் அவர்களும் வேறுபட்ட கருத்தைச் சொன்னார்கள். சிறிய சிறிய பகுதியாக இருந்தால் தொழிற்சாலையை ஒழுங்காக நடத்த முடியாது என்றால் கூட்டுறவு முறையில் அதை நடத்தலாம் என்ற எண்ணமும் பரிசீலிக்கத்தக்கதொன்று தான். இருந்தாலும் மாநில அரசு கையகப்படுத்துகிற நேரத்தில் மத்திய சர்க்காரின் ஒப்புதலை நாம் பெற வேண்டி இருக்கிறது. அரசு கையகப்படுத்துவதற்கு

எந்தவிதமான ஆட்சேபணையும் கிடையாது. அதை இன்றொரு முற்போக்கான கொள்கையாகக்கூட நாம் அறிவிக்க இயலும். மத்திய சர்க்காரின் ஒப்புதல் தேவைப்படுகிறது என்பதால்தான் சொன்னேன்.

(பிற்பகல் 1-C0)

*திருமதி த. நா. அனந்தநாயகி: முதலமைச்சரவர்கள் என்னென்னமோ சொல்கிறார்கள். மத்திய அரசாங்கம் செய்யவில்லை; அவர்கள் அதைச் செய்தார்கள்; இதைச் சொன்னார்கள் என்று சூட்சமமாக எதை எதையோ சொல்கிறார்கள். எனக்கு ஒன்றும் புரியவில்லை. அதைப் புரியும்படியாக கொஞ்சம் விளக்கமாகச் சொன்னால் நல்லது.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: சூட்சமம் என்பதே புரியாதவர்களுக்குப் புரியும் என்பதுதான்.

* திரு. பெ. சௌந்தரபாண்டியன்: என்னுடைய கேள்வி என்னவென்றால், மத்திய அரசு இதுமாதிரி பரிந்துரைத்த போது மாநில அரசு அதற்கு மறுப்பு தெரிவித்ததா என்பதை மாண்புமிகு முதலமைச்சரவர்கள் மூலமாகத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். மத்திய அரசு சொல்கிற எல்லாவற்றையும் மாநில அரசு ஏற்றுக்கொள்கிறது என்று நான் சொல்கிறேன். யாருக்காக அந்தப் பரிந்துரைகளை ஏற்றுக் கொண்டிருக்கிறீர்கள் என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும். ஆலை அதிபர்களுக்காக தொழில் அதிபர்களுக்காக அந்தப் பரிந்துரைகளை ஏற்றுக்கொண்டிருக்கிறீர்கள்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: பிளாண்டேஷனுக்கு உச்சவரம்பு தேவையில்லை என்று மத்தியஅரசு மாநில அரசுக்கு எழுதிய தாக்கீது என்று கருதிவிடக்கூடாது. எல்லா மாநில முதலமைச்சர்களும் கூடி—மத்திய அரசே கூட்டிய ஒரு மாநாடு அது—மத்திய அரசின் அமைச்சர்களும் கூடி, எல்லோரும் சேர்ந்து எடுத்த முடிவு அது. பிளான்டேஷனுக்கு உச்சவரம்பு ஏற்படுத்தினால் பாதகம்

ஏற்படும் என்ற கருத்துத் தெரிவிக்கப் பட்டதால் உச்ச வரம்பு விதிக்கப்படவில்லை. நீங்கள் குறிப்பிடுவது முற்போக்கான கருத்து. அதற்கு மத்திய அரசு ஒப்புதல் அளிக்க வேண்டும்,

மாண்புமிகு திரு. ப. உ. சண்முகம்: அவையின் தகவலுக்காக ஒன்றைச் சொல்ல விரும்புகிறேன். அந்த முதலமைச்சர்கள் மாநாட்டில் நமது மாநிலத்திலிருந்து மாண்புமிகு முதலமைச்சரவர்கள் என்னை கலந்து கொள்ளச் சொன்னதால் அவர்கள் சார்பில் நான்கலந்து கொண்டேன். பிளான்டேஷனை தேசியமயமாக்க வேண்டுமென்று அங்கே நான் தெரிவித்தேன். இது அன்னியச் செலாவணி ஈட்டுகின்ற ஒரு தொழிலாக இருப்பதால் தேசியமயமாக்க முடியாது என்று மத்திய அரசு முடிவு செய்திருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: அதைத்தான் நான் ஏற்கெனவே கேட்டேன். இந்த மாநில அரசு என்ன கருத்தைச் சொன்னது என்று கேட்டேன்.

மாண்புமிகு திரு. ப. உ. சண்முகம்: அப்போதே நான் சொன்னேன். தேசியமயமாக்க நாங்கள் ஆதரவு தந்திருக்கிறோம். மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் சொன்ன மாதிரி 'ஃப்ராக்மென்டேஷனாக' இருந்தால் தொழில் வளரமுடியாது. இதில் அன்னியச் செலாவணி இருப்பதால், இது வெளிநாட்டு சம்பந்தப்பட்ட ஒரு தொழிலாக இருப்பதால் மொத்தமாக முடிவுசெய்ய வேண்டும்; இப்போது முடியாது என்று சொல்லிவிட்டார்கள். தமிழ்நாடு அரசு எப்போதும் தேசியமயமாக்கும் கொள்கைக்கு ஆதரவளித்திருக்கிறது.

* திரு. பெ. சௌந்தரபாண்டியன்: தமிழ்நாடு அரசு எப்போதும் தயார் என்பதை ஏற்றுக்கொள்கிறேன். என்னுடைய கருத்து, மத்திய அரசு பரிந்துரைத்தபோது மாநில அரசு மறுப்பு தெரிவித்ததா.

மாண்புமிகு திரு. ப. உ. சண்முகம்: மத்திய அரசு பரிந்துரை செய்ய வில்லை.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: உச்சவரம்பு அவை களுக்கும் தரவேண்டுமென்று தாங்கள் கருதுகிறீர்களா?

* திரு. பெ. சௌந்தரபாண்டியன்: உச்சவரம்புபற்றி பேச வில்லை தேசிய மயமாக்கத்தான் கேட்கிறேன். சட்டம் சரியாக அமுல் படுத்தப்பட வேண்டும். உச்சவரம்பு எப்படி.........

THIRUMATHI T. N. ANANDANAYAKI Exemption for all these plantation areas or in other words, nationalisation of plantat.ons.

* திரு. பெ. சௌந்தரபாண்டியன்: நான் சொல்கின்ற தேசிய மயமாக்கும் திட்டத்தில் சகலமும் அடிப்பட்டுப்போகிறது என்பதை ஏற்றுக்கொள்ள வேண்டும். அரசாங்கம் எடுத்துக் கொண்டிருக்கிற எல்லா பிரச்சனைகளுக்கும் அதில் பரிகாரம் இருக்கிறது. ஏன் அதற்கு முயற்சி எடுக்கவில்லை என்பதுதான் என்னுடைய கேள்வி. அம்மையார் அவர்கள் சொல்கின்ற அந்த வாதத்தில் நான் இறங்கவில்லை. நாம் கொண்டுவருகிற சட்டம் யாருக்குப் பயன்படப்போகிறது எனது என்பதுதான் கேள்வி.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: பிளான்டேஷனை தேசிய மயமாக்குகிறோம் என்று ஒரு தீர்மானத்தை கொண்டு வருகிறோம் என்று வைத்துக்கொள்ளுங்கள். மத்திய அரசு அதற்கு ஒப்புதல் அளிக்காவிட்டால் என்ன செய்யலாம்?

* திரு பெ. சௌந்தரபாண்டியன்: ஏற்கெனவே நெய்வேலி பற்றி ஒரு தீர்மானத்தைப் போட்டோம். மத்திய அரசு ஏற்றுக் கொண்டதோ இல்லையோ. அதற்கு என்ன செய்தோமோ அதையே இதற்கும் செய்வோம். நம் முடைய கடமையை நாம் செய்யத் தவறக்கூடாது. ஒரு சட்டத்தைக் கொண்டுவரும்போது அது மக்களுக்குப்

பயனளிக்கக்கூடியதாக இருக்க வேண்டும். தனிப்பட்ட சிலருக்குப் பயனளிக்கக் கூடியதாக இருக்கக்கூடாது என்பதுதான் என்னுடைய வேண்டுகோள். ஆகவே, இந்த அரசு கொண்டுவந்திருக்கின்ற திருத்தச் சட்டத்தினால் ஏழை எளிய மக்களுக்கு பயனில்லை; தனிப்பட்ட ஒருசிலர்தான் பயனடைகிறார்கள்; ஆளும்கட்சி யாருக்கோ ஆதரவு அளிக்கின்ற வகையில் இந்தத் திருத்தம் கொண்டுவரப்பட்டிருக்கிறது இந்தச் சட்டத்தினால் ஒரு பயனும் இல்லை என்று கூறி என்னுடைய உரையை முடிக்கிறேன். வணக்கம்.



# 9

**சாதிப் பிரிவு, உட்பிரிவு வேறுபாடின்றி இந்து சமயத்தைச் சேர்ந்த தகுதியுடையவர்களிடையே இருந்து அர்ச்சகர்கள், பூசாரிகள் ஏனைய உள்துறை ஊழியர்கள் இந்து சமய நிறுவனங்களில் நியமிக்க இயலும் வகையில் அரசியலமைப்பு திருத்தப்படவேண்டும் என்பதுகுறித்து மாண்புமிகு அறநிலைய அமைச்சர் அவர்களால் கொண்டுவரப்பட்ட அரசினர் தனித் தீர்மானத்தின் மீது சட்டப்பேரவையில் நடைபெற்ற விவாதத்தில் 15—4—74 ஆம் தேதியன்று**

## திரு. பெ. சௌந்தரபாண்டியன் அவர்கள் ஆற்றிய உரை

* திரு. பெ. சௌந்தரபாண்டியன் : மாண்புமிகு தலைவர் அவர்களே, அறநிலைய அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் தீர்மானத்தின் மீது என்னுடைய சிலகருத்துக்களை இந்த அவையில் எடுத்துச் சொல்வதற்கு வாய்ப்பு அளித்தமைக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சுப்ரீம் கோர்ட்டில் சொல்லப்பட்ட தீர்ப்பில் என்ன இருக்கிறது என்பதை நாம் முதலில் காணவேண்டும். ஆகமங்கள் படித்து தேர்ச்சி பெற்றவர்களுக்குத்தான் அர்ச்சகர்களாவதற்கான வேலை வாய்ப்பைத் தரவேண்டும் யாரையும் நியமித்துக்கொள்ள இது அரசாங்க வேலை அல்ல. மத சம்பந்தமான பொறுப்பாகும். எல்லா மதங்களுக்கும் இந்தப் பொறுப்பு இருக்கிறது என்பது தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது.

முதலில் நான் எடுத்துக்கூற விரும்புவது மாண்புமிகு அறநிலையத் துறை அமைச்சர் அவர்கள் இந்த அவையில்

இருக்கிற உறுப்பினர்கள் அத்தனை பேர்களுக்கும் ''அரசாங்கம் போட்ட ஆணை என்ன? அதன்மீது யார் வழக்குத் தொடுத்தார்கள்? வழக்கில் அரசாங்கத் தரப்பில் என்ன என்ன வாதங்கள் எடுத்து வைக்கப்பட்டன? எதிர் தரப்பில் கூறப்பட்ட வாதங்கள் என்ன? இதன்மீது சுப்ரீம் கோர்ட்டில் என்ன நீதி அளிக்கப்பட்டது?'' என்கிற விவரங்களை எல்லாம் எடுத்து உறுப்பினர்களுக்குக் கொடுத்திருக்க வேண்டும். வழக்கு பற்றி அவையில் உள்ள எல்லா உறுப்பினர்களுக்கும் தெரியுமா என்றால் என்னைப்பொறுத்த வரையில் பல பேர்கள் இந்த விவரங்களை அறியமாட்டார்கள் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்த அரசாங்கம் இந்தத் தனித் தீர்மானத்தைக் கொண்டுவருவதற்கு முன்னால் என்ன செய்திருக்கவேண்டுமென்றால் நான் முன்பு சொன்னதுபோல அந்த வழக்கு—தீர்ப்பு சம்பந்தப்பட்ட எல்லா விவரங்களையும் தொகுத்து ஒவ்வொரு உறுப்பினருக்கும் வழங்கியிருக்க வேண்டும். ஆனால் அரசாங்கம் அதை வழங்குவதற்குத் தவறிவிட்டது என்பதை நான் மெத்த வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ள கடமைப்பட்டிருக்கிறேன்.

ஆகவே, இனிமேலாவது இதுபோன்ற தீர்மானங்கள் வருகிற நேரத்தில் அதுபற்றிய விவரங்களை எல்லாம் இந்த அவையில் இருக்கிற மாண்புமிகு உறுப்பினர்களுக்கு எடுத்துத் தொகுத்துக் கொடுத்தால்தான் உறுப்பினர்கள் பலவற்றையும் கவனித்து, தங்கள் கருத்துக்களை எடுத்து வழங்கத்தக்க சூழ்நிலை இருக்கும் இதுபற்றிய வழக்கில் நீதிமன்றத்தின் தீர்ப்பு அரசாங்க ஆணைக்கு விரோதமாகக் கூறப்பட்டிருக்கிறது. அரசாங்க ஆணை என்ன, அதை எதிர்த்து வழக்காடியவர்களின் கருத்தென்ன, அரசாங்க ஆணைக்கு ஆதாரமாக நமது அட்வகேட் ஜெனரல் ஆணித்தரமாக எடுத்து வாதாடிய கருத்துக்கள் என்ன . . .

திரு. ந. வீராசாமி: சார், இதை உறுப்பினர் ஆதரிக்கின்றாரா? எதிர்க்கின்றாரா? ஒன்றும் புரியவில்லை.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: மாண்புமிகு உறுப்பினர் மிகவும் அவசரப் படுகிறார். கடைசியில் என் கருத்தைச் சொல்வேன்.

(முற்பகல் 10-30)

ஆகவே இந்த வழக்கை நடத்தக்கூடிய முழுப் பொறுப்பும் அட்வொகேட் ஜெனரலுக்கு இருக்கிறது. அவர் தான் இந்த அவைக்குத் தகுந்த காரணங்களையும் தகுந்த பரிகாரத்தையும் தேடுவதற்கும் விளக்கம் அளிப்பதற்குமான பொறுப்பிலே இருக்கிறாரே தவிர என்னைப் பொறுத்தவரையில், மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் அவர்கள் இதற்குத்தகுந்த விளக்கம் அளிப்பார்கள் என்று ஒப்புக்கொள்ள முடியாது.

அட்வொகேட் ஜெனரலும் இந்த அவையிலே அங்கம் வகிக்கக் கடமைப் பட்டிருக்கிறார். பேரவைத் தலைவர் அவர்களே, அவரை இந்த அவைக்கு வரவழைத்து அவருடைய வாதத்தையும் அவர் தரப்பிலே சொல்லப் பட்ட கருத்துக்களையும் அரசாங்கத்தின் சார்பிலே சொல்லப் பட்ட சான்றுகளையும் எடுத்துக் காட்டக் கடமைப்பட்டிருக்கிறார், அவரை இந்த அவைக்கு அழைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

தலைமைச் செயலகத்தின் முன்னாள் தலைமைச் செயலாளர் திரு ராயப்பா அவர்கள் ஒரு வழக்கைத் தொடர்ந்தார், அந்த வழக்கிலே அவருக்குச் சாதகமாக தீர்ப்பு இல்லையென்றவுடனே அவர் சுப்ரீம் கோர்ட்டிற்கே மீண்டும் ஒரு மேல்முறையீடு செய்துகொண்டார்கள் என்பதை நாம் எல்லாம் அறிவோம். இந்த நாடும் அறிந்திருக்கிறது. இந்த அரசாங்கம் போட்ட ஒரு ஆணையின் மீது சுப்ரீம் கோர்ட்டு ஒருதீர்ப்பை அளித்தது, இந்த அரசாங்கம் அதை ஏன் மறுபரிசீலனை செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளவில்லை? இதற்கு நம்முடைய அட்வொகேட் ஜெனரல் அவர்கள் முயற்சி எடுத்தார்களா? அவர் அப்படி

முயற்சி எடுக்கத் தவறியதன் காரணம் என்ன? இதற்கு விடை அளிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

காவிரி நதிநீர்ப் பிரச்னை வந்தபொழுது மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் இந்த அவையிலே உள்ள எல்லாக் கட்சிப் பிரதிநிதிகளையும் கூட்டிப் பேசி ஒருமித்த முடிவு எடுத்த காட்சியைப் பார்க்கிறோம். இது சமுதாயத்தின் பிரச்னை, அரசாங்கத்தின் ஆணைக்கு எதிர்ப்புத் தெரிவிக்கப் பட்ட பிரச்னை, முக்கியமான பிரச்னையாக இருப்பதால் ஏன் சர்வ கட்சித் தலைவர்களையும் அழைத்து இதைப்பற்றி ஒரு தீர்வு காணுவதற்கு முயற்சி எடுத்துக்கொள்ள வில்லை என்று கேட்க விரும்புகிறேன்.

சுப்ரீம் கோர்ட்டில் ஏற்கனவே ஒரு வழக்கிலே, கோரக்நாத் வழக்கிலே சீப் ஜஸ்டிஸ் திரு. சுப்பராவ் அவர்கள் ஒரு தீர்ப்பை வழங்கினார்கள், அப்போதும் பார்த்தோம், அடிப்படை உரிமைகளை மாற்ற முடியாது, கான்ஸ்டிட்யூவண்ட் அசெம்பிளியை கூட்டித்தான் பண்டமண்டல் ரைட்டை மாற்ற வேண்டுமென்று தீர்ப்புக் கூறியதை நாம் பார்த்தோம், அந்த நேரத்தில் என்ன நடந்ததுஎன்பதை நாம்எண்ணிப்பார்க்கவேண்டும். நம்முடைய அரசியல் அமைப்புச் சட்டத்தில் 13-வது ஆர்டிகிளில்

Any law which is repugnant to the Articles in this Chapter (that is, Fundamental Right) is inoperative என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த நேரத்தில் What is Law என்பதையும் பார்க்க வேண்டும்.

Law includes an order. notification, regulation or custom having the force of law either in All-India or in any area

என்பதையும் நாம் கருத்திலே கொள்ள வேண்டும். சுப்ரீம் கோர்ட்டிலே திரு. சுப்பராவ் கொடுத்த தீர்ப்பு சரிதானா என்று பார்க்கவேண்டும். அது ஒரு பிரச்னையாக ஆகி, அகில இந்தியாவிலும் அது ஒரு சட்ட சிக்கலை உருவாக்கிற்று என்பதை மறந்துவிடமுடியாது.

அந்த நேரத்திலே என்ன செய்தார்கள்? குடியரசுத் தலைவர் அவர்கள் சுப்ரீம்கோர்ட்டிலே உள்ள எல்லா நீதிபதிகளையும் ஒரே இடத்திலே அழைத்து அமரச்செய்து இந்தச் சட்ட சிக்கலுக்கு ஒரு பரிகாரம் காணவேண்டுமென்று கேட்டுக்கொண்டதை நாம் பார்த்தோம். அப்போது சுப்ரீம் கோர்ட்டிலே இருந்த எல்லா நீதிபதிகளும் ஒன்று சேர்ந்து ஒரே இடத்திலே அமர்ந்து ஏறத்தாழ 3 மாதங்கள் இதைப் பற்றி ஆராய்ந்து அடிப்படை உரிமையை மாற்றுவதற்கு கான்ஸ்டிட்யூவண்ட் அசெம்பிளிக்குத்தான் அதிகாரம் இருக்கிறது என்று தீர்ப்பு அளிக்கப்பட்டது.

ஆகவேதான் நான் கேட்கிறேன், அரசாங்கத்தின் ஆணைக்கு எதிராக ஒரு தீர்ப்பு கொடுக்கப்பட்டவுடன் ஏன் நம்முடைய அரசாங்கம் உடனடியாக குடியரசுத் தலைவரை அணுகி சுப்ரீம் கோர்ட்டிலே உள்ள எல்லா நீதிபதிகளையும் அழைத்து இந்த சட்ட சிக்கலுக்கு ஒரு பரிகாரம் காணக் கூடாது என்று கேட்க விரும்புகிறேன். நம்முடைய அட்வொகேட் ஜெனரல் என்ன செய்தார்? ஏன் இந்த ஆலோசனையை அரசாங்கத்திற்கு வழங்கவில்லை.

என்னுடைய பணிவான வேண்டுகோள் என்னவென்றால், நாம் மத்திய அரசினிடத்திலே இந்தத் தீர்மானத்தை அனுப்பி இதற்கு ஒரு பரிகாரம் காண வேண்டுமென்று கேட்கிற நேரத்தில் அதனாலே பரிகாரம் கிடைப்பதற்கு நீண்ட நெடுங்காலம் ஆகும் ஏற்கெனவே சுப்ரீம் கோர்டில் கொடுக்கப்பட்ட ஒரு தீர்ப்பில் ஏற்பட்ட இது போன்ற சட்ட சிக்கலுக்கு என்ன ஏற்பாடு செய்திருக்கிறார்களோ அந்த ஏற்பாட்டையே இதற்கும் செய்ய வேண்டும் என்று ஏன் நம்முடைய அரசாங்கம் கேட்டுக்கொள்ளக் கூடாது?

மாண்புமிகு திரு. செ. மாதவன்: தலைவர் அவர்களே, மாண்புமிகு உறுப்பினர் அவர்கள் ஒரு திருத்தம்கூடக் கொடுத்திருக்கிறார்கள், அதைப்பற்றி அவர்கள் விளக்கம் சொன்னால் நன்றாக இருக்கும்.

குடியரசுத் தலைவர் அவர்கள் ஏதாவது கருத்துப் பெற வேண்டுமானால் சுப்ரீம் கோர்ட்டிற்கு அனுப்பி அவர்களிடைய ஒப்பினியனைப் பெறலாம் என்றுதான் இருக்கிறது. அவர்கள் சொல்வது முன்னாலே ஒரு தீர்ப்பு வருமானால் பின்னாலே அந்தத் தீர்ப்பை எதிர்த்து ஒரு வழக்கு வருகின்றபொழுது நம்முடைய உச்ச மன்ற நீதிபதிகள் சேர்ந்து முடிவெடுப்பார்கள் என்பதுதான். அதைத்தான் சொல்கிறார்கள் என்று நினைக்கிறேன்.

குடியரசுத் தலைவர் நீதிபதிகளை அழைத்துப் பேசி பரிகாரம் காணக்கூடிய முறையில்லை. குடியரசுத் தலைவர் வேண்டுமானால் ரெபரன்ஸ் கேட்டு அவர்களிடமிருந்து ஒபினியன் வாங்கலாம், அப்படி நாம் வாங்கினால்கூட அது நமக்குப் பயன்படாது. காரணம் அதுகூட கோர்ட்டைக் கட்டுப்படுத்தாது. நாம் செய்கின்ற முறைப்படி அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட்டால் உடனடியாகப் பலன் கிடைக்கும் ஆகவே நாம் இப்போது எடுத்திருக்கக்கூடிய முயற்சிதான் சரியான முயற்சி.

அவர்கள் சொல்கிறபடி எல்லா நீதிபதிகளையும் குடியரசுத்தலைவர் அழைத்துப் பேசுகின்ற முறை எதிலே வருகிறது என்று எனக்குத் தெரியவில்லை. குடியரசுத் தலைவர் ஒபீனியன் கேட்கலாம், அவர்கள் யோசனை தெரிவிப்பார்கள், அது பயன் உள்ளதாக இருக்காது. அரசியலமைப்புச் சட்டத்தைத் திருத்தவேண்டுமென்று நாம் சொல்கிறோம். அதைப்பற்றி அவர்களுடைய கருத்து என்ன?

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: குடியரசுத் தலைவர் மூலமாக ஏன் முன் முயற்சி எடுக்கவில்லை என்று கேட்கிறேன். அரசியலமைப்புச் சட்டத் திருத்தத்தைப்பற்றிப் பின்னால் சொல்ல இருக்கிறேன் . . . .

மாண்புமிகு திரு. செ. மாதவன்: அந்த முயற்சி தேவையில்லை என்பது தான் எங்களுடைய கருத்து. நம்முடைய சட்டத்

தைப்பற்றி உச்ச நீதி மன்றத்திலே ஒரு தீர்ப்பை வழங்கி யிருக்கிறார்கள். அந்த தீர்ப்பின் அடிப்படையிலே நாம் கொள்கையை நிறைவேற்றமுடியவில்லை. அதை மாற்று வதற்கு உடனடியாக அரசியலமைப்புச் சட்டம் திருத்தப் படவேண்டும், அப்படித் திருத்தப்பட்டால்தான் நாம் நம்முடைய கொள்கையை நிறைவேற்ற முடியும் என்று கொண்டுவந்திருக்கிறோம். இதற்குப் பதிலாக மறுபடியும் ரெபரன்ஸ் கேட்பதுபோன்ற முறையில் ஈடுபட்டால் கால தாமதம்தான் ஆகும், ரெபரன்ஸ் என்ற அடிப்படையிலே நாம் செய்தாலும்கூட அது செல்லாது என்று சொல்வதற்கு அவர்களுக்கு உரிமை இருக்கிறது. உறுப்பினர் அவர்கள் ஒரு திருத்தம் கொடுத்திருக்கிறார்கள். அதிலே குடியரசுத் தலைவர் மூலமாக எல்லா நீதிபதிகளையும் கேட்கவேண்டு மென்று சொல்லியிருக்கிறார்கள், அது எந்த அரசியல் அமைப்புச் சட்டத்திலே இருக்கிறது என்று எனக்குத் தெரியவில்லை, அவர்கள் அதைப்பற்றி விளக்கினால் பரவாயில்லை.

திரு பெ. சௌந்தரபாண்டியன் : நான் இந்தத் தீர்மானத் திற்கு விரோதமாகப் பேசவில்லை. ஏன் முதல் முயற்சியாக எடுத்துக்கொள்ளவில்லை என்று தான் கேட்டேன், அதைச் சட்ட அமைச்சர் அவர்கள் தெரிந்துகொள்ள வேண்டும். இப்படி ஒவ்வொரு முயற்சியாக எடுத்துக்கொண்டுபோய்...

மாண்புமிகு திரு. செ. மாதவன்: சட்ட அமைச்சர் தெரிந்து கொள்வதற்காகக்கூடக் கேட்கலாம். உச்ச நீதி மன்றத்தி னுடைய தீர்ப்பை மறுபடியும் உச்ச நீதி மன்றத்திற்கே சென்று அது செல்லுமா என்று ஆராய்வதற்கு எந்த அரசியல் அமைப்புச் சட்டத்திலே இடம் இருக்கிறது என்பதைச் சொல்லவேண்டும்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன் : ஏற்கெனவே கோரக்நாத் வழக்கிலே எல்லா நீதிபதிகளையும் வைத்து ஒரு முடிவு எடுத்திருக்கிறார்களே, அந்த முடிவைப்போல் இந்தப்

பிரச்னையிலும் எடுப்பதற்கு நாம் ஏன் முயற்சி எடுத்துக் கொள்ளக்கூடாது என்பதைத்தான் கேட்கவிரும்புகிறேன்.

மாண்புமிகு திரு. செ. மாதவன்: விளக்கத்தைத்தான் சொன்னேன். அப்படிப்பட்ட ஒரு நிலைமை ஏற்படவில்லை. அவர்கள் எதைக் குறிப்பிடுகிறார்கள் என்று தெரியவில்லை எப்படி ஏற்படுகிறது என்றால், முன்னாலிருந்த நீதிபதி சில தீர்ப்புகளை ஃபண்டமெண்டல் ரைட்ஸைப்பற்றிக் கொடுக்கிறார்கள். அதே சப்ஜெக்டைப்பற்றி பிறகு உள்ள நீதிமன்றங்களில் மறுபரிசீலனைக்கு வருகிறது. அப்பொழுது நீதிமன்றங்களில் எல்லா நீதிபதிகளும் முடிவெடுக்கலாம். எனவே நாட்டிற்கு முக்கியமான முடிவு என்று கருதினால் தவிர குடியரசுத் தலைவரையோ, பாராளுமன்றத்தையோ, மத்திய அரசையோ நீங்கள் பரிசீலிக்க வேண்டுமென்று உத்தரவிட' உத்தரவு போட உரிமை கிடையாது. உத்தரவு இடப்படவும் இல்லை.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: தலைவரவர்களே, ஒரு நாட்டின் முன்னேற்றத்தில் ஃபண்டமெண்டல் ரைட்ஸ் குறுக்கிட்டால் எல்லா ஜட்ஜ்களும் சேர்ந்து பரிசீலிக்கின்ற முறை இருக்கிறது. நம்முடைய தமிழ் நாட்டின் ஆணைக்கு விரோதமாக தீர்ப்பளிக்கப்பட்டிருக்கிறது. ஒரு சமுதாயத்தின் முன்னேற்றத்திற்காகப் போடப்பட்ட ஆணையாகும் அது. ஆகவே, ஏன் . . . .

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: இப்படிப் படிப்படியாக முயற்சியெடுக்க வேண்டுமென்பதற்குப் பதிலாக ஒரேயடியாக அரசியல் சட்டத்தையே திருத்திவிட்டால் தமிழகம் மட்டுமல்லாமல் இந்தியாவிலுள்ள எல்லா மாநிலங்களும் அப்படிச் செய்து கொள்ளலாம் என்ற எண்ணத்தில்தான் செய்யப்பட்டிருக்கிறது. ஆகவே, மாண்புமிகு உறுப்பினரவர்கள் படிப்படியாகச் செல்லவேண்டுமென்று வலியுறுத்தி தீர்மானத்தின் மொத்தக் கருவையும் சிதைத்து விடுவது நல்லதல்ல என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: நான் இந்தக் கருத்தை ஏற்றுக் கொள்கிறேன். நான் இதை என்னுடைய வாதமாக வைக்கிறேனே தவிர பிடிவாதமாக நிச்சயமாகக் கேட்க மாட்டேன். ஏனென்றால் அரசாங்கம் ஏன் முயற்சியெடுக்க வில்லை என்றுதான் கேட்கிறேனே தவிர, நம்முடைய அட்வகேட் ஜெனரல் என்ன முயற்சியெடுத்தார்கள் என்று கேட்கிறேனே தவிர வேறொன்றுமில்லை.

ஆகவே, இந்த நல்ல தீர்மானத்தை இந்த அரசாங்கம் கொண்டு வந்திருப்பதை உள்ளபடியே நான் வரவேற் கிறேன். அதேநேரத்தில், இந்திய அரசியல் சட்டத்தைத் திருத்துவதற்கு மிக மிக கால தாமதம் ஆகாமல் எவ்வளவு விரைவில் திருத்துவதற்கு இந்த அரசு முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டுமோ அந்த அளவிற்கு முயற்சியெடுத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டு, என்னுடைய திருத்தத் தீர்மானத்தையும் வலியுறுத்தி மாண்புமிகு அறநிலையத் துறை அமைச்சரவர்கள் கொண்டு வந்துள்ள இந்தத் தீர்மானத்தை முழுமனதோடு அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பாக வரவேற்று அமர் கிறேன். நன்றி, வணக்கம்.



# 10

## மேன்மை தங்கிய கவர்னர் அவர்களின் உரைக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தின் மீது நடைபெற்ற விவாதத்தில் கலந்துகொண்டு சட்டப்பேரவையில் 21—2—75-ஆம் தேதியன்று

## திரு. பெ. சௌந்தரபாண்டியன் அவர்கள் ஆற்றிய உரை

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: மாண்புமிகு சட்டப் பேரவைத் துணைத் தலைவர் அவர்களே! மேன்மை தங்கிய ஆளுநர் அவர்கள் இந்த மாமன்றத்தில் ஆற்றிய உரையின் மீது அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் என்னுடைய சில கருத்துக்களை இங்கே கூறுவதற்கு நான் கடமைப் பட்டிருக்கிறேன். எனக்கு முன்னால் பேசிய மாண்புமிகு உறுப்பினர் திரு. கணேசன் அவர்கள் இந்த நாட்டில் நிலவுகின்ற வறட்சிபற்றியும், இந்த அரசாங்கம் எடுத்துள்ள முயற்சி பற்றியும் இங்கே எடுத்துச் சொன்னார்கள். என்னுடைய கடமையெல்லாம் இந்த அரசாங்கம் எந்தெந்த வகையில் வறட்சிப் பகுதிகளைப் பிரிப்பதில் பாகுபாடு காட்டியிருக்கிறது என்பதைச் சுட்டிக்காட்டுவதாகும். என்னுடைய தொகுதியைப் பொறுத்த வரையிலும் எல்லாப் பகுதிகளும் வறட்சிப் பகுதிகளாகத்தான் இருக்கின்றன. அமராவதி ஆற்றின் கடைக்கோடிப் பகுதியில் ஏறத்தாழ பத்தாயிரம் ஏக்கர் நிலம் பாசனமின்றி வறட்சியாக இருக்கிறது இருந்தாலும் எந்தெந்தப்பகுதி வறட்சிப் பகுதி என்பதை நிர்ணயிப்பதில் அதிகாரிகள் எவ்வளவு தவறு செய்திருக்கிறார்கள் என்பதை இந்த மாமன்றத்தின் கவனத்திற்குக் கொண்டுவருவது என்னுடைய கடமையாகும். அமராவதி ஆற்றின் கடை கோடிப் பகுதியில் புலியூர், மேலப்பாளையம், கட்டளை, ரெங்கநாதபுரம், வீரராக்கியம், மணவாசி, மாயனூர் போன்ற எல்லாப் பகுதிகளும் வறட்சிப் பகுதிகள்தான். அது மாண்புமிகு

முதலமைச்சர் அவர்களுக்கும் நன்ருகத் தெரியும். ஆனுல் அதிகாரிகள் புலியூர், மேலப்பாளையம் ஆகியவற்றை மாத்திரம் வறட்சிப் பகுதிகள் என்று அறிவித்து விட்டு மீதியுள்ள எல்லாப் பகுதிகளையும் செழிப்பான பகுதி என்று கருதி அங்கே நிலவரி வசூலிக்கிருர்கள். விவசாயிகளைக் கெடுபிடி செய்கிருர்கள். இதைப்பற்றி அதிகாரிகளிடம் சொல்லி அந்தப் பகுதிகளையும் வறட்சிப் பகுதிகள் என்று அறிவிக்க வேண்டும் என்று கேட்டும் அவர்கள் நடவடிக்கை எடுக்க வேயில்லை என்பதை நான் இந்த நேரத்தில் இந்த மாமன்றத்தின் கவனத்திற்கும் முதலமைச்சர் அவர்களுடைய கவனத்திற்கும் கொண்டுவருகிறேன். ஒருபக்கம் விவசாயிகள் வறட்சியால் வேதனைப்படுகிருர்கள் இன்னொருபக்கம் பார்த்தால் அரசாங்கம் வேதனை தருகிறது எனது தொகுதியில் பொதுப்பணித் துறையின் கீழ் உள்ள ஆற்றுப்புறம் போக்கு நிலத்தை கட்டளை, ரெங்கநாதபுரம், மாயனூர் பகுதியில் உள்ள அறுபது குடும்பங்கள் இருபது ஆண்டு காலமாக சீர்திருத்தி, மேடுபள்ளம் திருத்தி, நஞ்சையாக்கி, பயிர்செய்து பயனை அனுபவித்துக் கொண்டிருக்கிருர்கள்—யார் அவர்கள் என்ருல் பின்தங்கிய மக்களும் தாழ்த்தப்பட்ட மக்களும்தான். அந்த நிலத்தையே நம்பியிருக்கிற—நம்பி வாழ்கிற மக்களை அதிகாரிகள் வெளியேற்றுவதற்கு கடுமையான நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிருர்கள். இதைப்பற்றி முதலமைச்சர் அவர்களிடம் இரண்டு முறை மனுக்கொடுத்து விட்டார்கள். ரெவின்யூ அமைச்சரிடமும் மனுக்கொடுத்திருக்கிருர்கள். அரசாங்கம் என்ன நடவடிக்கைஎடுத்திருக்கிறது என்று கேட்க ஆசைப்படுகிறேன். ஆனுல் காவிரியின் வடகரையில் ஒருவருக்கு இருபத்தைந்து ஆண்டுகாலத்திற்கு சீர்பலாப்புத்தூர் என்கிற ஊரிலே உள்ள ஆற்றுப் புறம்போக்கு நிலத்தை குத்தகைக்கு விட்டிருக்கிருர்கள் என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

எனக்கு முன்னுலே பேசிய மாண்புமிகு உறுப்பினர் அரசு கொள்முதலில் கெடுபிடி காட்டவில்லை என்று குறிப்

பிட்டார். என்னைப் பொறுத்தவரையிலும் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன், ஏழை விவசாயிகள் கொஞ்சம் நிலம் வைத்திருக்கிறவர்கள் மீது கொள்முதலில் எவ்வளவு கெடுபிடி செய்திருக்கிறார்கள் என்பது கிராமங்களுக்குச் சென்று பார்த்தால்தான் தெரியும். அதேநேரத்தில் 50 ஏக்கர், 60ஏக்கர் நிலம் வைத்திருக்கிறவர்களை நெருங்கவே அரசாங்கம் பயப்படுகிறது. வறட்சிப் பகுதிகளை முதலமைச்சர் அவர்கள் பார்வையிட்டார், அமைச்சர்கள் பார்வையிட்டார்கள், அதிகாரிகள் பார்வையிட்டார்கள், ஆளுநர் பார்வையிட்டார். ஆனால் பார்வையிடும்போது உடன் தொகுதி சட்டமன்ற உறுப்பினர்களையும் அழைத்துச் சென்றிருந்தால் அங்கு நடைபெறும் பொதுப்பணிகள் எப்படி நடைபெறுகின்றன என்றும் எந்தெந்தப் பகுதிகள் வறட்சியாக இருக்கின்றன என்றும் அந்தந்தப் பகுதிகளில் என்னென்ன பணிகளை ஆற்றுகிறார்கள் என்றும் உண்மையிலேயே கடமையாற்றுகிறார்களா என்றும் கண்காணிப்பதற்கு வசதியாக இருக்கும். எதிர்க் கட்சிக்காரர்கள் மீது குற்றம் சாட்டுகிறார்கள் அவர்கள். ஆனால் வறட்சிப் பகுதிகளுக்குச் செல்லுகின்ற போது எதிர்க்கட்சிக்காரர்களின் பகுதிகள் வரும்போது அவர்களையும் ஏன் அழைத்துச் செல்லவில்லை என்று கேட்க ஆசைப்படுகிறேன். குடிநீர்த் திட்டமாக இருந்தாலும் சாலைத் திட்டமாக இருந்தாலும் ஊராட்சி ஒன்றியங்களின் மூலமாக நிறைவேற்றப்படுகின்றன. அந்தப்பணிகள் எல்லாம் ஒழுங்காக நடைபெறுகின்றனவா என்பதைக் கண்காணிக்க ஒரு குழுவை அமைத்து அந்தக் குழு அதையெல்லாம் பார்த்து பரிசீலனை செய்து அரசாங்கத்திற்கு அவ்வப்போது அறிக்கை அனுப்புவதற்கு ஏற்பாடு செய்தால் பணிகள் நன்றாக நடைபெறும் பணமும் முறையாகச் செலவிடப்படும் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். தமிழகத்தின் எல்லாப் பகுதிகளும் ஏறத்தாழ வறட்சியாக இருக்கின்றன. ஆனால் இந்த அரசாங்கம் நகரப் பகுதியிலேமட்டும் குடும்பக்கார்டு கொடுத்து உணவுப் பொருட்களையும் இதரப்பண்டங்களையும் வழங்கிக்

கொண்டிருக்கிறது. ஆனால் கிராமங்களிலே உள்ள மக்கள் தினந்தோறும் ஒரு வேளை சாப்பாட்டிற்குக்கூட வழியில்லாமல் ஒட்டிய வயிறோடு திண்டாடிக்கொண்டிருக்கிறார்கள் என்பதை நீங்கள் நினைத்துப் பார்க்கவேண்டும். கிராமங்களில் உள்ள மக்கள் அரிசி கிடைக்காமல், கோதுமை கிடைக்காமல், உணவு தானியங்கள் கிடைக்காமல் சந்தை சந்தையாக அலைகின்ற காட்சியை மறந்துவிடக் கூடாது. ஆகவே கிராமப்பகுதிகளுக்கும் இந்த அரசாங்கம் குடும்பக் கார்டுகளை வழங்கி அவர்களுக்கு கோதுமை, அரிசி போன்ற உணவுப் பொருள்களையும், கம்பு, சோளம் போன்ற தானியங்களையும் வழங்கவேண்டுமென்று நான் பணிவோடு தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்த நேரத்தில் இன்னொன்றையும் நான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். எனக்கு முன்னால் பேசிய அருமை நண்பர் திரு. எல். கணேசன் அவர்கள் காவிரியில் வரலாறு காணாத அளவிற்கு இன்று தண்ணீர் வற்றி வறண்டு திருச்சி, தஞ்சை போன்ற மாவட்டங்களில் பயிர்களே இல்லாத அளவிற்கு நிலைமை இருக்கிறது என்று இங்கே சுட்டிக்காட்டினார். காவிரியின் வரலாற்றை நாம் புரட்டிப் பார்ப்போமேயானால் வெள்ளத்தைத் தடுப்பதற்காகக் கரிகாலன் ஆட்சிக்காலத்தில் கரை போட்டான். ஆனால் கருணாநிதியின் ஆட்சிக்காலத்தில் காவிரியின் வரலாற்றைப் பார்த்தால் ஒரு மாபெரும் கறையே படிந்திருக்கிறது என்பதை ஆதாரத்துடன் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். முதலமைச்சர் அவர்கள் பொதுப்பணித்துறை அமைச்சராக இருந்த காலத்தில் ஹேமாவதி திட்டத்தைப்பற்றி டெல்லியில் ஒரு உடன்பாட்டை ஒப்புக்கொண்டு வந்திருக்கிறார்கள் அந்த உடன்பாட்டின்படி மைசூர் அரசாங்கம் ஹேமாவதி அணையை நிறைவேற்றிக் கொள்ள வேண்டும், 1924 ஆம் ஆண்டு ஒப்பந்தத்தின்படி நமக்குக் கிடைக்க வேண்டிய தண்ணீருக்கு உத்திரவாதம் அளிக்க வேண்டுமென்ற உடன்பாட்டை ஒத்துக்கொண்டு வந்தார்கள். அப்படி

ஒப்புக்கொண்ட உடன்படிக்கையினால் தான் ஹேமாவதி அணை திட்டம் நிறைவேற்றப்பட்டது. அதனால் நமக்குக் கிடைக்க வேண்டிய தண்ணீர் மைசூர் அணையில் தேக்கி வைக்கப்பட்டது. ஆகவே தான் முறையாக 1924 ஆம் ஆண்டின் ஷரத்துப்படி நமக்கு வரவேண்டிய எஞ்சிய தண்ணீர் அனைத்தும் ஹேமாவதி போன்ற அணைக்கட்டுகளில் தேக்கி வைக்கவும், நமக்குக் கிடைக்காமல் இருக்கும் வகையிலும் 1968 ஆம் ஆண்டு பொதுப்பணித் துறை அமைச்சராக இருந்த கருணாநிதி அவர்கள் ஏற்பாடு செய்து கொண்ட உடன்பாட்டின் காரணமாக காவிரியில் வறட்சி நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அதனால் திருச்சி, தஞ்சை போன்ற மாவட்டத்து மக்களுக்கு விவசாயம் செய்ய தண்ணீர் இல்லாமல் இருக்கிறது. இன்னும் கொஞ்சம் காலம் போனால் காவிரி...........

மாண்புமிகு திரு. செ. மாதவன் : தலைவரவர்களே ! இப்படிப்பட்ட தவறான தகவல்களினால் தான் நம்முடைய மாநில அரசின் உரிமையை இன்னொருவருக்குக் கொடுக்கும் முறையில் கூறப்படும் கருத்து மிகவும் பாதகமானது. இந்தப் பிரச்சனையில் ஒவ்வொன்றிலும் எதிர்க்கட்சித் தலைவர்களிடத்தில் எவ்வளவு செய்திகளைச் சொல்ல முடியுமோ அவ்வளவும் சொல்லப்பட்டிருக்கிறது. 1924 ஆம் ஆண்டு ஒப்பந்தத்தின்படி அணையைக் கட்டிக் கொள்வதில் ஆட்சேபணை இல்லை. ஆனால் அதே சமயத்தில் அணையைக் கட்டித் தண்ணீரைத் தேக்குவதற்கு ரூல்ஸ் ஆப் ரெகுலேசன் போடப்பட்டு அந்த ஒப்பந்தத்தின்படி நமக்கு வேண்டிய தண்ணீரைக் கொடுத்துவிட்டுத்தான் அவர்கள் தேக்க வேண்டும் என்பது வாதம். இதில் நாம் விட்டுக்கொடுத்து அவர்கள் அணைகட்டுவது என்ற வாதம் எப்படி வரும்? 1924 ஆம் ஆண்டு ஒப்பந்தத்தின்படி எந்த அணையை வேண்டுமானாலும் கட்டிக் கொள்ளலாம். ஆனால் தண்ணீரைத் தேக்குவதற்கு முன்னால் எங்களுடைய அனுமதியைப் பெற்று எங்களுடைய ஒப்பந்தத்தைப் பெற்று எங்களுக்குள்ள

உரிமையைக் கொடுக்க வேண்டும். இதுதான் வாதமே தவிர முதலமைச்சர் விட்டுக் கொடுத்து விட்டார் என்று சொல்லுவது தவறு. இப்பொழுதுள்ள நிலைமை மைசூரில் உள்ளவர்கள் தான் தமிழ்நாட்டில் பஞ்சம் வர வேண்டும் என்று ஆசைப்படுகிறார்கள் என்று பலபேர் சொல்லுகிறார்கள்.

டாக்டர் எச். வி. ஹாண்டே: அமைச்சரவர்களே அங்கே அணைகட்டும் நேரத்தில் நமக்குத் தெரிவித்து விட்டுத் தான் கட்டவேண்டும், நம்முடைய உரிமையை விட்டுக் கொடுக்க வில்லை என்று சொல்லுகிறார்கள். ஆனால் அமைச்சரவர்களுக்கு ஞாபகம் இருக்கும் என்று கருது கிறேன் இதே மன்றத்தில் 1968, 1969 ஆகிய அந்த இரண்டு ஆண்டுகளில் அப்பொழுதே மதிப்பிற்குரிய திரு. பாலசுப்பிரமணியம் அவர்களால் சம்யுக்த சோஷலிஸ்ட் கட்சி உறுப்பினராக இருந்தவர் — இந்த பிரச்சனை எழுப்பப்பட்டு அப்பொழுது கூட அரசாங்கம் கொஞ்சம் தாமதமாகத்தான் தெரிந்து கொண்டு என்ற குற்றச்சாட்டு சுமத்தப்பட்டது. அவர்களுடைய வாத மெல்லாம் இன்னும் சுறுசுறுப்பாக இருந்து, அப்பொழுதே கண்டுபிடித்திருக்கலாம் இவ்வளவு காலதாமதமாகிக் கண்டுபிடித்திருக்க வேண்டாம் என்பது தான். பாதி கட்டின பிறகு தான் நமக்குத் தெரிந்தது. we woke up rather late in the day என்ற இந்த வாதம் இருக்கிறது.

மாண்புமிகு செ. மாதவன்: திரு. சௌந்தரபாண்டியன் அவர்கள் சொன்னதற்குப் புதிய விளக்கத்தைக் கொடுப் பது என்றால் ஆட்சேபனை இல்லை. ஆனால் அவர்கள் சொன்ன விஷயம் சரியல்ல. அவர்கள் சொன்னது நம் முடைய உரிமை விட்டுக் கொடுக்கப்பட்டு விட்டது. முதலமைச்சரவர்கள் விட்டுக்கொடுத்து விட்டார்கள் என்று சொன்னது தவறு. எனவே நீங்கள் எழுப்பிய விவாதத் திற்கும் அவர்கள் எழுப்பியதற்கும் நிறைய வேறுபாடு உண்டு. ஆனால் சட்ட விரோதமாக மத்திய அரசினிடத்

திலிருந்து அனுமதியில்லாமல் கட்டிக்கொண்டு வருகிறார்கள் என்று தொடர்ந்து ஆட்சேபித்து வருகிறோம்.

டாக்டர் எச். வி. ஹாண்டே: நாம் ஏற்கனவே விட்டு விட்டோம். நம்முடைய உரிமைகளை அப்படியே விட்டு விட்டோம் என்பது அவர்களுடைய குற்றச்சாட்டு, எனவே இரண்டும் ஒன்றுதான்.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: சௌந்தரபாண்டியனைக் கேட்டால் அவர்கள் விளக்கட்டும். நீங்கள் எழுந்து தனி "ஸ்பீச்" போல் பேசுவது சரியல்ல.

டாக்டர் எச். வி. ஹாண்டே: அப்பொழுதுகூட நாங்கள் மறந்துவிட்டோம். We have completely ignored the right of the people of Tamilnadu. அப்பொழுது இருந்து வந்திருக்கக்கூடிய தொடர் கதையாகத்தான் இது இருக்கிறது. We might have discovered rather late. We have missed the bus in the first chance itself.

மாண்புமிகு திரு. செ. மாதவன்: இப்பொழுது அல்ல எப்பொழுதுமே இந்த மாநில அரசு நம்முடைய திராவிட முன்னேற்றக் கழக அரசாக இருந்தாலும் சரி அல்லது காங்கிரசு அரசாக இருந்தாலும் சரி தொடர்ந்து அங்கே அணை கட்டுவதற்கு மத்திய அரசின் அனுமதியைக் கொடுக்கக் கூடாது என்று வலியுறுத்தி வந்திருக்கிறோம். நம்முடைய வாதத்தைத் தெளிவு படுத்தாவிட்டால் அது மற்றவர்களுக்குத் தோதாகப் போய்விடும்.

திரு. நா. வீராசாமி: தலைவர் அவர்களே நம்முடைய முதலமைச்சரவர்கள் ஏதோ தவறிவிட்டார் என்று மாண்புமிகு உறுப்பினர் குற்றஞ் சாட்டினார். ஆனால் சில நாட்களுக்கு முன்னால் அண்ணா திராவிட முன்னேற்றக்கழகத்தின் தலைவர் அங்கே மைசூருக்குப் போனார்கள் முதலமைச்சரிடத்திலே பேசினார்கள் தண்ணீர் கொண்டுவந்தார்கள் என்று செய்தி வந்தது. அப்படி ஏதாவது தண்ணீர்

வந்திருக்கிறதா என்பதை மாண்புமிகு உறுப்பினரவர்கள் தெளிவாக்கினால் நல்லது.

திரு. எம். சுரேந்திரன்: குற்றத்தை மறைப்பதற்கு இன்னொன்றைச் சொல்லுவதா?

மாண்புமிகு பேரவைத் துணைத்தலைவர்: சௌந்தரபாண்டியனைக் கேட்ட கேள்விக்கு சுரேந்திரன் பதில் கொடுப்பது எப்படி முறையாகும்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: மாண்புமிகு உணவு அமைச்சரவர்கள் ஏதோ நான் பேசியது குற்றம் என்று இங்கே குறிப்பிட்டார்கள். அதற்குரிய ஆதாரத்தை நான் படிக்க விரும்புகிறேன். 1968 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 24-ஆம் தேதி இப்பொழுது முதலமைச்சராக இருப்பவர் அப்பொழுது பொதுப்பணித்துறை அமைச்சராக இருந்தார். டெல்லியில் நடந்த இந்த ஹேமாவதி நீர்த்தேக்கத் திட்டப் பிரச்னை சம்பந்தமாக அங்கே இரண்டு நாட்கள் நடந்த விவாதத்தில் கலந்து கொண்டு விட்டு இந்த மாமன்றத்தில் ஒரு அறிக்கை அளித்தார். அப்பொழுது உதவித் தலைவராக இருந்த மரியாதைக்குரிய புலவர் கோவிந்தன் அவர்கள் இந்த ஹேமாவதி நீர்த் தேக்க திட்டப் பிரச்னை சம்பந்தமாக ஒருநாள் விவாதம் வைத்துக்கொள்ளலாம் என்று அறிவித்தார். அப்பொழுது அளிக்கப்பட்ட அறிக்கையின் சில பகுதிகளை மாண்புமிகு அமைச்சரவர்களின் கவனத்திற்கும், இந்த மாமன்றத்தின் கவனத்திற்கும் கொண்டு வந்து சுட்டிக்காட்டுவதை என்னுடைய கடமையாகக் கருதுகிறேன்.

"அன்மையில் மைசூர் மாநிலம் கிருஷ்ணராஜசாகர் நீர்த்தேக்கத்தில் உள்வாய்ப் பகுதியில் காவிரி ஆற்றின் ஒரு உபநதியான ஹேமாவதியில் ஓர் அணைகட்டி நீரைத் தேக்கத் திட்டம் வகுத்துள்ளது. மைசூர் அரசு ஒப்பந்த ஷரத்துக்களில் 10 (iv). (vii) கீழ் ஏற்படத்தக்க. நீர்த்தேக்கங்களில் ஒன்றாக ஹேமாவதி திட்டத்தைக் குறிப்பிட்டுள்

ளார்கள். ஆனால் இந்நீர்த்தேக்கம் கட்டுவதால் ஒப்பந்தம் குந்தகப்படக்கூடிய சூழ்நிலைகள் உருவாகும் எனவும். குறிப்பாக தமிழகத்திற்கு உரிய நீர்ப்போக்கின் அளவு தொடர்ந்து அனுப்பப்பெற இயலுமா எனவும் மத்திய அரசுக்குத் தமிழக அரசின் சார்பில் அச்சம் தெரிவிக்கப் பட்டது. இந்த அச்சம் தீர்ந்து தொடர்ந்து 1924-ம் ஆண்டு ஒப்பந்த விதிமுறைகள் முற்றிலும் தொடர்ந்து பின்பற்றப் படுவதற்கும் அதற்கேற்ற உறுதி மொழிகள், விதிமுறை கள், நடைமுறை ஏற்பாடுகள், தேக்கும் செயல்முறைகள் இவைகள் அனைத்தும் ஹேமாவதித் திட்டம் ஏற்படு முன்னர் தீர்மானிக்கப்பட வேண்டும் எனவும் மத்திய அரசு கோரியது.

இந்த அடிப்படையில்தான் இரு நாட்கள் (19, 20—8-1968) டெல்லியில் மத்திய நீர்–மின்சாரக் குழுத் தலைவர் அவர்களுடன் இரு மாநில செயலாளர்கள், பொறி யியல் வல்லுநர்கள் ஆகியோர் கலந்து அதிகாரிகள் நிலை யில் பேச்சு வார்த்தைகள் நடைபெற்றன. இந்த பேச்சு வார்த்தைகளின் போக்கினை நான் தொடர்ந்து அப்போ தைக்கப்போது அறிந்து கூர்ந்து கவனித்து வந்தேன். அதனைத் தொடர்ந்து மத்திய பாசன மின்சார அமைச்சர் திரு கே. எல் ராவ் அவர்களும், மைசூர் மாநில முதலமைச்சர் திரு. வீரேந்திர பட்டீல் அவர்களும், நானும் இது குறித்து, சந்தித்துப் பேசினோம். இவற்றின் பயனாக 1924-ம் ஆண்டு ஒப்பந்தப்படி தமிழகத்திற்கு உரித்தான நீர்ப்போக்கு அளவு சிறிதேனும் குறைவின்றித் தொடர்ந்து அனுப்புவதற்கு மைசூர் அரசு உறுதி அளித்துள்ளது. அந்த உறுதி நிறைவேற்றப்படும் வகையில், விதிமுறைகள் செயல்முறை, நிர்வாக நடைமுறை ஏற்பாடுகள் ஆகியவை பற்றி விரிவாக விவாதம் நடத்தப்பட்டிருக்கிறது.'' என்று அப்போதைய பொதுப்பணித்துறை அமைச்சர் கருணாநிதி அவர்கள் அறிக்கை அளித்தார்கள். நான் இங்கே சாட்டு கிற குற்றங்களெல்லாம், மைசூர் அரசாங்கம் இந்த முதலமைச்சருக்கு அப்போது அளித்த உறுதியை நம்பி

அன்றையதினம் ஒப்புக்கொண்டு வந்தார்களே அந்த உறுதியை மைசூர் அரசாங்கம் நிறைவேற்றத் தவறிவிட்டது ஏனென்றால் இவர்கள் ஏமாந்த காரணத்தால்தான். அப்பொழுதே வன்மையாகக் கேட்டு, மத்திய அரசையும் அணுகியிருந்தால் நமக்கு உறுதியான ஒப்பந்த ஷரத்தைப் பெற்றிருக்க முடியும். ஏன் அன்று இருந்த பொதுப்பணித் துறை அமைச்சர் அப்பொழுது அப்படிச் செய்யவில்லை என்பதுதான் என்னுடைய பணிவான குற்றச்சாட்டாகும்.

இந்த மாமன்றத்தில் அப்போது ஒரு பிரச்சினை எழுந்தது. அதையும் நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அப்போது எதிர்க்கட்சித் தலைவராக இருந்த மாண்புமிகு திரு. கருத்திருமன் அவர்கள்,

''காங்கிரஸ் மந்திரிகள் தேசத்திற்கு நல்லது செய்திருக்கிறார்கள். பொதுப்பணித் துறை அமைச்சர் அவர்கள் கூட டெல்லியில் ஏமாவதி அணைக்கட்டுத் திட்டத்தைக் குட்டிச் சுவராக்கிவிட்டு வந்திருக்கிறார்கள். அணையைக் கட்டிக் கொள்ளுங்கள். சாவியை நீங்கள் வைத்துக் கொள்ளுங்கள். பூட்டை நாங்கள் வைத்துக்கொள்கிறோம் என்ற நிலைமை இருக்கிறது. அணை கட்டிய பிறகு தண்ணீர் மீதி இருந்தால்தானே மற்றப் பிரச்சினைகள் எல்லாம்'' என்று கூறியபோது அப்போதைய பொதுப்பணித் துறை அமைச்சர் திரு. கருணாநிதி அவர்கள் குறுக்கிட்டு...

''இப்போது ஏற்பட்டிருக்கிற பேச்சு வார்த்தை உடன்பாட்டை எதிர்க்கட்சித் தலைவர் அவர்கள் ஒப்புக்கொள்கிறார்களா, இல்லையா?'' என்று கேட்டிருக்கிறார்.

ஆகவே, அன்று உடன்பாடு ஏற்பட்டது உண்மை. என்னுடைய குற்றச்சாட்டெல்லாம் அன்று இவர் செய்து கொண்ட, அவசர கோலத்தோடு செய்து கொண்ட உடன்பாட்டினால் இன்று தமிழகத்தில் காவிரி ஆற்றின் கடைக்கோடியில் உள்ள தஞ்சை, திருச்சி பகுதிகளில் குளிக்கக்கூடத் தண்ணீர் இல்லாத நிலைமை வளர்ந்து

கொண்டிருக்கிறது என்பதைச் சுட்டிக்காட்ட விரும்பு கிறேன். காவிரியாறு வறட்சியானதற்கு இன்றைய முதலமைச்சர் கருணாநிதிதான் காரணம் என்பதை இந்த நாடும், இந்த மன்றமும் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டும்.

இந்த நேரத்தில் இன்னொன்றையும் நான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். ஆளுநர் அவர்கள் தம்முடைய உரையில் 'வடகிழக்குப் பருவ மழை பொய்த்து விட்டது: சென்ற 100 ஆண்டுகளில் இந்த ஆண்டில்தான் இந்த அளவுக்குக் குறைவாக மழை பெய்திருக்கிறது: மழை பொய்த்து விட்டது' என்று கூறியிருக்கிறார். கடந்த 100 ஆண்டு கால அளவில் இந்தத் தமிழகத்தில் வடகிழக்குப் பருவை மழை பொய்க்கவில்லை; இந்த ஆண்டுதான் பொய்த்து விட்டது. இதற்குக் காரணம் என்ன? என்று ஆராய்ந்து பார்த்தால் அதற்கு வள்ளுவர் குறளில் ...

"முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல்"

என்று வள்ளுவர் கூறியிருக்கிறார். நாட்டிலுள்ள ஆட்சி செவ்வனே நடத்தப்படா விட்டால் பருவமழை தவறி விடும் என்று கூறியிருக்கிறார். எனவே, முதலமைச்சர் கருணாநிதி அவர்கள் ...

திரு. குப்பல் ராமகிருஷ்ணன்: இந்த ஆண்டுதான் மழை பெய்யவில்லை. கடந்த மூன்று நான்கு ஆண்டுகளாக நல்ல மழை பெய்திருக்கிறது. அப்போது நன்மை செய்தார்கள் என்ற அளவிலாவது உறுப்பினர் அவர்கள் ஒப்புக்கொள்ளு கிறார்களா?

திரு பெ. சௌந்தரபாண்டியன்: ஆளுநர் அவர்கள் இந்த ஆண்டைப் பற்றித்தான் குறிப்பிட்டிருக்கிறார். கடந்த ஆண்டில் வெள்ளம் வந்தது என்பதை மாண்புமிகு உறுப் பினர் அவர்கள் நன்றாகப் புரிந்துகொள்ள வேண்டும்.

கலைஞர் கருணாநிதி ஆட்சியில் என்னென்ன முறை கேடுகள் நடந்திருக்கின்றன, என்னென்ன குறைபாடுகள் ஏற்பட்டிருக்கின்றன என்பதற்கு ஏராளமான ஆதாரத்தைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

நம்முடைய மாநிலத்தில் மின்சாரவாரியத்தில் 1972-ம் ஆண்டு ஏறத்தாழ ஒருலட்சம் பேர் வேலை வாய்ப்புவேண்டி மனுப் போட்டனர். நாம் அதை மறந்துவிடவில்லை. ஒவ்வொரு மனுவுக்கும் ஐந்து ரூபாய் கட்டணம் விதிக்கப்பட்டு ஏராளமான பணம் மின்சார வாரியத்திற்குக் கிடைத்தது என்பதை இந்தநாடும் அறியும் நாமும் நன்றாகஅறிவோம். அந்தக் கட்டணம் பற்றிக் கேட்ட நேரத்தில் முதலமைச்சர் கருணாநிதி அவர்கள் 14—9—1972-ல் கும்பகோணத்தில் பேசிய கூட்டத்தில் என்ன சொன்னார் என்பதை இந்த மன்றத்தின் கவனத்திற்குக் கொண்டு வருவது என்னுடைய கடமை என்று கருதுகிறேன்.

"மின்சார வாரியத்தில் இன்று எழுத்தர்கள் வேலைக்கு 3000 பேர் தேவை என்று அறிவிக்கிறோம். அதிலே ஒரு லட்சம்பேர் விண்ணப்பம் செய்திருக்கிறார்கள். ஆளுக்கு 5 ரூபாய் விண்ணப்பக் கட்டணம். நான் இப்போது சொல்லி விட்டேன். யார் யாரைத் தேர்ந்தெடுத்திருக்கிறீர்களோ அவர்களிடம் மட்டும் அந்த விண்ணப்பக் கட்டணத்தை வைத்துக் கொள்ளுங்கள். தேர்ந்தெடுக்கப்படாதவர்களுக்கு அந்த 5 ரூபாயோ 10 ரூபாயோ எவ்வளவு கட்டணமானாலும் அதைத் திருப்பி அனுப்பிவிடுங்கள் என்று சொல்லியிருக்கிறேன். மின்சார வாரியமும் அதை ஒப்புக் கொண்டிருக்கிறது" என்று சொல்லியிருக்கிறார்.

உங்களைப் பார்த்துக் கேட்கிறேன். முதலமைச்சரைப் பார்த்துக் கேட்கிறேன். மின்சாரத் துறை அமைச்சரைப் பார்த்துக் கேட்கிறேன், பேரவைத் தலைவர் மூலமாகக் கேட்கிறேன் - இரண்டு ஆண்டுகள் ஆகியும் வாங்கப்பட்ட கட்டணம் இதுவரை திருப்பி கொடுக்கப்பட்டதா என்பதற்குத் தயவு செய்து பதில் அளிக்க வேண்டும். அதிலே

எத்தனை லட்சம் ரூபாய் மின்சார வாரியத்திற்குக் கிடைத்தது? எத்தனை பேரை வேலைக்கு எடுத்தீர்கள்? யார் யாருக்குக் கட்டணம் திருப்பிக் கொடுக்கப்பட்டது? இவற்றையெல்லாம் இந்த மாமன்றத்தில் தயவு செய்து அறிவிக்க வேண்டுமென்று விரும்பி வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன். இதுவரை திருப்பிக் கொடுக்கப்படவில்லை என்றால் அதற்குக் காரணம் என்ன என்பதை இந்த அரசாங்கம் அறிவிக்க வேண்டுமென்று தெரிவித்துக்கொள் கிறேன்.

இன்னொரு குற்றச்சாட்டை இந்த மன்றத்தில் இந்த அரசாங்கத்தின் மீது சாட்ட விரும்புகிறேன். இராமநாதபுரம் மாவட்டத்தில் பொதுவக்குடி என்ற கிராமம். இந்தக் கிராமத்தில் முத்துராமலிங்கம் என்பவர் ஏற்கனவே கிராமாதிகாரியாகப் பணியாற்றியவர் இவர்மேல் ஊழல் குற்றச்சாட்டு சாட்டப்பட்டதன் காரணமாக வேலையிலிருந்து நீக்கப்பட்டார். நீக்கப்பட்ட அவர் அரசாங்கத்திற்கு முதல்மறு பரிசீலனைமனு அளித்தார். அது நிராகரிக்கப் பட்டது மீண்டும் இரண்டாவது முறை மறு பரிசீலனை மனு அளித்தார் அதை ஏற்றுக்கொண்டு இந்த அரசாங்கம் அவருக்கு வேலை அளித்திருக்கிறது.

அதேபோல நகரை என்ற கிராமத்தில் கிராமாதிகாரியாகப் பணியாற்றிய பொன்னுசாமி என்பவர் மீது சில குற்றச்சாட்டுகள் சாட்டப்பட்டு சஸ்பெண்ட் செய்யப் பட்டார் அவருக்குப் பதில் முனியாண்டி என்பவர் வேலை பார்த்தார். சஸ்பெண்ட் செய்யப்பட்டவர் அரசாங்கத்திற்கும் அதிகாரிகளுக்கும் மேல்முறையீடு செய்தார் முறையீடு மனு தள்ளுபடி செய்யப்பட்டது. இரண்டாவது முறை மேல் முறையீடு மனு அரசாங்கத்திற்கு அளிக்கப்பட்டு அவர் மீண்டும் வேலைக்கு அமர்த்தப்பட்டார்.

இதனால் பாதிக்கப்பட்ட இருவரும் உயர்நீதி மன்றத்தில் வழக்குத் தொடுத்தார்கள். வழக்கை ஏற்று விசாரித்த நீதிபதி இந்த அரசாங்கத்தின் மீது கடுமையான கண்ட

னத்தைத் தெரிவித்திருக்கிறார் என்பதை இந்த மன்றத்தின் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.

முதல் மறு பரிசீலனை மனுக்களைத் தள்ளுபடி செய்த சர்க்காருக்கு இரண்டாவது முறை மறு பரிசீலனை அதிகாரம் இல்லை என்றார். எந்தப் புதிய அம்சங்களின்பேரில் அந்த உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டன என்பதை அரசு காட்டவில்லை என்றும் குறிப்பிட்டுள்ளார். பொதுப் பணத்தை நிர்வகிக்கும் அதிகாரிகள் நேர்மையுடையவர்களாகவும், கன்னியமுடையவர்களாகவும் இருக்க வேண்டும் என்பதில் அக்கறை கொண்டிருக்க வேண்டிய சர்க்கார் கையாடல் மற்றும் தஸ்தாவேஜுகளில் தில்லுமுல்லு செய்தவர்கள் என்று தன்னால் ஊர்ஜிதம் செய்யப்பட்ட நபர்களை நடைமுறைக்குப் புறம்பாக மீண்டும் நியமித்தது மிகவும் துரதிருஷ்ட வசமானது என்று தன்னுடைய தீர்ப்பில் இந்த அரசாங்கத்திற்குக் கண்டனம் தெரிவித்துள்ளார்

உயர்நீதிமன்றம் கண்டனம் தெரிவிக்கும் அளவுக்கு ஏன் இந்த அரசாங்கம் நடந்து கொள்ள வேண்டும்? தனிப்பட்டவர்கள் சிபாரிசு காரணமாக அவர்களுக்கு வேலை வாய்ப்பளிக்கப்பட்டதா என்பதை எல்லாம் நாம் எண்ணிப்பார்க்கும் நேரத்தில் இந்த அரசாங்கம் இப்படி முறைதவறி பல காரியங்களைச் செய்திருக்கிறது என்பதைத் தெளிவாகக் கூறக் கடமைப்பட்டிருக்கிறேன்.

என்னுடைய தொகுதியில் நடந்த ஒரு சம்பவத்தைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். 1970-ம் ஆண்டு காவிரியில் பெருவெள்ளம் வந்த நேரம். கட்டளையிலிருந்து காவிரியின் எதிர்கரைக்கு பரிசில் ஏறி வேலைக்குச் சென்ற ஏழை தாழ்த்தப்பட்ட தொழிலாளர்கள் 30 பேர்களுக்கு மேல் படகு கவிழ்ந்ததன் காரணமாக மாண்டார்கள். அந்த 30 பேர் குடும்பத்திற்கும் அரசாங்கத்தின் மூலம் உதவித் தொகை தரவேண்டுமென்று நானே நேரடியாக முதலமை

சரிடம் மனு கொடுத்தேன். அந்த மனு மீது இதுவரை எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

ஆனால் அதே பகுதியில் மாயனூர் சரகத்தின் டெபுடி இன்ஸ்பெக்டராகப் பணியாற்றிய ஒருவர் ஒரு ஆசிரியரால் வெட்டிக் கொலை செய்யப்பட்டார். அவருடைய குடும்பத்திற்கு இந்த அரசாங்கம் ஏறத்தாழ 20,000 ரூபாய்க்கு மேல் அளித்திருக்கிறது. 30 தொழிலாளர்கள் மாண்டதற்கு எந்தவித உதவியும் தரப்படவில்லை அதே நேரத்தில் இன்னொரு பக்கம் தனிப்பட்ட காரணங்களுக்காக கொலை செய்யப்பட்டவரின் குடும்பத்திற்கு இந்த அரசாங்கம் உதவி செய்திருக்கிறது என்பதைப் பார்க்கும்போது இது முறைகெட்ட, பாகுபாடான செயல் இல்லையா என்று எண்ணிப் பார்க்க வேண்டும்.

ஆகவே, முறை தவறி நடக்கிற கருணாநிதியின் ஆட்சி காரணமாகத்தான் மழை பெய்ய மறுக்கிறது என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். எனக்கு முன்னால் பேசிய உறுப்பினர் அவர்கள் எதிர்க் கட்சியைச் சேர்ந்த உறுப்பினர்கள் வறட்சிக்காக எந்தப் பணியையும் ஆற்றாமல் குறை சொல்லிக் கொண்டிருக்கிறார்கள் என்று சொன்னார்கள். நான் பணிவோடு தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன், குறிப்பாக எதிர்கட்சியிலுள்ள அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத் தலைவராக இருக்கிற எங்கள் தலைவர், புரட்சித் தலைவர் திரு. எம். ஜி. ஆர். அவர்கள் வறட்சிப் பணிக்காக ஏறத்தாழ ரூ 1,85,000த்தை ராமநாதபுரம் மாவட்டத்திற்கும், புதுக்கோட்டை மாவட்டத்திற்கும், நெல்லை மாவட்டத்திற்கும் பகிர்ந்து அளித்து வறட்சி நிவாரணப் பணியைத் துவக்கியுள்ளார் என்பதை அவர்களுக்கு நான் தெரிவித்துக்கொள்ள கடமைப்பட்டிருக்கிறேன். ஆக, வறட்சி வறட்சி என்று நாம் இங்கே பேசிக் கொண்டிருக்கிற நேரத்தில் தமிழகத்தில் உள்ள அத்தனை மக்களும் இந்த மாமன்றத்தில் நல்லபல திட்டங்கள் வரும் என்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். ஆனால்

ஆளுநர் அவர்களது உரையில் எந்தத் திட்டமும் இல்லாமல் வறட்சியாகத்தான் இருக்கிறது என்பதைச் சுட்டிக் காட்டி அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பாக ஆளுநர் அவர்களது உரையை வரவேற்க முடியாமைக்கு மெத்த வருத்தப்பட்டு, இந்த நாட்டு மக்களின் நல் வாழ்வுக்கு எந்தத் திட்டமும் இதில் இல்லை என்பதை நான் சுட்டிக்காட்டி இந்த உரையை வரவேற்க முடியாமைக்கு மீண்டும் என் வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டு என் உரையை முடிக்கிறேன். நன்றி. வணக்கம்.



# 11

## 11—3—75ஆம் தேதியன்று சட்டப் பேரவையில் பின் தங்கியோர்நல மானியக் கோரிக்கையின் மீது நடைபெற்ற விவாதத்தில் கலந்து கொண்டு திரு. பெ. சௌந்தரபாண்டியன் எம்.எல்.ஏ. அவர்கள் ஆற்றிய உரை

திரு. பெ. சௌந்தரபாண்டியன் : *தலைவர் அவர்களே, நடப் பாண்டிற்குரிய பின் தங்கியோர் நலமானியக்கோரிக்கையில் கோரப்பட்டுள்ள நிதிகளுக்கும் இதர பிரச்சனைகளுக்கும் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பாக என்னுடைய பல கருத்துக்களை இந்த மன்றத்தில் வைப்ப தற்கு முன்வருகிறேன்.*

என்னுடைய கட்சியின் சார்பில் கொடுக்கப்பட்டுள்ள வெட்டுத் தீர்மானங்களை வலியுறுத்தும் வகையில் இந்தக் கருத்துக்களை அரசு ஏற்க வேண்டும் என்று ஆணித்தரமாக எடுத்துச் சொல்லும் முகத்தான் என்னுடைய கருத்துக்களை இங்கே எடுத்துச் சொல்லுகிறேன்.

திருச்சி மாநகரிலும், மதுரை, சென்னை போன்ற பகுதி களிலும் செயற்கை வைரத் தொழிலில் ஏறக்குறைய 10 ஆயிரத்திற்கு மேற்பட்ட பின் தங்கிய வகுப்பைச் சேர்ந்த குடும்பங்கள் தற்போது ஈடுபட்டிருக்கின்றன. இந்தச் செயற்கை வைரம் உற்பத்தி செய்கின்ற தொழிற்கூடம் மேட்டுப்பாளையத்தில் அமைந்திருக்கிறது. உற்பத்தியா கின்ற செயற்கை வைரங்கள் நம்முடைய மாநிலத்திற்கு அதிகம் பயன்படுகின்றனவா என்றால் இல்லை என்றுதான் நான் சொல்வேன். ஏனென்றால், இங்கே உற்பத்தியா கின்ற செயற்கை வைரங்களை விநியோகிக்கின்ற பொறுப்பு

வட மாநிலத்தில் உள்ள ஒரு கம்பெனிக்குத் தான் தற்போது இருக்கிறது ஆகவே உற்பத்தியாகின்ற பெரும் பகுதியான செயற்கை வைரங்களில் தரமுள்ள வைரங்கள் அங்கு எடுத்துச் செல்லப்பட்டு தரம் இல்லாத நாலாந்தர ஐந்தாந்தர செயற்கை வைரங்கள்தான் தமிழகத்தில் விநியோகிக்கப்படுகின்றன என்ற முதல் குற்றச்சாட்டை நான் இங்கே சுட்டிக்காட்ட விரும்புகிறேன். செயற்கை வைரத் தொழிலில் ஈடுபட்டிருக்கின்ற பின்தங்கிய மக்கள் தங்களுக்கு ஏற்படுகின்ற இடர்பாடுகளைப் பற்றியும், அந்தத் தொழில் நலிந்து கொண்டு வருவதைப் பற்றியும், தொழிலுக்கேற்ப ஊதியம் வழங்கப்படுவதில்லை, கிடைப்பதில்லை என்பது குறித்தும் வலியுறுத்தி முதலமைச்சர் அவர்களுக்கு 4—4—73லும், 12—4—73லும், 9—6—73லும், 10—9—73லும், 15—9—73லும் ஆக பட்டியல் போட்டே தங்கள் கோரிக்கைகளைப் பலமுறை வலியுறுத்தியிருக்கிறார்கள். அதுமட்டுமல்ல, இந்தக் குடும்பங்கள் வறுமையில் வாடுகின்றன. அதே நேரத்தில் அவர்கள் செய்கிற வேலைக்குப் போதுமான ஊதியம் தரப்படவில்லை. தொழிலாளர்களுக்குரிய சட்டம் அவர்களுக்கு விஸ்தரிக்கப் படவில்லை. ஆகவே, பலதரப்பட்ட கோரிக்கைகளை அவர்கள் எடுத்து வைத்திருக்கிறார்கள். ஆயினும் 1970-ம் ஆண்டிலிருந்து இன்று வரை அவர்கள் வலியுறுத்திக் கேட்டு வருகிற கோரிக்கைகள் அரசாங்கத்தின் காதில் எட்டாமல் இருப்பதற்கு என்ன காரணம்? அதற்கு வேண்டிய பரிகாரம் தேடப்படாமல் இருப்பதற்கும் என்ன காரணம்? இவ்வளவு காலதாமதம் ஆகியும் அந்தக் கோரிக்கைகளை அனுப்பியவர்களுக்கு ஒரு பதிலும் அனுப்பப்படாமல் இருப்பதற்கு என்ன காரணம்? பின்தங்கிய மக்களுக்கு என்னென்னவோ செய்கிறோம். உடனடியாக நடவடிக்கை எடுக்கிறோம் என்றுஎல்லாம் மார்தட்டிச்சொல்லிக்கொண்டிருக்கிறீர்களே தவிர இந்தப் பின்தங்கிய குடும்பங்களைச் சேர்ந்த தொழிலாளர்களுக்கான பரிகாரத்தைக் காண எந்தவிதமான நடவடிக்கையும் இதுவரை எடுக்க வில்லை.

இந்த அரசு எடுக்கத் தயங்குகிறது என்ற குற்றச்சாட்டை இந்த மன்றத்தில் சாட்ட விரும்புகிறேன்.

திருச்சியிலும், மதுரையிலும், கோவையிலும், சென்னையிலும் செயற்கை வைரத் தொழிலில் ஈடுபட்டிருக்கிற தொழிலாளர் குடும்பங்கள் தற்போது வேலை இல்லாமல் – வருவாய் இல்லாமல் அவதிப்படுகின்றன. அதை எண்ணிப் பார்த்து இந்தத் தொழிலாளர் குடும்பங்களுக்கு அரசாங்கம் கடன் உதவி அளிக்க வேண்டும்; அவர்கள் வேலை செய்ய தளங்கள் கிடைக்க முறைப்படுத்தவேண்டும், உற்பத்தி செய்கிற தரமான செயற்கை வைரங்களை வெளி மாநிலங்களுக்கு ஏற்றுமதி செய்வதைத் தடுக்க வேண்டும்.

பின்தங்கிய நலத்துறை அமைச்சரே தொழிலாளர் நலத்துறை அமைச்சராகவும் இருப்பதால் இந்தத் தொழிலாளர்களுக்கு என்ன பரிகாரம் தேட முடியுமோ, அளிக்க முடியுமோ அதை விரைவில் அளிக்க நடவடிக்கை எடுக்க வேண்டும்.

நம்முடைய நாட்டில் ஏற்கனவே பின்தங்கிய சமுதாயங்கள் பல இருக்கின்றன சமுதாயத்தில் பின்தங்கியவர்கள் - பொருளாதாரத்தில் பின் தங்கியவர்கள் ஏராளமானோர் இருக்கின்றனர். இந்த நிலையில் இலங்கையிலிருந்தும் பர்மாவிலிருந்தும் இந்திய அரசாங்கம் செய்துகொண்ட ஒப்பந்தத்தின்படி அங்கே வாழ்ந்து கொண்டிருந்த தமிழர்கள் இங்கே வருஷா வருஷம் நுழைந்து கொண்டு இருக்கின்றனர்.

அங்கே நல்ல முறையில் வாழ்ந்து கொண்டிருந்த குடும்பங்கள் தாயகத்திற்கு திரும்பி வந்தவுடன் மிகுந்த ஏமாற்றம் அடைந்த நிலையில் வாழ வழியின்றித் தவிக்கிறார்கள். காரணம், அங்கே போட்டுக்காட்டப்பட்டசினிமாப் படங்களைப் பார்த்துவிட்டு இங்கே வீடு கட்டும் திட்டம், வேலை வாய்ப்பு அளிக்கும் திட்டம், பட்டா வழங்கும் திட்டம் போன்றவைகள் பல இருக்கின்றன என்கிற கற்பனைக்

கோட்டையில் உலவிக் கொண்டிருந்தார்கள். இங்கே வந்ததும் அவர்கள் கட்டிய கற்பனைக் கோட்டை தரைமட்டமாக ஆக்கப்பட்டு, வறுமையில் வாடி துடிக்கின்ற நிலைக்கே ஆளாக்கப் பட்டிருக்கிறார்கள் என்பதை நான் சுட்டிக் காட்டாமல் இருப்பது நல்லதல்ல

இலங்கையில் இருந்து வருகின்ற நம்முடைய தமிழ்ச் சமுதாயம் பெரும்பாலும் பின்தங்கிய மக்கள்தான். அவர்கள் சமுதாயத் துறையில் மட்டுமல்ல, பொருளாதாரத் துறையிலும் மிக மிகப் பின்தங்கிய மக்கள். அவர்களுக்கு வாழ வழி வகுத்து, வீட்டு மனைகள், முன்கடன், வேலை வாய்ப்புகள் மற்ற உதவிகளை எல்லாம் இந்த அரசாங்கம் செய்து தருகின்றதா என்றால் இல்லை என்றுதான் நிச்சயமாகச் சொல்ல முடியும்

கடன் தொகை பெறுவதற்காக அவர்கள் மாவட்ட ஆட்சியாளர் அலுவலகத்திற்கு அலைகிறார்கள்; வட்டஆட்சியாளர் அலுவலகத்திற்கு அலைகிறார்கள். கோட்ட ஆட்சியாளர் அலுவலகத்திற்கு அலைகிறார்கள். எங்கு சென்றும் நிவாரணம் கிடைக்காமல் வேதனைப்பட்டு புழுவாய்த்துடிக்கின்றனர். இதை நாம் மறந்துவிடக்கூடாது.

இந்த மாமன்றத்தில், பட்ஜெட் விவாதத்தில் என்னுடைய நண்பர், எங்கள் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தினைச் சேர்ந்த உறுப்பினர் இளஞ்செழியன் அவர்கள் ஒரு கருத்தை எடுத்துச்சொன்னார்கள். திருவரங்குளத்திலும், வம்பன் காலனியிலும் இருக்கின்ற இலங்கை அகதிகள் பட்டினியால் செத்துக் கொண்டிருக்கிறார்கள் என்ற குறையை எடுத்துச் சொன்னபோது, மாண்புமிகு முதலமைச்சரவர்கள் பட்டினியால் சாகவில்லை, வியாதியால், வயிற்றுப்போக்கால், செத்தார்கள் என்ற ஒரு கருத்தை எடுத்து வைத்தார்கள். என்னுடைய தாழ்மையான வேண்டுகோள் என்னவென்றால், அந்தத் திருவரங்குளத்திலும் வம்பன் காலனியிலும் ஏறத்தாழ 264 குடும்பங்கள் வசிக்கின்றன. மொத்தம் 2,000 பேர் அங்கேயிருக்கிறார்

கள். இந்த 2,000 பேருக்குப் போதுமான உணவு கிடைக்கிறதா என்றால், இல்லை. குடிநீர் கிடைக்கிறதா என்றால் இல்லை கடன் கிடைக்கிறதா என்றால் இல்லை. ஆகவே, வாழ வழியின்றி பல நாட்கள் சிலர் பட்டினி கிடந்து செத்திருக்கிறார்கள் என்பதை நான் இந்தமன்றத்தில் குற்றம் சாட்ட விரும்புகிறேன். செத்தவர்களில் பலபேர் உணவில்லாமல் வயிற்றுப் பசியால் வாழ வழியில்லாமல், பல நாட்கள் வாடியிருந்து..............

மாண்புமிகு க. ராசாராம்:- தலைவர் அவர்களே! மாண்புமிகு உறுப்பினர் திரு. சௌந்தரபாண்டியன் அவர்கள் ஒரு கிராமத்தில் நடந்திருக்கின்ற சம்பவத்தைப்பற்றி விவரித்துக் கொண்டிருக்கிறார்கள். அதற்கும் இந்தத்துறைக்கும் என்ன சம்பந்தம் என்பதைப் பற்றி நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்:- தலைவர் அவர்களே! நான் சொல்லுவது அவர்களும் பின் தங்கிய சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள். அகதிகளாக வந்தவர்கள்; பொருளாதாரத்தில் பின் தங்கியவர்கள். ஆகவே அப்படிப்பட்டமக்களையும் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு இந்தத் துறைக்கும் அரசுக்கும் இருக்கிறது என்பதால்தான் நான் சுட்டிக் காட்டுகிறேன்.

மாண்புமிகு திரு. க. இராசாராம்:- பல்வேறுபட்ட ஜாதிக்காரர்கள் இந்தத் துறையில் வருகிறார்கள். இந்தத்துறைக்கென சிலபணிகள் வரையறுக்கப்பட்டிருக்கின்றன. அந்தப் பணிகளிலே மாண்புமிகு உறுப்பினர் அவர்கள் கூறுகின்ற பணிகளெல்லாம் வருவது கிடையாது. ஆகவே அவற்றை மற்ற விவாதங்களிலே வைத்துக்கொண்டு இந்தத் துறையைப்பற்றி நல்ல கருத்துக்களை ஆக்கப்பூர்வமான கருத்துக்களைச்சொன்னால் நலமாக இருக்கும்.

மாண்புமிகு திரு என். இராசாங்கம்:- பிற்பட்டோர் நலம், தாழ்த்தப்பட்டோர் நலமெல்லாம் கல்வி வசதியை அடிப்

படையாகக்கொண்ட நலர்கள். அவற்றிலே அவர்கள் பெறுகிற சில வசதிகளைப்பற்றி வரும் தொழில் துறையை யெல்லாம் பற்றி உறுப்பினர் அவர்கள் சொன்னார்கள். ஆனால் இந்த துறைகள் கல்வி, கல்வி முன்னேற்றம் பற்றி கவனிக்கிற இலாகாக்கள்.

திரு.பெ சௌந்தரபாண்டியன்:-தலைவரவர்களே! மாண்புமிகு அரிசன நலத்துறை அமைச்சரவர்கள் தொழிலாளரைபற்றி நான் இங்கே குறிப்பிட வேண்டாமென்று சொன்னார்கள். பொற்கொல்லர்கள் எந்தச்சமுதாயத்தைச்சேர்ந்தவர்கள்? அவர்கள் பிற்பட்ட வகுப்பிலே வருகிறார்களா இல்லையா? ஆகவே ஒரு தொழிலில் ஈடுபட்டிருக்கின்ற காரணத்தினால் சமுதாயம் அழிந்துவிட முடியாது. பொற்கொல்லர்கள் எப்படி தொழிலைச் செய்கின்ற காரணத்தினால் பின்தங்கிய வகுப்பினர் என்று சொல்லப்படுகிறார்களோ அதே போல் செயற்கை வைரத்தொழிலில் ஈடுபட்டவர்களும் பின் தங்கியவர். அவர்களைப்பற்றி வாதாட இங்கே எனக்கு உரிமையும் கடமையும் இருக்கிறது என்பதால் சுட்டிக்காட்டினேன்.

திரு கு. காமாட்சி:- நண்பர் சௌந்தரபாண்டியன் அவர்கள் பேசும் பொழுது அவர்களுடைய கட்சியைச் சேர்ந்த இளஞ்செழியன் அவர்கள்பட்டினியால் செத்தார்கள்என்று சொல்லி அதற்குப்பிறகு நம்முடைய முதலமைச்சரவர்கள் பட்டினியால் சாகவில்லை நோய்வாய்ப்பட்டு இறந்திருக்கிறார்கள் என்று சொன்னதைச்சொல்லி இப்பொழுதுபழைய படியே அவர்கள் பட்டினியால் தான் செத்தார்கள் என்று இந்த அவையிலே கூறியிருக்கிறார்கள். அதை ஆதாரத்தோடு கூறினால் நன்றாக இருக்கும் என்று நான் நினைக்கிறேன்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்:- மாண்புமிகு காமாட்சி அவர்கள் என்ன ஆதாரத்தை வைத்துக்கொண்டு பேசுகிறீர்கள் என்று குறிப்பிட்டார்கள். என்னிடம் ஏராளமான ஆதாரமிருக்கிறது. இந்த மாதிரி நடந்ததை நிரூபிக்க

என்னிடம் ஏராளமான ஆதாரமிருக்கிறது இந்த மன்றத்திலுள்ளவர்களைக் கொண்ட சர்வகட்சிக்குழு அமைக்கட்டும். நாம் திருவரங்குளம் செல்வோம், வம்பன் காலனிக்குச்செல்வோம். அங்கே இருக்கிற பொதுமக்களிடம் வாக்குமூலம் வாங்குவோம். அங்கே இருக்கிற சங்கத்தலைவர் முருகையாவிடம் வாக்குமூலம் வாங்குவோம்.........

மாண்புமிகு மாற்றுத்தலைவர் (திரு துரைமுருகன்):- எங்கெங்கே போகலாம் எங்கெங்கே வாக்குமூலம் வாங்குவது என்பதல்ல பிரச்சனை. நீங்கள் டிமாண்டிலே பேசுங்கள்.

திரு. கு. காமாட்சி:- மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் பட்டினியால் சாகவில்லை நோய்வாய்ப்பட்டு செத்திருக்கிறார்கள் என்று தகவல் வந்திருக்கிறது என்று சொல்லியிருக்கிறார்கள். ஆனால் இவர் திரும்பவும் பட்டினியால் செத்தார்கள் என்று சொல்லுகிறார்.

திரு. பெ சௌந்தரபாண்டியன்: தலைவர் அவர்களே! இந்த அரசாங்கம் சர்வகட்சி குழு ஒன்றை அமைத்து பரிசீலனை செய்யத்தயார் என்றால் நான் இதற்கு பொறுப்பு ஏற்றுக் கொள்கிறேன். அரசு தயாரா?

மாண்புமிகு க. இராசாராம்:- மாண்புமிகு உறுப்பினர் அவர்களுக்கு நான் ஏற்கனவே சொன்னேன். இதற்கும் நான் இந்தக் குழு போடுவதற்கும் என்னுடைய இலாகாவிற்கும் சம்பந்தமே கிடையாது. இலாகா சம்பந்தமாகப் பேசுங்கள். அதைநான் வரவேற்க தயாராக இருக்கிறேன்.

திரு. பெ சௌந்தரபாண்டியன்:- தலைவரவர்களே! அங்கே வாழ்கின்ற மக்கள் பின் தங்கிய சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள். பின்தங்கிய சமுதாயத்திலே இருப்பதால் தான் இந்த இலாகாவைப்பற்றி பேசுகிறேனேதவிர நான் ஒன்றும் விவரம் தெரியாமல பேசவில்லை. சமுதாயத்திலேபின் தங்கியவர்களுக்கு இந்த இலாகா கடமைப்பட்டிருக்கிறது.

மாண்புமிகு திரு.என்.இராசாங்கம்:-தலைவரவர்களே! இரண்டு இலாகாவைப்பற்றியும் விவரமாகச் சொன்னேன். கல்வி, கல்வியினுடைய முன்னேற்றத்தைப்பற்றி அந்த அமைப்பிலுள்ளவைகளைப்பற்றி இந்த இலாகாக்கள் கவனிக்கின்றன பின்தங்கியவர்களுக்கு அந்த விஷயத்தில் சலுகை அளிப்பது பற்றி தொழில் செய்வதற்கென ஆதிலே ஜாதி கிடையாது தொழிலாளரைப் பாதுகாக்கவே தொழிலாளர் நலத்துறை இருக்கிறது. அதற்குண்டான வாதங்களை அந்தச் சமயத்தில் கிளப்பவேண்டுமென்று நான் தான் முன்பே குறிப்பிட்டேன்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: அதற்காகத்தான் பதில் சொன்னேன் பொற்கொல்லர்கள் (மணி அடிக்கப்பட்டது) என்ன ஐயா?.........

மாண்புமிகு மாற்றுத் தலைவர் (திரு. துரைமுருகன்): என்ன ஐயா என்றெல்லாம் சொல்லக் கூடாது.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: ஐயா என்பது நல்ல தமிழ்ச்சொல்.

மாண்புமிகு மாற்றுத்தலைவர் (திரு. துரை முருகன்):ஐயா என்பது நல்ல தமிழ்ச் சொல்தான் அதற்கு முன்னால் சொன்ன வார்த்தைகளை நடவடிக்கை குறிப்பிலிருந்து நீக்குகிறேன்.

Mr. Chairman (Thiru Durai Murugan); Come to the subject.

Thiru P. Soundarapandian: It is within the subject. Iam dealing with the subject and Iam not going out of the subject. ஆகவே பொற்கொல்லர்கள் ஒரு சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் நகைத்தொழிலில் ஈடுபடுகிறார்கள். தொழில் ரீதியில் பார்க்கிறநேரத்தில் அவர்கள் நகை செய்கிற தொழிலாளி சமுதாய ரீதியில் பார்க்கின்ற நேரத்தில் பொற்கொல்லர்கள். அப்படிப்பட்டவர்கள் தான்

செயற்கை வைரத் தொழிலில் ஈடுபடுகிறார்கள். ஆகவே அப்படிப்பட்ட நிலையில் பின்தங்கிய இலாகாவிற்கு பொறுப்பு இருக்கிறது என்ற காரணத்தினால்தான் சுட்டிக் காட்டினேனே தவிர விவரம் தெரியாமல் சொல்லவில்லை என்பதை அமைச்சர் அவர்களுக்கு நான் தெரிவிக்க கடமைப்பட்டிருக்கிறேன் ஆகவே இந்த அரசாங்கம் என்னென்ன நிவாரணம் அளிக்க வேண்டுமோ அவற்றைச் செய்துதரவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். மேலும் அமைச்சரவைக் கூட்டுப் பொறுப்பில் இருக்கிறது என்று சொல்லுகிறார்கள். எல்லா உறுப்பினர்களுக்கும் எல்லா மானியத்திலும் பேசுவதற்கு வாய்ப்பிருக்காது. ஆகவேதான் இரண்டு வழியிலும் சமுதாயம் என்கிற வகையிலும் தொழில் என்கிற வகையிலும் சம்பந்தப்பட்டிருக்கிறது என்கிற காரணத்தினால்தான் இங்கே எடுத்துவைக்கிறேனே தவிர வேறல்ல என்பதை தெளிவாக்க கடமைபட்டிருக்கிறேன்.

பின் தங்கியவர்கள் நீண்ட காலமாகக் குடியிருப்பார்களானால் அவர்கள் குடியிருக்கிற நிலம் அரசாங்கப் புறம்போக்காக இருந்தால் பட்டா செய்து கொடுப்பதாக அடிக்கடி அரசு கூறுகிறது திருச்சி மாவட்டத்தில் சின்ன தாராபுரம் பகுதியிலுள்ள வெங்கடாபுரத்தில் ஏறக்குறைய நாற்பது குடும்பத்தினர், பின் தங்கியவர்கள் அரசாங்கத்திற்குச் சொந்தமான புறம்போக்கு நிலத்தில் குடியிருந்து வருகிறார்கள். சர்வே நெம்பர் 240 பி. விஸ்தீரணம் 1 ஏக்கர் 49 செண்ட். இந்த ஒரு ஏக்கர் 49 செண்டில் ஏறத்தாழ 40 குடும்பங்கள் பல்லாண்டுகாலம் குடியிருக்கிறார்கள். அவர்களுக்கு அந்த இடத்தை பட்டா செய்து தரவேண்டுமென்று இருபத்திரண்டு முறை மனு கொடுத்திருக்கிறார்கள். ஒரு முறை இரண்டு முறை அல்ல நாம் வரலாற்றைப் பார்க்கிறோம். கஜினி முகமது பதினேழு முறை நமது நாட்டைப் பிடிக்க படையெடுத்தான். அந்த ஊர் மக்கள் அந்த இடத்திற்குப் பட்டா தரவேண்டுமென்று இருபத்திரண்டு முறை படையெடுத்திருக்கிறார்கள். யார்

யாருக்கு அவர்கள் மனு கொடுத்திருக்கிறார்கள் என்று பார்த்தால் முதலமைச்சருக்குக் கொடுத்திருக்கிறார்கள், மாவட்ட ஆட்சித் தலைவரிடம் கொடுத்திருக்கிறார்கள், ரெவின்யூ துறை அமைச்சரிடம் கொடுத்திருக்கிறார்கள்....

திரு. கு. காமாட்சி : கஜினி முகமது கொள்ளையடிக்கத் தான் வந்தான் என்று சரித்திரத்திலே பார்க்கிறோம். ஆனால் நீங்கள் நாட்டைப் பிடிக்க என்று சொல்லுகிறீர்கள் என்றுதான் கேட்கிறேன்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன் : அவர்கள் நாட்டைப் பிடிக்கத்தான் படையெடுத்தார்கள் இவர்கள் வீட்டைப் பிடிக்க படையெடுத்தார்கள்.

திரு. கு. காமாட்சி : கொள்ளையடிக்க வந்ததாகத்தான் சரித்திரம் இருக்கிறது.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: திரு. காமாட்சிக்கு அவன் நாட்டைப் பிடிக்கத்தான் படையெடுத்தான் என்கிற வரலாறு இருக்கிறது. ஆதாரம் வேண்டுமானால் தருகிறேன். அதுமட்டுமல்ல அவர்கள் மாவட்ட ஆட்சித் தலைவரிடம் மனு கொடுத்திருக்கிறார்கள். சப் கலெக்டரிடம் மனு கொடுத்திருக்கிறார்கள். கல்வி அமைச்சரிடம் மனு கொடுத்திருக்கிறார்கள் பொதுப்பணித்துறை அமைச்சரிடம் மனு கொடுத்திருக்கிறார்கள். ஆக இருபத்திரண்டு முறைகள் மனு கொடுத்தும் இதுவரை எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை என்பதை எண்ணும் போது நாம் தீட்டுகின்ற எந்தச் சட்டமும், சொல்லுகின்ற எந்தக் கொள்கை விளக்கமும் வாயளவிலேயும், ஏட்டளவிலேயும்தான் இருக்கிறதே தவிர நாட்டளவில் எட்டுவதற்கு நாட்டுமக்களுக்குக் கிட்டுவதற்கு எவ்வளவு கால தாமதம் ஆகிறது என்பதை நான் இங்கே சுட்டிக் காட்டுவது எனது கடமை ஆகும். இந்தக் குடும்பங்கள் கொடுத்த மனுக்கள் எங்கே போயிற்று? இதுவரை நடவடிக்கை எடுக்காமல்

ஊறுகாய்ப்பானையில் போட்ட ஊறுகாயைப் போல் ஊறிக் கொண்டிருப்பதற்கு என்ன காரணம் ?

மாண்புமிகு திரு. என் இராசாங்கம் : இருபத்திரண்டு தடவைகள் மனுக்கொடுத்ததாகவும் இன்னும் நிலம் கொடுக்கப்படவில்லையென்றும் சொன்னார்கள் "நிலம் கொடுப்பது ஒன்று இருக்கிறது". நிலம் பஞ்சாயத்துக் களிடம் இருக்கிற வெஸ்டட் லேண்டாக இருக்க வேண்டும் அது ஒரு பகுதி. அல்லது பஞ்சாயத்துக்களிடம் இல்லாத ரெவின்யூ டிபார்ட்மெண்டிலே அவர்கள் பொறுப்பிலே இருக்கக் கூடிய நிலமாக இருக்க வேண்டும். அது ஒரு பகுதி பொது மக்கள் பயன்படுத்துவதற்காக இருக்கக் கூடிய நிலமாக இருக்கவேண்டும். அதுஒரு பகுதி சமுதாய நலத்திற்காகப் பயன்படக் கூடியதாக இருக்கவேண்டும். அது ஒரு பகுதி. இப்படிப்பட்ட இடங்களிலே பொது மக்கள் தெரிந்தோ தெரியாமலோ ஏழை மக்கள் வீடு கட்டிக் கொள்கிறார்கள். அவர்களுக்கு அந்த நிலத்தை ஆர்ஜிதம் செய்து கொடுக்க வேண்டுமென்றால் இந்த மூன்று அடிப்படையிலேதான் செய்து கொடுக்கவேண்டும் உறுப்பினர் அவர்கள் எந்த அடிப்படையிலே இருக்கிற நிலம் அது என்று சொல்லி அவர்களுடைய கோரிக்கை நியாயமான கோரிக்கை அவர்களுக்கு இருக்கிற தொல்லை இது. அது ஏன் நீக்கப்படவில்லை என்று கேட்டால் பதில் சொல்லலாம். இருக்கிற தொல்லைகளினால் காலதாமதம் ஏற்படலாம் எட்டு நாட்களிலேயே நிலங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன நானே கொடுத்திருக்கிறேன். ஆகவே தொந்தரவு இல்லாமல் இருந்தால் கொடுக்கலாம் என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

திரு. பெ சௌந்தரபாண்டியன்: விதி முறைகளின்படி இல்லாமல் என்ன தடை இருக்கிறது அவர்களுக்கு கொடுப்பதற்கு? அந்த நிலம் எந்தத்தலைப்பில் வருகிறது என்று அரசு ஆராய்ந்து உரிய பதிலை ஏன் அவர்களுக்குச் சொல்லவில்லை ?

மாண்புமிகு திரு. என். இராசாங்கம்: அந்த நிலத்திலுடைய சர்வே நெம்பர் அவர்களால் கொடுக்கப்பட்டது. அது எந்தப் புறம்போக்கு என்று சொல்லட்டும். அரசாங்கம் பதில் சொல்லத் தயாராக இருக்கிறது.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: அரசாங்க ரெவின்யூ புறம்போக்கு என்றுதான் குறிப்பிட்டிருக்கிறார்கள். மனுவிலே அப்படித்தான் இருக்கிறது. மனுவை வாங்கிப் பாருங்கள். ஆகவே மனுநீதித்திட்டம் என்று சொல்லிக் கொண்டு ஆங்காங்கே சுற்றுப்பயணம் செய்து கொண்டு அங்கங்கே வாங்குகிற மனுக்களை பரிசீலித்து என்னென்ன நடவடிக்கைகளை எடுக்கவேண்டுமோ அதை எடுத்திருந்தால் மக்களுக்கு உரிய பதிலை அனுப்பியிருந்தால் இது போன்ற சிக்கல்கள் வந்திருக்காது நடைமுறையிலே பொதுமக்களும் சிரமப்பட வேண்டிய சூழ்நிலை இருக்காது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னுடைய தொகுதியைச் சேர்ந்தபொய்யப்புத்தூர் என்கிற கிராமத்தில் பின் தங்கிய சமுதாயத்தைச் சேர்ந்த மக்கள் பத்து, பன்னிரண்டு குடும்பங்கள் ஏறத்தாழ மூன்று ஆண்டுகளுக்கு மேலாக அங்கே வீட்டையெல்லாம் கட்டி குடியிருந்து கொண்டிருக்கிறார்கள். அதிலே என்ன சிக்கல் ஏற்பட்டிருக்கிறது என்றால் அவர்கள் குடியிருக்கிற வீட்டை தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஆர்ஜிதம் செய்து கொடுக்க— அவர்களுடைய வீட்டை காலி செய்து விட்டு இவர்களை அங்கே அமர்த்த வேண்டுமென்று புரப்போசல் (Proposal) நடந்து கொண்டிருக்கிறது.

மாண்புமிகு அ. பெ. தர்மலிங்கம்:- துணைத்தலைவர் அவர்களே! மாண்புமிகு உறுப்பினர் சொன்ன அந்த பொய்யப்புத்தூர் கிராமத்திற்கு நானே சென்று பார்த்தேன். அது தனிப்பட்டவருடைய நிலமாக இருந்தது. அந்த இடத்திலே அரிசன மக்கள் வீடு கட்டிக்கொள்ள வேண்டுமென்கிற முறையிலே இடத்தைக்கேட்டு மனு கொடுத்தார்கள்.

ஆனால் அவர்கள் கொடுக்க முடியாது என்று சொன்னார்கள். அங்கே பின்தங்கிய மக்கள் குடியிருப்பதால் அவர்களுக்கு கொடுக்க வேண்டுமென்று நான் சமாதானம் செய்துவிட்டு வந்திருக்கிறேன். ஆகவே அது அவர்களுக்கே இருக்கும் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்:- அது நல்லபடியாக நடந்திருந்தால் நான் நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன். மாவட்ட ஆட்சித்தலைவர் பார்வையிட்டிருக்கிறார். துணை கலெக்டர் பார்வையிட்டிருக்கிறார். தாசில்தார் பார்வையிட்டிருக்கிறார்... .....

மாண்புமிகு பேரவைத்துணைத்தலைவர்:-சீக்கிரம் முடித்து விடுங்கள். நிறைய உறுப்பினர்கள் பேசவேண்டும்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்:- குறுக்கீடுகள் எல்லாம் இருந்தன. இன்னும் நிறைய பாயிண்டுகள் எல்லாம் சொல்ல வேண்டும் இன்னும் 15 நிமிடங்கள் வேண்டும். நல இலாகாவைச் சேர்ந்த அதிகாரிகள் பார்வையிட்டிருக்கிறார்கள். நலத்துறையைச் சேர்ந்த தாசில்தார் பார்வையிட்டிருக்கிறார். இத்தனை அதிகாரிகளும் பார்வையிட்ட பிறகு பின்தங்கிய வகுப்பைச் சேர்ந்த மக்கள் குடியிருக்கிறார்கள் என்று தெரிந்த பிறகும் இந்த அரசாங்கம் உடனடியாக நடவடிக்கை எடுத்து வேறு இடத்தை தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஆர்ஜிதம் செய்து கொடுக்க முயற்சிக்காமல் அந்த புரப்போசலை மேலே அனுப்பியிருக்கிறார்கள். இரண்டு சமுதாயத்திற்கும் மோதல் ஏற்படுகிற அளவுக்கு இந்த அரசாங்கம் சில நடவடிக்கை எடுத்திருக்கிறது. மாண்புமிகு ரெவின்யூ அமைச்சர் அவர்கள் சொன்னது போல் நானும் அங்கே சென்று சமாதானப்படுத்தியிருக்கிறேன். பின்தங்கிய சமுதாயத்தினருக்கும் வீட்டு மனைகள் வழங்கப்படவேண்டுமென்று சொல்கிற அரசு குடியிருக்கிற வீடுகளிலேயே அவர்கள் தொடர்ந்து வசிப்பதற்கு பட்டா

செய்து கொடுப்பதிலும் குடியிருப்பவர்களை அங்கேயே இருக்கச் செய்வதிலும் என்ன தடை இருக்கிறது, அதை ஏன் இன்றொரு இலாகா ஆர்ஜிதம் செய்ய முற்பட வேண்டும்? இதற்கு உடனே முற்றுப்புள்ளி வைக்காமல் இருப்பதற்கு என்ன காரணம்? அரசாங்கம் வீட்டு மனைகளுக்குப் பட்டா வழங்க நிலம் ஆர்ஜிதம் செய்கிற நேரத்தில் இருக்கிற சிக்கல்களை உடனடியாகத் தீர்ப்பதற்கும் பின்தங்கிய மக்களுக்கு வீட்டு மனைகளை வழங்குவதற்கும் துரித நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இந்த அறிக்கையில் நாம் பார்க்கிறோம். பின்தங்கியோர் நலனுக்காக இலாகா துவக்கப்பட்டது 1969ஆம் ஆண்டு மே மாதம் 2ஆம் நாள், அந்த இலாகாவுக்கு சென்னையிலேமட்டும் அப்போது ஒரு நெறியாளரைப்போட்டிருந்தோம் இந்த மாமன்றத்தில் நானும் மற்றஉறுப்பினர்களும் பின்தங்கியோர் நலத்துறைக்கு அதிகாரிகளும் இன்னும் சில பணியாளர்களும் நியமிக்கப்பட வேண்டுமென்று கேட்டபோது 1974ஆம் ஆண்டு மே திங்கள் 17ஆம் நாள் அன்று மாவட்ட நலஅதிகாரிகளை நியமித்து இருக்கிறார்கள். தமிழ்நாட்டிலே உள்ள மொத்த மக்கள் எண்ணிக்கை 4 கோடியே 84 ஆயிரத்து 209 பேர்கள். இது 1971ஆம் ஆண்டு கணக்குப்படி

அதிலே பின்தங்கிய சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் 1,16,14,597 பேர். இப்போது இருக்கிற அதிகாரிகள் போதுமா? நிச்சயமாகப் போதாது இந்தப் பணிகளைத் துரிதப்படுத்த இன்னும் கூடுதல் பணியாளர்களை இந்த அரசாங்கம் நியமிக்க வேண்டுமென்று நான் விரும்பி வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

இந்த நேரத்தில் இன்னொன்றையும் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். பின் தங்கிய சமுதாயத்தைச் சேர்ந்த சலவைத் தொழிலாளர்கள், சவரத்தொழிலாளிகள் இவர்களுக்கு நாம் இலவசமாகக் கருவிகளை வழங்குகிறோம். அவர்கள் சமுதாயத்தில் மட்டுமல்ல, பொருளாதாரத்திலும்

மிகமிகத் தாழ்ந்தவர்கள். ஆகவே, அவர்களுக்கு நாம் எவ்வளவு தொகை ஒதுக்கினாலும் அண்ணா திராவிட முன்னேற்றக்கழகம் வரவேற்கும்.

1974-75ஆம் ஆண்டின் அவர்களுக்கு இலவசமாக தொழில் கருவிகள் வாங்க இந்த அரசாங்கம் ஒதுக்கியிருந்த தொகை ரூ. 600000 நடப்பு ஆண்டில் 1975-76ல் ஒதுக்கியிருக்கும் தொகை ரூ 200000 தான் சமுதாய வளர்ச்சிக்கேற்ப, பொருளாதார வருவாய்குறைந்திருக்கும் நேரத்தில் ரூ. 400000 ரூபாயை இந்த அரசாங்கம் குறைத்திருக்கிறது. இதற்கு என்ன காரணம் என்பதை நீங்கள் எண்ணிப்பார்க்க வேண்டும். கிராமப் பகுதிகளில் வாழ்கின்ற சலவைத்தொழிலாளர்கள், எவ்வளவு சிரமப்படுகிறார்கள் என்பதை நாம் எல்லாம் நன்றாக அறிவோம். அவர்களுக்கு இலவசமாகக் கருவிகள் தரவேண்டியது மிக மிக அவசியமாகும். அப்படி இருக்கும் நேரத்தில் ஏன் இந்தத் தொகையைக் குறைத்திருக்கிறீர்கள் அதற்கு என்ன காரணம் என்பதை இந்த அரசாங்கம் அறிவிக்க வேண்டுமென்று நான் மெத்த பணிவோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்தபின் தங்கியோர் நலமானிய விளக்கப்புத்தகத்தில் கொடுக்கப்பட்டிருக்கும் புள்ளிவிவரங்களையும் தீட்டப்பட்டிருக்கும் திட்டங்களையும் பார்க்கும்போது நாட்டு மக்களுக்கு அதன் பலன் நாள் கடந்துதான் கிடைக்கிறது என்பதை எண்ணும்போது உள்ளபடியே நாம் மெத்த வருத்தப்பட வேண்டும். ஆகவே இந்தத் துறையில் கூடுதல் அதிகாரிகளை நியமித்து பணியாளர்களை உருவாக்கி பின்தங்கிய மக்களின் நல்வாழ்வுக்கும் பொருளாதார ஏற்றத்திற்கும் இந்த அரசாங்கம் துரித நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்னுடைய உரையில் குறிப்பிட்ட அத்தனை கருத்துக்களையும் ஆய்ந்து பார்த்து பரிகாரம் காணவேண்டுமென்று வலியுறுத்தி என்னுடைய உரையை முடிக்கிறேன் நன்றி, வணக்கம்.

# 12

## 14-3-75 ஆம் தேதியன்று சட்டப்பேரவையில் பொதுப்பணித்துறை மானியக்கோரிக்கையின் மீது நடைபெற்ற விவாதத்தில் கலந்து கொண்டு திரு. பெ. சௌந்தரபாண்டியன் எம்.எல்.ஏ. அவர்கள் ஆற்றிய உரை

திரு. பெ சௌந்தரபாண்டியன்:- தலைவரவர்களே! மாண்புமிகு பொதுப்பணித்துறை அமைச்சரவர்கள் கொண்டு வந்திருக்கிற இந்த மானியக் கோரிக்கையின் மீது எங்களுடைய கட்சியின் சார்பாக மாண்புமிகு உறுப்பினர்கள் கொடுத்திருக்கிற வெட்டுத் தீர்மானங்களை வலியுறுத்தும் முகத்தானும், அதை இந்தஅரசின் கவனத்திற்குகொண்டு வரும் முகத்தானும் என்னுடைய கருத்துக்களை இந்த மாமன்றத்தில் எடுத்துச் சொல்வதற்கு வாய்ப்பளித்தமைக்கு முதற்கண் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த மாமன்றத்தில் நான் சட்டமன்ற உறுப்பினராக வந்த பிறகு என்னுடைய முதல் பேச்சிலேயேஎன்னுடைய தொகுதிக்கு, என்னுடைய தொகுதி மக்களின் நீண்ட நாளைய கோரிக்கையான குடகனாறு திட்டத்தை நிறைவேற்றித் தருமாறு எடுத்துச்சொல்லியிருக்கிறேன். கேள்விகள் கேட்டிருக்கிறேன்; கவன ஈர்ப்புத் தீர்மானங்கள் கொடுத்திருக்கிறேன். பேரறிஞர் அண்ணா அவர்கள் முதலமைச்சரான பிறகு மாண்புமிகு கோவிந்தசாமி அவர்கள் வேளாண்மை அமைச்சராக இருந்தபோது திருச்சி தேவர் மன்றத்தில் நடைபெற்ற நீர்ப்பாசனமாநாட்டில் குடகனாறு திட்டத்தை நிறைவேற்ற வேண்டிய அவசியம் பற்றி தெளிவாக வற்புறுத்திப் பேசியிருக்கிறேன்.

மரியாதைக்குரிய பொதுப்பணித்துறை அமைச்சர் சாதிக்பாட்சா அவர்களையும் இன்னும் அமைச்சரவையிலே

இருந்த, இருக்கிற பல அமைச்சர்களையும் என்னுடைய தொகுதியில் உள்ள குடகனாறு திட்டப்பகுதிக்கு அழைத்து சென்று நிலைமைகளை நேரில் சுட்டிக்காட்டியிருக்கிறேன். மாவட்ட ஆட்சித் தலைவர், மாவட்ட அளவிலே இருக்கிற நிர்வாகப் பொறியாளர்கள் ஆகியோரையும் குடகனாறு பகுதிக்கும், என்னுடைய தொகுதியில் இருக்கிற பல வறண்ட பகுதிகளுக்கும் அழைத்துச்சென்று அங்கே இருக்கிற நிலைமைகளைச் சுட்டிக்காட்டியிருக்கிறேன். பொறியாளர்கள் அங்கே போதுமான தண்ணீர் இல்லை என்று சொன்ன நேரத்திலும், பல புள்ளி விவரங்களைக் காட்டிய நேரத்திலும் அதற்கு உரிய ஆதாரங்களை எடுத்துச்சொல்லி வற்புறுத்தியிருக்கிறேன். மரியாதைக்குரிய நம்முடைய முன்னாள் பொதுப்பணித்துறை அமைச்சர் சாதிக்பாட்சா அவர்கள், சட்டமன்ற உறுப்பினர்கள், பொறியாளர்கள் அடங்கிய நீர்ப்பாசன மாநாட்டை கூட்டிய நேரத்தில் குடகனாறு திட்டம் என்னுடைய தொகுதிக்கு எவ்வளவு முக்கியமானது, வறண்டபகுதிக்கு எவ்வளவு இன்றியமையாதது என்பதை பல ஆதாரங்களோடு சுட்டிக் காட்டி எடுத்துக் கூறி இருக்கிறேன். அதன் பலனாக குடகனாறு திட்டத்தை மறுபரிசீலனை செய்து நல்ல எண்ணத்தோடு இந்த அரசாங்கம் நிறைவேற்றியிருக்கிறது. அதற்கு உள்ளபடியே என்னுடைய தொகுதி மக்களின் சார்பாகவும் வெள்ளியணைப்பகுதி மக்களின் சார்பாகவும் என்னுடைய சார்பாகவும் மாண்புமிகு பொதுப்பணித்துறை அமைச்சர் அவர்களுக்கும் நிதி ஒதுக்கிய மாண்புமிகு முதலமைச்சர் அவர்களுக்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

அதே நேரத்தில் ஒன்றை மட்டும்சுட்டிக்காட்டவிரும்புகிறேன். இந்த குடகனாறு திட்டத்திற்கு முதலமைச்சர் அவர்களால் அடிக்கல் நாட்டப்பட்டது எங்கே நாட்டப்பட்டது என்றால், என்னுடைய தொகுதியில். ஆறு ஓடுகிற இடத்திற்கும் அடிக்கல் நாட்டப்பட்ட இடத்திற்கும் இடையே உள்ள தூரம் 48 கிலோ மீட்டர். அணைகட்ட இருக்கிற இடம் ஆற்றுப்பக்கத்தில் அடிக்கல் நாட்டப்பட்ட

இடம் கடைகோடிப்பகுதியில். இங்கே என்ன பொருள் இருக்கிறது என்ருல் முதலமைச்சரவர்கள் தனக்கு யார் யார் வேண்டாதவர்களோ அவர்களுக்கு பொது மக்கள் மத்தியில் இருக்கும் நல்ல பெயரை மாற்ற வேண்டுமென்ற ஒரே குறிக்கோளுடன்தான் இங்கே அடிக்கல் நாட்டியிருக் கிருர்கள் போடப்பட்ட அடிக்கல் மறுநாளே தூக்கிக் கொண்டு போகப்பட்டது என்பதை இந்த மாமன்றத்தின் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன்.

கிராமப்புறங்களிலே பார்க்கலாம். சிறு குழந்தைகள் சேர்ந்து விளையாடுவார்கள். அப்போது தங்களிடம் இருக் கிற தின்பண்டங்களை - மிட்டாய் அல்லது வேறு பொருள் களைப் பகிர்ந்து உண்பார்கள். அவர்களுக்குள் சண்டை வந்து விட்டால் நான் கொடுத்த மிட்டாயை தா என்று கேட்பார்கள். அதைப்போல இந்த முதலமைச்சர் அவர் கள் தன்னுடைய கட்சியைச்சேர்ந்த சட்டமன்ற உறுப்பி னர்களாக இருந்தாலும் அல்லது தோழமைக் கட்சியைச் சேர்ந்த சட்டமன்ற உறுப்பினர்களாக இருந்தாலும் அந் தந்த தொகுதியில் நடக்கின்ற அரசாங்க நிகழ்ச்சிகளுக்கு அழைக்கிருர்கள்; அழைப்பிதழ் கொடுக்கிருர்கள் அழைப் பதலில் பெயரைப் போடுகிருர்கள். அன்று திராவிட முன் னேற்றக் கழக உறுப்பினர் என்பதால் குடகனுறு திட்டத் திற்கு அடிக்கல்நாட்டுவிழாவுக்கு என்னை அழைக்கவில்லை அழைப்பிதழில் என்னுடைய பெயரைப் போட வில்லை; எனக்கு அழைப்பிதழும் அனுப்ப வில்லை அதற்கு என்ன காரணம் என்பதை மாண்புமிகு பொதுப்பணித்துறை அமைச்சரவர்கள் இந்த மாமன்றத்தில் அறிவிக்க வேண்டு மென்று கேட்டுக் கொள்கிறேன்.

யார் எந்தக் கட்சியில் இருந்தாலும் அந்தத் தொகுதி சட்டமன்ற உறுப்பினரை அழைத்து, அங்கே அவருக்கு உரிய மரியாதையைத்தர இந்த அரசு கடமைப்பட்டிருக் கிறது. தரவேண்டிய பொறுப்பும் இருக்கிறது. ஆகவே இனிமேலாவது இது போன்ற நிலைமை தொடர்ந்து நடை

பெறுமல் இருக்க இந்த அரசு கவனம் செலுத்த வேண்டும் என வலியுறுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன்.

என்னுடைய தொகுதியில் மஞ்சாநாய்க்கன்பட்டியில் கருவேலன் குளம் இருக்கிறது. இந்தக் குளத்தைப் புதுப்பிக்க வேண்டும் என்று 1969-ம் ஆண்டு முதல் இந்த மன்றத்திலும் பொறியாளர்களிடமும் அமைச்சர்களிடமும் வற்புறுத்தி வந்திருக்கிறேன். பொறியாளர்கள் நேரில் பார்வையிட்டார்கள். மதிப்பீடு தயாரித்தார்கள். தயாரிக்கப்பட்ட மதிப்பீடு அப்படியே இருக்கிறது அங்கே தனி நபர் ஒருவர் பல ஆண்டு காலமாக ஆக்கிரமிப்பு செய்து, அதனுடைய பலனை அனுபவித்துக் கொண்டிருக்கிறார். அவரை வெளியேற்றுவதற்கு உயர்நீதிமன்றம் வரை போய் உயர் நீதி மன்றத்தில் வெளியேற்ற உத்தரவும் போட்டிருக்கிறார்கள். ஆனால் இதுவரையில் தாசில்தார் எந்த விதமான நடவடிக்கையும் எடுக்க வில்லை. சப்-கலெக்டர் நடவடிக்கை எடுக்க வில்லை, மாவட்ட ஆட்சி தலைவரின் கவனத்திற்குக் கொண்டு வந்தும் இதுவரை நடவடிக்கை எடுக்க வில்லை. அங்கே என்னுடைய தொகுதியைச் சேர்ந்த முத்தரங்கம்பட்டி மக்களுக்கும், அங்குள்ள கால் நடைகளுக்கும் இது பெரிதும் பயன்படுவதாக இருப்பதால் உடனடியாக ஆக்கிரமிப்பு செய்திருப்பவரை வெளியேற்றி அந்த குளத்தைப் புதுப்பிக்கும் திட்டத்தை நிறைவேற்றித் தரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இதே போல என்னுடைய தொகுதியைச் சேர்ந்த கொசூர் பகுதியில் ஐயன்குளம் இருக்கிறது. பல ஆண்டுகளுக்கு முன்பு பெய்த பெருமழையின் காரணமாக அந்தக் குளத்தின் கரைகள் எல்லாம் உடைபட்டு கிடக்கின்றன அந்தக் குளத்தைப் புதுப்பிக்க வேண்டுமென்று நான் சட்டமன்ற அங்கத்தினராக ஆன பிறகு இந்த மன்றத்திலும், வெளியிலும் பலமுறை எடுத்துச் சொல்லியிருக்கிறேன். அதற்குப் பிறகு பொறியாளர்கள் வந்து அந்தக் குளத்தைப் பார்வையிட்டார்கள். மதிப்பீடு தயார் செய்யப்

பட்டது. அதன் மீதுஎடுத்த நடவடிக்கை என்ன? நான் அண்ணாதி மு க வைச் சேர்ந்தவன் என்ற ஒரே காரணத் திற்காக இது வரை அந்த திட்டத்தை நிறைவேற்ற வில்லை நிறுத்தி வைக்கப் பட்டிருக்கிறது. அதை நிறை வேற்றித்தர வேண்டுமென்று அண்ணா தி.மு.க.வின் சார் பாகக் கேட்டுக் கொள்கிறேன்.

அதே போல முசிறி வட்டத்தில் அப்பநல்லூர் என்ற ஊர்க் குளத்தை செப்பனிட ஏறத்தாழ 1½ லட்சம் ரூபாய் இரண்டாண்டுகளுக்கு முன்பு ஒதுக்கியும் இதுவரை இந்தப் பணியும் நிறைவேற்றப்படாமல் இருக்கிறது அதையும் துரிதப்படுத்தி நிறைவேற்றித்தர வேண்டுமென்று இந்த அரசாங்கத்தை விரும்பி வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன்.

அதே போல குளித்தலைக்கும் முசிறிக்கும் இடையே காவேரிப் பாலம் அமைக்கின்ற பணி உள்ளபடியே நீண்ட காலமாக நிறைவேற்றப்படாமல் இருந்த ஒன்று இந்த அரசாங்கம் பொறுப்பேற்ற பிறகு இந்தச் சட்டமன்றத்தில் நான் அதற்காகப் பலமுறை வாதாடியிருக்கிறேன். பல முறை அதைப்பற்றிக் கேள்விகேட்டிருக்கிறேன். என்னு டைய ஊர் காவேரியின் மறுகரையில் இருக்கிற காரணத்தி னால்—பொதுப்பணித்துறை அமைச்சரிடத்திலும் கேட்டுக் கொண்டிருக்கிறேன். குளித்தலை—முசிறியை இணைப்பதற் கும் வியாபாரத்தைப் பெருக்கவும் திண்டுக்கல்லில் இருந்து சென்னைக்கு திருச்சியைச் சுற்றிச் செல்லாமல் இதன் வழியே குறுக்கே சென்று விடுவதற்குப் வாய்ப்பு ஏற்படும் என்ற காரணத்தினாலும் இந்தப் பாலத்தைக் கட்டுவதற்கு அரசாங்கம் முன்வந்தது. அந்த வேலை நடைபெற்றுக் கொண்டிருந்தது.

ஆனால் ஆரம்பத்தில் எவ்வளவு வேகமாக அந்தவேலை நடைபெற்றதோ அந்த அளவுக்குத் தொடர்ந்து நடை பெறவில்லை. இடையில் மாபெரும் தொய்வு ஏற்பட்டது. தற்போது வேலையே நடைபெறாத சூழ்நிலை ஏற்பட்டிருக் கிறது. இதற்கு என்னகாரணம் என்பதை இந்த அரசாங்கம்

அறிவித்து, அந்த வேலை துரிதமாக நடைபெறுவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எல்லாம் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று இந்த நேரத்தில் கேட்டுக்கொள்ள விரும்பு கிறேன்.

இதேபோல இன்னொன்றையும் சுட்டிக்காட்ட விரும்பு கிறேன். குளித்தலைக்குப் பக்கத்தில் உள்ள ஐயர் மலை உயர் நிலைப்பள்ளி 1956ஆம் ஆண்டு துவங்கப்பட்டது. அந்தப் பள்ளிக்கூடத்திற்கு கட்டிடம் கட்டுவதற்காக 1966 ஆம் ஆண்டு அந்தப் பகுதி மக்கள் 10 ஏக்கர் நிலத்தை அரசாங்கத்திற்கு எழுதிக் கொடுத்தார்கள். எழுதிக் கொடுத்தபிறகு அரசாங்கம் குறித்த விதிமுறைப்படி 10 ஆயிரம் ரூபாயை அந்தப் பள்ளி கட்டிடத்திற்காக அரசுக்கு 1967-ம் ஆண்டே செலுத்திவிட்டார்கள். பிறகு பள்ளி கட்டிட இணைப்புத் திட்டத்தின் கீழ் பொதுமக்கள் நிதியாக 2,500 ரூபாயும் ஊராட்சிஒன்றியத்தின் சார்பாக 10ஆயிரம் ரூபாயும், 14—7—71இல் திருச்சிமாவட்டகல்வி முதன்மை அதிகாரியால் 26 ஆயிரம் ரூபாயுமாக மொத்தம் ஏறக் குறைய 48,500 ரூபாய் பொதுமக்கள் பங்குத் தொகை, கல்வித்துறையின் பங்குத்தொகை செலுத்தியிருக்கிறார்கள். அதற்குப் பிறகு 12—2—72 இல் கல்வி அமைச்சர் நாவலர் வந்து அந்தப் பள்ளிக் கூடத்திற்கு அடிக்கல் நாட்டியிருக் கிறார்கள். அடிக்கல் நாட்டியபிறகும், முதலமைச்சருக்கு மனுக் கொடுத்த பிறகும் அந்தப் பள்ளிக்கூடம் கட்டி முடிக்கப்படவில்லை. இன்றைக்கு அந்தப் பள்ளிக்கூடம் ஐயர்மலை கோவிலுக்குச் சொந்தமான மண்டபத்திலும், சத்திரத்திலும், மரத்தடியிலும்தான் நடைபெற்றுக் கொண் டிருக்கிறது. பொதுப்பணித்துறையில் ஏன் இந்த வேலை இவ்வளவு மெத்தனமாக நடைபெறுகிறது? நான் உள்ள படியே இதற்காக மிகவும் வருத்தப்படுகிறேன் உடனடியாக இந்தப் பள்ளிக்கட்டிடத்தை கட்டி முடித்துக்கொடுக்க ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்னொன்றையும் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். நம்முடைய மறைந்த மாமேதை பேரறிஞர் அண்ணா

அவர்கள் பெயரால் குடுமியான்மலையில் ஒரு விவசாயப் பண்ணை துவங்கப்பட்டது. அண்ணா அவர்கள் உயிரோடு இருந்தபோது துவக்கப்பட்ட பண்ணை—அதை மேலும் பல வகையிலும் அபிவிருத்தி செய்வதை அண்ணா தி. மு. க. வின் சார்பில் வரவேற்கிறோம். அங்கே ஏற்படுகிற வேளாண்மைப் பெருக்கம் சுற்று வட்டார மக்களுக்கு வேலைவாய்ப்பு ஆகியவை நாம் தீட்டுகிற திட்டங்களின் பயனாக இருக்கவேண்டும். அந்தக் கருத்தில் அங்கே பல முனைப்பு திட்டங்கள் பலவற்றை வகுத்து செயலாற்ற வேண்டுமென்பதில் எங்களுக்கு கருத்துவேற்றுமை இல்லை. அதேநேரத்தில் இன்னொன்றை எண்ணும்போது நான் உள்ளபடியே மெத்த வருத்தப்படுகிறேன். இந்தப் பண்ணையில் ஒரு ஆராய்ச்சி நிலையத்தைத் துவக்கியிருக்கிறார்கள் இதற்கு கலைஞர் கருணாநிதி வேளாண்மை ஆராய்ச்சிநிலையம் எனப் பெயரிட்டு கட்டிடம் கட்டுவதற்கு இரண்டு லட்சத்து ஐம்பதாயிரம், 14 லட்சம் செலவில் விடுதி அறிவியல் சாலை மகாநாடு நடத்தப்படும் கூடம், கண்காட்சி மண்டபம், நூல் நிலையம் ஆகியவை அமைக்க திட்டமிட்டிருக்கிறார்கள். இன்னும் 36 லட்சம் ரூபாய் செலவில் ஆராய்ச்சிப் பண்ணையை அபிவிருத்தி செய்ய நிதி ஒதுக்கப்பட்டிருக்கிறது. ஏற்கனவே அண்ணாவின் பெயரால் ஒரு பண்ணை அங்கே இருக்கும் போது. இப்போது இருக்கக்கூடிய முதலமைச்சரின் பெயரால் அங்கே ஒரு ஆராய்ச்சிப் பண்ணையைத் துவக்க வேண்டிய அவசியம் என்ன என்பதுதான் எனது தாழ்மையான வேண்டுகோள். ஏற்கனவே ஒரு வீட்டைக் கட்டியிருக்கிறோம். அதற்கு அறிஞர் அண்ணா பெயரை வைத்திருக்கிறோம். அதே வீட்டில் ஒரு படுக்கை அறைக்கு இன்னொருவர் பெயரைச் சூட்டுவது நல்லதா? நியாயமா? இந்த முதல்வர் அவர்கள் இப்படித்தான் அண்ணா பெயர் உள்ள இடங்களில் எல்லாம் தன்னுடைய பெயரை இணைத்துக் கொள்ள திட்டமிட்டு செயல்படுகிறார்கள். அரசாங்கத்தின் இந்தப் போக்கை நான் கண்டிக்கிறேன். இது மிகமிகத் தவறான போக்கு ஆகும். அண்ணா அவர்களுக்கு நாம்

அளிக்கின்ற மரியாதை அண்ணா அவர்களுக்கு நாம் காட்டுகிற மரியாதை எல்லாவற்றையும்விடச் சற்று உயர் வாக இருக்க வேண்டுமேதவிர அண்ணாவின் பெயரைத் தாழ்த்தக்கூடிய இதுபோன்ற காரியங்களைச் செய்யக் கூடாது என்பதைப் பணிவோடு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

மேலும் இன்றையதினம் இன்றுள்ள சூழ்நிலையில் அரசாங்கம் காண்டிராக்ட் விடுகிற முறையைத் தயவு செய்து மறுபரிசீலனை செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அரசாங்கத் திட்டங்கள் - சாலையாக இருந் தாலும் சரி, பாலம் கட்டும் திட்டமாக இருந்தாலும் சரி, குளம் குட்டைகளைச் சரிப்படுத்தும் திட்டமாக இருந்தாலும் சரி தனிப்பட்ட காண்டிராக்டர்களிடம் ஒப்படைக்கிறோம். அவர்களாவது அந்தப் பணியை ஒழுங்காக நிறைவேற்று கிறார்களா என்றால் இல்லை. நூறு ரூபாயில் 25தான் திட்டத் திற்குச் செலவிடுகிறார்கள். 75 ரூபாய் இடையில் நழுவி விடுகிறது. இதைத்தான் மறைந்த மாமேதை அண்ணா அவர்கள் இந்த மன்றத்தில் சொல்லும்போது நாம் பணிக் கட்டியை ஒருவர் கையில் கொடுக்கிறோம் அது கைமாற மாற கடைசியில் உள்ளவருக்குப் போய்ச் சேருகிறபோது உருகி உருகி ஒருசொட்டுத் தண்ணியாக போய்சேருகிறது என்றார்கள். அதுபோலத்தான் நாம் போடுகிற திட்டங் களுக்கு அதிகப்பணம் ஒதுக்குகிறோம் என்றால் மக்களுக்குப் போய்ச்சேருகிற நிலையில் அது ஒரு சொட்டுத் தண்ணி போல்போய்ச்சேருகிறது ஆகவேதான் இப்போது கொடுக் கிற காண்டிராக்ட் முறையை மாற்றி அமைக்க முடியுமா? திருத்தி அமைக்க முடியுமா என்பதை மறுபரிசீலனை செய்ய வேண்டுமென்று இந்த அரசாங்கத்தைக் கேட்டுக்கொள் கிறேன் ஆகவே, என்னால் எடுத்துச் சொல்லப்பட்ட கருத்துக்கள், அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் சார்பாகக் கொடுக்கப்பட்டு இருக்கக்கூடிய வெட்டுத் தீர் மானங்களில் உள்ள கருத்துக்கள் அனைத்தையும் பரிசீலனை

செய்து நிறைவேற்றுவதற்கு இந்த அரசு வேண்டிய நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கேட்டு, இந்த நல்ல வாய்ப்பினை அளித்ததலைவர் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொண்டு முடித்துக்கொள்கிறேன். வணக்கம். நன்றி



# 13

## 19-3-75 ஆம் தேதியன்று சட்டப்பேரவையில் ரெவின்யூதுறை மானியக் கோரிக்கையின் மீது நடைபெற்ற விவாதத்தில் கலந்து கொண்டு

## திரு. பெ. சௌந்தரபாண்டியன் எம்.எல்.ஏ., அவர்கள் ஆற்றிய உரை.

திரு. பெ. சௌந்தரபாண்டியன் : சட்டப் பேரவைத் தலைவர் அவர்களே, மாண்புமிகு ரெவின்யூ அமைச்சர் அவர்களால் கொண்டு வரப்பட்டு இருக்கின்ற இந்த மான்யக் கோரிக்கை மீது எங்களுடைய கட்சியின் சார்பாக கொடுக்கப்பட்டு இருக்கிற வெட்டு தீர்மானத்தை ஆதரித்து என்னுடைய கருத்துகளை இந்த அவையில் சொல்வதற்கு வாய்ப்பு அளித்தமைக்கு முதலில் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன் இந்த மான்ய கோரிக்கையில் மாண்புமிகு ரெவின்யூ அமைச்சர் அவர்கள் வறட்சிப் பணிகளைப் பற்றி விவரமாக இங்கே எடுத்து உரைத்து இருக்கிறார்கள் வறட்சிப் பணிக்கு நாம் எவ்வளவு தொகை ஒதுக்கினாலும் தமிழ்நாட்டு மக்கள் நிச்சயமாக வரவேற்பார்கள். என்னுடைய கருத்து எல்லாம் ஒதுக்கிய தொகையை எந்த அளவுக்கு நாம் செலவழிக்கிறோம். ஒப்படைக்கப்பட்ட பணியை எந்த அளவுக்கு நிறைவேற்றுகின்றோம், பணிகள் செம்மையாக நடந்து இருக்கின்றனவா, பணம் ஒழுங்காக கணக்கிடப்பட்டு செலவழிக்கப்படுகிறதா என்கிற பல பிரச்சனைகளை இந்த அரசு ஆராய வேண்டும் என்பதுதான். நாம் கொடுக்கிற பணம் முறையாக செலவழிக்கப்படுகிறதா என்பதில் இந்த அரசாங்கம் கண்ணும் கருத்துமாக இருக்க வேண்டும். ஏன் என்றால் பல பகுதிகளில் ஏற்கனவே போடப்பட்ட சாலைகளுக்கு சிலர் பணத்தை ஒதுக்கி இருக்கிறார்கள் என்கிற

குறைபாடுகள் ஏராளமாக இருந்து வருகிறது. ஆகவே அப்படிப்பட்ட சூழ்நிலையில் எப்படி கண்காணித்து சீர் படுத்த முடியும் என்பதை மாண்புமிகு ரெவின்யூ அமைச்சர் அவர்கள் சிந்தித்து பரிசிலனை செய்ய வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

ஒவ்வொரு வட்டத்திலும் வறட்சிப்பணியை நிறை வேற்றுவதற்காக, கொடுக்கிற பணத்தை செலவிடுவதற் காக செய்யவேண்டிய பணியைஉறுதிபடுத்துவதற்காக வட்ட அளவில் வறட்சி அதிகாரியை இந்த அரசாங் கம் நியமித்து இருக்கின்றது. இந்த அதிகாரி அங்கே இருக்கின்ற சட்ட மன்ற உறுப்பினர்களை, ஊராட்சி ஒன்றியப் பெருந் தலைவர்களை, அதிகாரிகளை அழைத்து எந்த எந்தப் பகுதிக்கு எந்தத் திட்டத்தை எடுத்துக் கொள்ளலாம் என்று கேட்டு, அதை முடிவு செய்து அதற் காக நிதி ஒதுக்குகிற பொறுப்பினை ஏற்று இருக்கிறார். இந்த நேரத்தில் சாலை போடுவதற்காக ஏற்கனவே உள்ள சாலையை புதிதாக வறட்சிப் பணியில் செய்ய வேண்டு மென்று சிலர் வலியுறுத்தி தொகையையும் பெற்று இருக் கிறார்கள். மாண்புமிகு ரெவின்யூ அமைச்சர் அவர்களுக்கு என்னுடைய தொகுதியை பற்றி நன்றாக தெரிந்து இருக் கின்றது என்ற காரணத்தால் ஒரு உதாரணத்தை மட்டும் சொல்கிறேன். பிள்ளபாளையம் மத்திப்பட்டி சாலையை ஓராண்டுக்கு முன்பு பழுது பார்ப்பதற்கு ஊராட்சி ஒன்றிய நிதியிலிருந்து செலவழித்து இருக்கிறார்கள் ஆனால் வறட்சி நிதியில் இந்த சாலையை மீண்டும் செப்பனிட நிதி ஒதுக்கம் தேவை என்று கேட்ட நேரத்தில் நான் எவ்வித எதிர்ப்பும் தெரிவிக்கவில்லை. இதை ஏன் சுட்டிக்காட்டுகிறேன் என்றால் இது போன்ற சாலைகள் பழுது பார்ப்பதற்கு ஒதுக்கப்படுகிற பணம் தேவையற்றது என்பது என் கருத்து ஆகும் இங்கே தான் சில தவறுகள் நடக்கிறது. இப்படிப் பட்ட தவறுகள் நடக்காமல் இருப்பதற்காக மாண்புமிகு ரெவின்யூ அமைச்சர் அவர்கள் ஒவ்வொரு வட்டத்திற்கும் உள்ள அந்த வறட்சி அதிகாரியுடன் ஒவ்வொரு தொகுதி

யைச் சேர்ந்த சட்டமன்ற உறுப்பினரையும் ஊராட்சி ஒன்றிய பெருந் தலைவரையும் இன்னும் மக்கள் சார்பாக ஒருவரையும் சேர்ந்த குழு நியமித்து வேலை ஒழுங்காக நடைபெற்றுள்ளதா? ஒதுக்கிய தொகை முழுமையாக செலவிடப்பட்டு இருக்கிறதா என்று பார்க்க வேண்டும் ஒவ்வொரு வட்டத்திலும் ஒரு குழு அமைத்தால் உள்ள படியே சொல்கிறேன், ஊராட்சிப்பணி செம்மையாக நடைபெற ஏதுவாக இருக்கும். இதை இந்த அரசாங்கம் கௌரவம் பார்க்காமல், முதலமைச்சர் அவர்கள் குழு அமைக்கத் தேவை இல்லை என்று சொல்லிவிட்டதால் பிடிவாதம் பிடிக்காமல் நாட்டுமக்களின் நன்மைக்காகவும் இந்த மாமன்றத்தில் நாம் ஒதுக்கி இருக்கின்ற பணம் முறைப்படி செலவழிக்கப்படுகிறதா என்று கண்காணிக்கவும் ரெவின்யூ அமைச்சர் குழு அமைப்பதற்கு இந்த மாமன்றத்தில் நல்ல அறிவிப்பை அறிவிக்க வேண்டுமென்று நான் வலியுறுத்திக் கேட்டுக் கொள்கிறேன்.

இந்த அரசாங்கத்தின் கொள்கையாக ஒரு கொள்கையை திட்டவட்டமாக அறிவித்து இருக்கிறார்கள். நிலம் அற்ற ஏழை மக்களுக்கு நிலங்கள் இயன்ற அளவு ஒப்படைசெய்து கொடுக்க வேண்டும் என்பதை நோக்கமாகக் கொண்டுள்ளது இந்த அரசாங்கம் என்று குறிப்பிட்டிருக்கிறீர்கள். பேரறிஞர் அண்ணா அவர்கள் பொறுப்பு ஏற்ற பிறகும், இன்றைய முதலமைச்சர் கலைஞர் கருணாநிதி அவர்கள் பொறுப்பேற்ற பிறகும் நிலப்பட்டா வழங்குவதில் நல்ல தீவிரம் காட்டி இருக்கிறார்கள் இதை உள்ளபடியே நான் வரவேற்கிறேன். இருந்தாலும் சில பல இடங்களில் எப்படி குறைபாடுகள் இருக்கின்றன என்பதைச் சுட்டிக் காட்டுவது என்னுடைய கடமையாகக் கருதுகிறேன். என்னுடைய தொகுதியில் ரெங்கநாதபுரம் கட்டளை, கீழ மாயனூர், மேல மாயனூர் போன்ற பகுதிகளில் அங்கே இருக்கின்ற ஏழை, பின்தங்கிய வகுப்பு மக்கள், ஏழை தாழ்த்தப்பட்ட மக்கள் ஏறத்தாழ 60 குடும்பங்கள் 20 ஆண்டுகாலமாக அங்கே இருக்கின்ற புறம்போக்கு

நிலத்தை சீர்திருத்தி செம்மைப்படுத்தி, உழைத்து, பயிரிட்டு அந்த நிலத்தைப் பயன்படுத்தி அனுபவித்து தங்களுடைய குடும்ப வாழ்க்கையை நடத்திக் கொண்டு இருக்கிருர்கள். இப்படி நடத்திக் கொண்டிருக்கிறவர்கள் ஒரு ஆண்டல்ல, இரண்டு ஆண்டல்ல, இருபது ஆண்டு காலம் இந்த நிலத்தைப் பயன்படுத்தி, ரெவின்யூ நிலவரி செலுத்திக் கொண்டு இருக்கிருர்கள். அப்படிப்பட்ட மக்களை வெளியேற்றுவதற்கு இரண்டு முறை நோட்டீஸ் அனுப்பப்பட்டு இருக்கின்றது. அவர்கள் மாவட்ட ஆட்சி தலைவரிடம் முறையிட்டு விட்டார்கள். அரசாங்கத்திடம் முறையிட்டுவிட்டார்கள். ரெவின்யூ அமைச்சரிடம் முறையிட்டு விட்டார்கள். முதலமைச்சரிடமும் கூட முறையிட்டு விட்டார்கள். ஆனல் இதுவரையில் அவர்களுக்கு எந்த விதமானப் பரிகாரமும் இந்த அரசாங்கம் அளிக்கவில்லை. ஆகவே, ஒரு பக்கம் நிலத்தை உழுகிறவர்களுக்கு உரிமையை வேகமாக கொடுத்துக் கொண்டிருக்கிறேம் என்று சொல்லிக் கொண்டு, மறுபக்கம் ஏழை எளியவர்களுக்கு துன்பம் தருகிருர்கள். அவர்களுடைய கோரிக்கைகளை ஏற்றுக்கொள்ள மறுக்கிருர்கள் என்ருல் அவர்களுக்கு நில உரிமையைத் தருகிறேம் என்று சொல்வதில் என்ன நியாயம் இருக்கிறது என்று அராசாங்கம் எண்ணிப்பார்க்க வேண்டும். ஆகவே, இப்படிப்பட்ட சிக்கல்கள் வராமல் தடுக்க தக்க நடவடிக்கை எடுத்து அந்த 60 குடும்பங்களையும் காப்பாற்றுவதற்கு ரெவின்யூ அமைச்சர் அவர்கள் முழு பொறுப்பையும் ஏற்றுக்கொண்டு தேவையான கடமையை ஆற்றவேண்டுமென்று இந்த நேரத்தில் நான் கேட்டுக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன். ஏழை எளிய மக்களுக்கு பின்தங்கிய மக்களுக்கு, தாழ்த்தப்பட்ட மக்களுக்கு வீட்டுமனைகள் ஒப்படை செய்து தருவதில் எவ்வளவு வேகமாக இருக்கிறேம் என்பதற்கு பல புள்ளி விபரங்களைப் பார்க்கிறேம். என்னைப்பொறுத்த வரையில் வீட்டு மனைகளை கையகப்படுத்துவதில் ஏற்படுகின்ற காலதாமதத்திற்கு காரணம், இப்போது பின்பற்றப் படும் விதிமுறைகள்தான். அதனல் ஒரு வீட்டுமனையை

கையகப்படுத்தவும் ஒப்படை செய்யவும், உரியவரிடம் உரிய கட்டணத்தைச் செலுத்துவதிலும், நிலத்தைப் பெறுவதிலும் எவ்வளவு காலதாமதம் ஆகிறது என்பதை அரசாங்கக் குறிப்பேட்டைப் புரட்டிப்பார்த்தால் தெரியும் எனக்குத் தெரிந்தவரை ஒரு வீட்டுமனையை ஒப்படை செய்ய ஏறத்தாழ 10 ஆண்டுகூட ஆகியிருக்கிறது. ஆகவே சட்டப் பிரச்சனையில் ஏதாவது சிக்கல் இருந்தால் இந்த அரசு அதையும் மறுபரிசீலனை செய்து உரிய முறையில் திருத்துவதற்கு ஏறபாடு செய்ய வேண்டும் அந்தந்த மாவட்ட ஆட்சித் தலைவர்களே நிலத்தை கையகப்படுத்தும் அதிகாரம் பெற்றவராக இருக்கும் வகையில் இந்த அரசு சட்டத்தில் வழிவகை காண வேண்டுமென்று இந்த நேரத்தில் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

மாவட்ட நிர்வாகத்தைப் பொறுத்த வரையில் என்னென்ன பிரச்னைகள் இருக்கின்றன. எப்போது இந்த மாவட்ட நிர்வாகம் தொடங்கப்பட்டது என்பதை எல்லாம் அலசிப் பார்த்து, வேண்டிய சீர்திருத்தம் செய்ய வேண்டியது மிக மிக அவசியம் என்பதை நாம் அத்தனை பேரும் ஒப்புக் கொள்கிறோம்.

வெள்ளையர் காலத்தில் ஏற்பட்ட நிர்வாக முறை தான் இன்று வரையில் இருந்து கொண்டிருக்கிறது. நிர்வாக சீர்திருத்தக் கமிஷனால் சொல்லப்பட்டிருக்கின்ற அத்தனை சிபாரிசுகளையும், அத்தனை கருத்துக்களையும் அலசிப்பார்த்து எதை எதை ஏற்றுக் கொள்ள முடியுமோ அதை உடனடியாக ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று இந்த நேரத்தில் கேட்டுக் கொள்கிறேன்.

மாவட்டக்கலெக்டர்கள் ஏற்கனவே வெள்ளையர் காலத்தில் ரெவின்யூ கலெக்ட் பண்ணிய காரணத்தால் அவர்களுக்கு கலெக்டர் என்று பெயர் வந்தது ஆனால் அவர் இப்போது வேளாண்மைத் துறையைக்கவனித்துக்கொண்டிருக்கிறார். பொதுப்பணித் துறையைக் கண்காணித்துக்

கொண்டிருக்கிறார். உள்ளாட்சித்துறையை கட்டுப்படுத்தி கொண்டிருக்கிறார்; இப்படி எல்லா துறைகளும் அவருடைய நிர்வாகத்தின் கீழ், அவருடைய அதிகாரத்தின் கீழ் வந்திருக்கின்றன.

நாம் சொல்கிறோம் அதிகாரம் ஒருவர் கையில் அதிகமாக இருக்கக்கூடாது என்று, அதிகாரத்தைப் பலருக்கு பங்கிட்டுத் தரவேண்டுமென்பதுதான் இந்த அரசின் கொள்கை. ஆகவே, மாவட்ட ஆட்சித் தலைவருக்கு இருக்கிற அதிகாரங்களை நாம் மறுபரிசீலனை செய்து அதிகாரங்களை பரவலாகப் பிரித்துக் கொடுக்கவேண்டும்.

ஒரு குளத்தை தேக்க வேண்டுமென்றால் அந்த அதிகாரம் அங்கே இருக்கிற பொதுப்பணித்துறையைச் சேர்ந்த நிர்வாகப்பொறியாளருக்கோ அல்லது சூப்ரண்டிங் எஞ்சினியருக்கோ அல்லது மேல்மட்டத்தில் இருக்கிற பொறியாளருக்கோதான் இருக்க வேண்டும். (மணியடிக்கப் பட்டது) நான் 10 நிமிடங்கள்தான் பேசியிருக்கிறேன். இன்னும் கொஞ்சம் நேரம் கொடுங்கள்

மாண்புமிகு பேரவைத் துணைத்தலைவர்:- 18 நிமிடங்கள் பேசியிருக்கிறீர்கள்; இன்னும் 2 நிமிடங்களில் முடித்து விடுங்கள்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்:- மாவட்ட ஆட்சித்தலைவர்களுக்கு இருக்கிற அதிகாரங்களை மறுபரிசீலனை செய்து அந்தந்த துறையைச் சேர்ந்தவர்களுக்கு உரிய அதிகாரங்களைக் கொடுக்க வேண்டுமென்று இந்த நேரத்தில்கேட்டுக் கொள்ள கடமைப்பட்டிருக்கிறேன்.

மக்கள் குறைகளைத் தீர்ப்பதற்கு மனுநீதித் திட்டத்தை இந்த அரசு ஏற்படுத்தியிருக்கிறது உள்ளபடியே நான் அதை வரவேற்கிறேன் அதே நேரத்தில் ஏற்றுக்கொள்ளப்படுகின்ற மனுக்கள், வாங்கப்படுகின்ற குறைபாடுகள் நீக்கப்படுகின்றனவா என்றால் நிச்சயமாகச் சொல்வேன், பல குறைபாடுகள் தீர்க்கப்படவில்லை.

உதாரணத்திற்குச் சொல்ல வேண்டுமென்றால், இலங்கையிலிருந்து இங்கே அகதிகளாக வந்திருக்கின்றவர்கள் ஏராளமான மனுக்களை கொடுத்திருக்கிறார்கள். ஒவ்வொரு மாவட்ட ஆட்சித்தலைவர் அலுவலகத்திலும் 5,000 அல்லது 10,000 மனுக்கள் குவிந்து கிடக்கின்றன. வாங்கிய மனுக்கள் பற்றி அதிகாரிகள் எந்தவிதமான பதிலையும் அனுப்பவில்லை. ஆகவே மக்கள் குறைகளை நாம் மனுக்கள் மூலம் வாங்கும் போது உரிய பதிலை 15 நாட்களுக்குள் அனுப்ப வேண்டுமென்ற ஆணையை இந்த அரசு பிறப்பிக்க வேண்டும் அப்போதுதான் கொடுத்த மனுக்களுக்கு, எழுப்பிய கோரிக்கைகளுக்கு என்ன பரிகாரம் கிடைத்தது என்பதை புரிந்து கொள்வதற்கு இந்த அரசின் நிர்வாகத்தை அறிந்து கொள்வதற்கு அவர்களுக்கு ஒரு நல்ல வாய்ப்பு இருக்கும். ஆகவே, பெயரளவில் மனுநீதி என்று இல்லாமல் உள்ளபடியே உண்மையான மனுநீதியாக அது அமைய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

ஏற்கனவே நான் சுட்டிக்காட்டியதைப்போல சின்ன தாராபுரத்தில் ஏறத்தாழ 40 குடும்பங்கள் 22 முறை மனு கொடுத்தார்கள். அதற்கு எந்தவிதமானப்பதிலும் இல்லை. இது போன்ற குறைபாடு திருச்சி மாவட்டத்தில் மட்டுமல்ல, தமிழ்நாடு பூராவும் இருக்கிறது. ஆகவே, இது போன்ற குறைபாடுகள் இல்லாமல் மனுநீதி முறைகளை செம்மைப்படுத்தி இந்த அரசு துரிதமான நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று இந்த நேரத்தில் கேட்டுக் கொள்கிறேன்.

கிராம அதிகாரிகள் தான் இந்த ரெவின்யூ நிர்வாகத்தின் அடிப்படைச்சிப்பந்திகள். அவர்களுடைய குறைபாடுகளை நாம் ஏற்று, அவர்களை அரசாங்கப் பணியாளர்களாக நிரந்தரப் பணியாளர்களாக முழுநேரப் பணியாளர்களாக நியமிப்பதற்கு இந்தஅரசு மீண்டும் பரிசீலனை செய்ய வேண்டும்.

அவர்களுக்கு குடும்பப்பாதுகாப்பு திட்டத்தை விரிவாக்கியிருக்கிறீர்கள். ஏப்ரல் மாதம் முதல் அவர்களுக்கு அந்த திட்டம் பொருந்தும் என்றும் கூறப்பட்டிருக்கிறது. என்னுடைய வேண்டுகோள், இந்த ஆண்டு ஜனவரிமுதல் தொடங்கினால் எத்தனையோ கிராம அதிகாரிகளின் குடும்பங்கள் பலன் அடையும். ஆகவே, மாண்புமிகு ரெவின்யூ அமைச்சரவர்கள் இந்த ஜனவரி முதல் இந்த திட்டத்தை கொண்டு வருவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இறுதியாக திருச்சி மாவட்டத்தில் அங்கு இருக்கிற அலுவலகங்களை எல்லாம் ஒரே இடத்தில் வைப்பதற்காக 14 லட்சம் ரூபாயை ஒதுக்கியிருக்கிறோம். இந்த அலுவலகம் தற்போது எங்கே கட்டப்படுவதற்கு அரசாங்கம்ஒப்புக் கொண்டிருக்கிறது என்பதை தெரியப்படுத்த வேண்டும். காஜாமலையில் கட்டப்போவதாக சொல்கிறார்கள். அங்கு கட்டுவதைவிட இப்போது இருக்கிற மாவட்ட ஆட்சித் தலைவரின் அலுவலகத்தின் முன்புறம் ஒரு தோட்டம் இருக்கிறது. அந்த தோட்டம் பயிர் எதுவும் இல்லாமல் சும்மா கிடக்கிறது. அங்கே பல அடுக்கு மாடிக் கட்டிடத்தை கட்டினால் இப்போதுஇருக்கிற இடத்தையும்பயன்படுத்திக் கொள்ளலாம்; புதிதாக கட்டுகிற இடத்தையும் பயன்படுத்திக் கொள்ளலாம் ஆகவே, இந்தச்சந்தர்ப்பத்தில் மாண்புமிகு ரெவின்யூ அமைச்சரவர்கள் நன்கு ஆலோசித்து, காஜாமலையில் புதிய கட்டிடத்தை கட்டுவதைவிட இப்போது இருக்கிற இடத்திலேயே கட்டுவதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டு, எங்கள் கட்சியின் சார்பாக கொடுத்திருக்கிற வெட்டுத் தீர்மானங்களை வலியுறுத்தியும் ஆதரித்தும் என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன், நன்றி, வணக்கம்.



# 14

## தமிழ்நாடு 1975-ஆம் ஆண்டு குடியிருப்புதாரர்கள் வெளியேற்றப்படுவதிலிருந்து பாதுகாக்கின்ற சட்டத்தின் மீது நடைபெற்ற விவாதத்தில் கலந்து கொண்டு சட்டப் பேரவையில் 18—4—75-ஆம் தேதியன்று

## திரு. பெ. சௌந்தரபாண்டியன் எம்.எல்.ஏ. அவர்கள் ஆற்றிய உரை

திரு பெ. சௌந்தரபாண்டியன் : தலைவர் அவர்களே! தமிழ்நாடு 1975 ஆம் ஆண்டு குடியிருப்புதாரர்கள் வெளியேற்றப்படுவதிலிருந்து பாதுகாக்கின்ற சட்டத்தை வரவேற்று என்னுடைய சில கருத்துக்களை இங்கே எடுத்துரைப்பதற்கு எனக்கு வாய்ப்பளித்தமைக்கு முதலில் நான் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

1961-ஆம் ஆண்டு இயற்றப்பட்ட சட்டம் இதுவரை நிரந்தரமாக்கப்படாமல் இப்போதுதான் மறுபரிசீலனை செய்து நிரந்தரமாக்குகின்ற நல்ல முடிவை எடுத்து இந்த மாமன்றத்தில் இன்று நிறைவேற்ற இருக்கிறோம். இந்தச் சட்டத்தில் என்னென்ன குறைபாடுகள் இருக்கின்றன. இதை நிறைவேற்றுவதில் என்ன என்ன சிக்கல்கள் இருக்கின்றன. அதிகாரிகள் மட்டத்தில் எந்தவகையிலே தீர்ப்பளிக்கிறார்கள் என்பதையெல்லாம் நாம் சற்று அலசி ஆராய்ந்து பார்த்து அதற்குப் பிறகு தகுந்த பரிகாரம் காணவேண்டுமென்று நான் பணிவோடு கேட்டுக்கொள்கிறேன்

நம்முடைய நாட்டில் விவசாயிகளும், விவசாயத் தொழிலாளர்களும் ஏராளமானபேர்கள் இப்போது இருந்து கொண்டிருக்கிறார்கள். பலருக்கு குடியிருக்க வீடு இல்லை. குடியிருக்கிற குடிசையும் நிரந்தரமில்லை. அவர்களுக்கு

நிரந்தரப் பரிகாரம் காணவேண்டும் என்கிற நல்ல நோக்கத்தோடுதான் 1961-ஆம் ஆண்டு இந்தச் சட்டம் கொண்டுவரப்பட்டு இடையிடையே தேவைக்கு ஏற்ப புதுப்பிக்கப்பட்டுவந்து நீண்ட பரிசீலனைக்குப் பிறகு ஒரு நிரந்தரப் பரிகாரம் காணவேண்டுமென்று நல்ல முடிவை எடுத்து இன்று அதை நாம் அலசி ஆராய்ந்து கொண்டிருக்கிறோம். குடியிருப்புதாரர்கள் யார் என்பதை நிர்ணயிப்பதிலும், விவசாயக் கூலியார் என்பதை நிர்ணயிப்பதிலும், விவசாயிகள் யார் என்பதை நிர்ணயிப்பதிலும் பல சந்தர்பங்களில் பல சிக்கல்கள் ஏற்படுகிறது என்பதை கிராமப் புறங்களிலேயிருந்து வருகின்ற எல்லா சட்டமன்ற உறுப்பினர்களும் அறிவோம். ஒரு சிலர் விவசாயிகளாக இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் நிரந்தரமாக விவசாயம் செய்வது இல்லை ஒரு சிலர் விவசாயக்கூலிகளாக இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் விவசாயத்திலேயே நிரந்தரமாக கூலிகளாக இருப்பது இல்லை. கடை வைத்துக்கொண்டும், வேறு பல தொழில்களில் ஈடுபட்டுக் கொண்டும் இருக்கிறார்கள். என்பதை நாம் மறந்துவிடக்கூடாது அப்படிப்பட்டவர்கள் இந்த சட்டம் நிரந்தரமாக்கப்பட்ட பிறகு இந்த வீட்டில் நான் தான் குடியிருந்தேன். ஆகவே எனக்கு உரிமை வழங்க வேண்டும் என்று சொல்கிற நேரத்தில் உள்ளபடியே அவன் விவசாயி தானா? அல்லது விவசாயக் கூலி தானா? என்பதை அலசி ஆராய்ந்து பார்ப்பதற்கு சிலவிதி முறைகளை வகுக்க வேண்டும். நான் இதை சொல்லுவதற்குக்காரணம் கிராமப் புறங்களிலே இது போன்ற சிக்கல்கள் ஏராளமாக இருக்கின்றன. உதாரணத்திற்குகூற விரும்புகிறேன். மாண்புமிகு வருவாய்த்துறை அமைச்சருக்குக் கூடத்தெரியும். குளித்தலையில் பஸ் நிலையத்திற்கு அருகில் ஒரு நிலம் இருக்கிறது அது தாயாரம்மாள் என்பவருக்குச் சொந்தமான நிலம். அந்த அம்மையார் சேதுப்பிள்ளை என்பவரிடமிருந்து அந்த நிலத்தை வாங்கினார். அதில் கன்னியப்பபிள்ளை என்பவர் இரண்டு செண்ட் நிலத்தை ஆக்கிரமித்து குடிசை போட்டு குடியிருந்து வந்தார். கன்னியப்பபிள்ளை இறந்து விட்டார். அவருக்கு ஆண் வாரிசு,

பெண் வாரிசு, இருக்கிறது. அவர்கள் வேறு ஊருக்குப் போய் குடியேறி விட்டார்கள். அவர் இறந்த பிறகு அவரு டைய மருமகன் முனியப்பபிள்ளை என்பவர் தனக்குத்தான் சொந்தம் என்று ஆதரைஸ்டு ஆபிசரிடம் மனுப்போட்டார் அவர் அந்த மனுவை விசாரித்து அங்கேயுள்ள கணக்கப் பிள்ளையும் மற்றவர்களும் சொல்லுகிற வாக்கு மூலத்தை வைத்துக்கொண்டு முனியப்பபிள்ளைக்கு சொந்தம் என்று தீர்ப்பளித்து விட்டார். அந்த தீர்ப்பு தவறு என்றுசொல்லி தாயாரம்மாள் மாவட்ட வருவாய்த்துறை அதிகாரியிடம் அப்பீல் செய்தார்கள் அவரும் முனியப்பபிள்ளைக்குத்தான் உரிமை என்று தீர்ப்பு அளித்தார். இப்போது உயர்நீதி மன்றத்தில் அந்த வழக்கு இருந்து கொண்டிருக்கிறது. இதை நான் ஏன் சுட்டிக்காட்டுகிறேன் என்றால் நம்மு டைய சிவில் சட்டப்படி ஒரு இடத்தின் உரிமையை நிர்ண யிக்கிற பொறுப்பு, உடைமையை நிர்ணயிக்கிற பொறுப்பு சிவில் கோர்ட்டிற்கு இருக்கிறது. அந்த அதிகாரம் சிவில் கோர்ட்டிற்குத்தான் இருக்கிறதே தவிர அரசாங்க நிர்வாக அதிகாரிகளுக்கு இல்லை என்பதை முதலில் நாம் எண்ணிப்பார்க்க வேண்டும். வாரிசுகள் இருக்கும் போது மருமகன் எப்படி வாரிசு ஆக முடியும்? நிர்வாக அதிகாரி கள் யாரின் கீழ் பணியாற்றுகிறார்கள். அரசாங்கத்தின் கீழ் பணியாற்றுகிறார்கள். ஆங்காங்கே இருக்கிற அரசியல்தலை வர்கள், செல்வாக்குப் படைத்தவர்களின் குறுக்கீடு இருக் கிற காரணத்தால் சட்டத்தை ஆராயாமல், சட்டச்சிக்கலை எண்ணிப்பார்க்காமல், இண்டியன் லிமிடேசன் ஆக்டில் (Indian Limitation Act) உள்ளது பற்றி எள்ளளவும் கருதிப் பார்க்காமல் யார் சிபாரிசு செய்கிறார்களோ, யாருடைய செல்வாக்கு எடுபடுகிறதோ அவருக்குத்தான் குடியிருப்பு உரிமை வழங்கப்படுகிற முறையிலே அதிகாரம் இந்த ஆத ரைஸ்டு ஆபீசர்களிடத்திலே இருக்கிறது என்பதை எண் ணிப்பார்க்க வேண்டும். ஒருவருக்கு உரிமை இருக்கிறதா அல்லது உடைமை இருக்கிறதா என்பதை நிர்ணயிக் கின்ற முழுப்பொறுப்பும் சிவில் கோர்ட்டிடம்விட்டால்தான் நியாயமான தீர்ப்பாக அது இருக்க முடியும். நம்முடைய

இண்டியன் எவிடென்ஸ் ஆக்டை (Indian Evidence Act) முறையாகப் பல அதிகாரிகள் படித்திருக்க மாட்டார்கள். சிலர் பார்த்திருக்கக்கூட மாட்டார்கள் அப்படிப்பட்டவர்களுக்கு உண்மையான டைட்டில் டீட் (deed) யாரிடம் இருக்கிறது. அதிலே உள்ளது உண்மைதானு, அதிலே உள்ள ஷரத்துக்கள் சரிதானு என்று படித்துப்பார்த்து மறு பரிசீலனை செய்து அந்த உரிமையை யாருக்கு விடுவது என்பதிலே ஐயப்பாடு இருக்கும் இது போன்ற சந்தர்ப்பங்களில் உரிமை யாருக்கு இருக்கிறது என்பதை பரிசீலிக்கின்ற உரிமையை சிவில் கோர்ட்டுக்கு நாம் விட்டு விடவேண்டும்.

திரு கே எஸ். குப்பல் இராமகிருஷ்ணன்:- ஒரு கிளாரிபிகேசன் ஏதோ முனியப்பபிள்ளை விஷயத்திலே ஆர்டர் தவருக வந்ததாக சொல்லுகிருர்கள். அப்படி தவருக இருந்தால் அதனுல் எல்லா ஆர்டர்களும் தவருக இருக்கின்றன என்று சொல்லி கோர்ட்டிற்கு விட வேண்டுமென்று சொல்லுகிருர்கள் கோர்ட்டிலே தீர்ப்பு சொன்னுல் அந்தத் தீர்ப்பும் தவறு என்று சொல்லுகிருர்களே. அப்படியானுல் யாரிடம் தான் விட வேண்டும் என்று சொல்லுகிருர்கள்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: நான் ஒரு பானை சோற்றில் ஒரு சோறுதான் பதம் பார்த்துச் சொன்னேன். இப்படிப்பட்ட குறைகள் ஏராளமாக இருக்கின்றன என்பதை என்னுடைய அனுபவத்தில் நான் சொல்லுகிறேன். அந்த வழக்கில் வருவாய்த்துறை அதிகாரியிடம் வழக்கு சென்ற போது நானேவக்காலத்து போட்டு ஆஜரானேன். இதிலே இருக்கிற தர்மசங்கடம் என்னவென்ருல் நான் அண்ணு திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவன் என்பதால் நான் வாதித்த வழக்கில் எனக்கு சாதகமாக தீர்ப்பு இருந்தால் அந்த அதிகாரிக்கு ஆபத்து ஏற்பட்டுவிடும் என்கிற நிலைமை இருக்கிறது என்று அவர்கள் நினைக்கிருர்கள். அதனுல் அந்த வழக்கின் விசாரணையின்போது நான் ஆஜராகாமல் வேறு ஒரு வக்கீலை அனுப்பினேன். ஆகவே

இப்படிப்பட்ட சூழ்நிலையில் அதிகாரிகள் என்ன மனப் போக்கில் இருக்கிறார்கள் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். சிவில் கோர்ட்டு என்கிற ஒன்றை நாம் உருவாக்கிவிட்டு, உரிமையை நிர்ணயிக்கின்ற அதிகாரத்தை அதற்கு கொடுத்துவிட்டு, சொத்தின் மீது உரிமைப் பிரச்சினைகள் ஏற்படுகின்றபோது தீர்ப்பு அளிக்கின்ற பொறுப்பை ஏன் நிர்வாக அதிகாரிகளிடம் ஒப்படைக்க வேண்டும் என்பதுதான் என்னுடைய கேள்வியாகும்.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர்: லீகல் இஷ்யுவாக பேசுங்கள்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: இதுவும் லீகல் இஷ்யுதான.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர்: நிறைய மெம்பர்கள் பேசவேண்டும் சீக்கிரம் முடித்து விடுங்கள்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: இருக்கட்டுமே நான் சொல்லுவதைக் கேட்டு விட்டு மற்றவர்களைப்பேச விடுங்கள். ஆதரைஸ்டு ஆபீசராக ஒருவர் இருக்கிறபோது இருக்கின்ற நிலைமை வேறு அவர் மாற்றலாகி போய்விட்டப் பிறகு இன்னொருவர் வந்தபிறகு வேறு ஒரு சூழ்நிலை ஏற்படுகிறது என்பதை மறந்துவிடக் கூடாது. ஆகவே இது போன்ற வழக்குகளை ஆதரைஸ்டு ஆபீசர்களிடம் விடுவதை விட ஆங்காங்கே இருக்கின்ற சிவில் கோர்ட்டுகளிடம் ஒப்படைப்பது சாலச் சிறந்ததாக இருக்கும் அப்படிச்செய்தால் தீர்ப்பு நியாயமாகவும் நேர்மையாகவும் இருக்கும்.

குடியிருப்புதாரர்களில் பலர் பல இடங்களில் இந்தச் சட்டம் வருவதற்கு முன்பும், வந்த பின்பும் ஆக்கிரமித்துக் குடியிருந்து கொண்டு இருக்கிறார்கள். உதாரணத்திற்குச் சொல்ல வேண்டுமானால் இந்த மாமன்றத்திலேயே நான் முன் பே கூட எழுப்பியிருக்கிறேன். வருவாய்த்துறை அமைச்சர் அவர்களுக்கும் தெரியும். என்னுடைய தொகுதியில் உள்ள பொய்யப்புத்தூர் கிராமத்தில் இரண்டாவது

முறை சட்டத்திருத்தம் கொண்டுவருவதற்கு முன்பே அங்கேஉள்ள விவசாயிகள் தனிப்பட்ட ஒருவரின் நிலத்தை நீண்டகாலத்திற்கு குத்தகைக்குப் பேசி விடுகட்டிக் குடியிருந்து கொண்டு இருக்கிறார்கள். ஆனால் அரசாங்கத்தைச் சேர்ந்த ஓர் இலாகா அங்கே உள்ளவர்களை வெளியேற்றி விட்டு இன்னொரு வகுப்பாரை அங்கே குடியேற்ற முயற்சி செய்து கொண்டு இருக்கிறது இதை நான் இந்த மன்றத்திலேயே முன்பு சொல்லி இருக்கிறேன். இந்த அரசாங்கம் ஒரு பக்கம் குடியிருப்பதாரர்களுக்கு அந்த நிலத்தை உரிமையாக்குவதற்கு சட்டம் கொண்டு வந்திருக்கிறது. ஆனால் மறுபக்கம அரசாங்கத்தின் இலாக்கா ஒன்று அவர்களை அகற்றி விட்டு வேறு மக்களுக்கு நிலத்தை வழங்குவதற்கு ஏற்பாடு செய்து கொண்டு இருக்கிறது இந்த அரசு ஒரு பக்கம் உதவியாகவும் மறுபக்கம் அபகரிப்பதாகவும் இருக்கிறது. ஆகவே என்னுடைய தொகுதியைச் சேர்ந்த பொய்யப்புத்தூர் கிராமத்தில் உள்ள விவகாரத்தில் மாண்புமிகு வருவாய்த்துறை அமைச்சர் அவர்கள் தனிக்கவனம் செலுத்தி அந்த இலாகாவின் லேண்ட் அக்யூஸிசன் ப்ரோப்பசலை உடனடியாக ரத்து செய்ய வேண்டும் மென்று நான் இந்த நேரத்தில் கேட்டுக்கொள்கிறேன்.

Mr. Deputy speaker:- When an amending Bill is discussed our debate should be with in the scope of the Bill and extraneous matters should not be referred. இப்படி இதற்கு முன்னால் இருந்த தலைவர்கள் திரு. சிவசண்முகம் பிள்ளை, டாக்டர் கிருஷ்ணாராவ் போன்றவர்கள் சொல்லியிருக்கிறார்கள் கொஞ்சம் லேட்டிடியூட் மெம்பர்களுக்கு கொடுக்கலாம் என்று பார்த்தால் அமெண்ட்மெண்டை விட்டு விட்டு சம்பந்தமில்லாத விஷயங்களைப் பேசிக் கொண்டிருந்தால் நல்லதல்ல.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்:- நான் அமெண்ட் மெண்டுக்கு உட்பட்டுத்தான் பேசிக் கொண்டிருக்கிறேன். குடியிருப்பை நிரந்தரமாக்கும்.........................

மாண்புமிகு பேரவைத் துணைத்தலைவர்:- இதில் ரீ எண்ட்ரிக்கு பவர் கொடுத்திருக்கிறார்கள், அது சரியா இல்லையா என்று தான் பேசவேண்டுமே தவிர பழைய விவகாரத்தைக் கிளப்புவதில் பிரயோசனம் இல்லை.

திரு பெ சௌந்தரபாண்டியன்:- நான் பழைய விவகாரத்திற்குள் போகவில்லை சட்டத்திற்கு உட்பட்ட விவகாரம் தான். அதில் உள்ள சிக்கல்களைக் களைந்து நிறைவேற்றினால்தான் நல்ல சட்டமாக இருக்கும். நாளைக்கு இன்னொரு அரசாங்கம் வரலாம். அப்பொழுது மறுபரிசீலனை செய்ய வேண்டி வரலாம். அப்பொழுது சட்ட மன்றத்தில் நிறைய வழக்குரைஞர்கள் இருந்தார்களே ஏன் இது போன்ற கருத்துக்களை எடுத்து வைக்கவில்லை என்று கருதுவார்கள்.

மாண்புமிகு பேரவைத் துணைத்தலைவர்:- வருங்காலத்தில் வருபவர்கள் நம்முடைய புரொசீடிங்கைப் பார்த்து வழக்கறிஞர்கள் சபையின் மரபை மீறிபேசினார்கள் என்று நினைக்கக் கூடாது அல்லவா? அதையும் பார்க்க வேண்டும்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்:- இன்னொன்றையும் பார்க்க வேண்டும். இந்த சபையில் சட்டச்சிக்கல்களை எடுத்துரைக்க பேரவைத்தலைவர் அனுமதி தரவில்லையே என்கிற குறைபாடும் இருத்தல் கூடாது என்பதையும் நான் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆகவே இந்தச் சட்டத்தை ஆராய்ந்து நிறைவேற்றினால் தான் அது பொது மக்களுக்கு பயனுள்ளதாக இருக்கும். சட்டமும் நியாயமான முறையில், நேர்மையான முறையில் அமையும் என்று கூறி இந்தக் கருத்துக்களையும் சற்று ஆலோசித்து இந்தச்சட்டத்தை அரசாங்கம் நிறைவேற்றுமாறுக் கேட்டுக் கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன். நன்றி! வணக்கம்.

# 15

**கிருஷ்ணராயபுரம் தொகுதி மக்களுக்குப் பயன் படும் வகையில் கொடகனாறு திட்டத்தை நிறைவேற்ற வேண்டும் என்று நான்காவது ஐந்தாண்டு திட்ட வரைவு விவாதத்தில் கலந்துகொண்டு சட்டப்பேரவை யில் 22—8—69-ஆம் தேதியன்று**

**திரு. பெ. சௌந்தரபாண்டியன், எம். எல். ஏ அவர்கள் ஆற்றிய உரை**

தலைவர் அவர்களே! நான் இந்த நான்காவது ஐந் தாண்டுத்திட்ட வரைவு விவாதத்தில் கலந்துகொள்வதின் முக்கியநோக்கம் மாண்புமிகு நிதி அமைச்சர் திட்டம்பற்றிய பொது நோக்கின் முதல் பத்தியில் ''இங்கு நடைபெறும் விவாதத்தின்போது தெரிவிக்கப்படும் கருத்துக்கள் ஆய்வு செய்யப்பட்டு அவை பொருத்தமாயிருக்குமானால் இத்திட் டத்தை இறுதியாகத் தயாரிக்கும் நிலையில் அவற்றைச் சேர்த்துக் கொள்ள இயலும்'' என்று கூறியிருப்பதால் தான்.

என்னுடைய தொகுதி மக்களின் உள்ளங்களிலும், வெள்ளியணைப் பகுதி மக்களின் உள்ளங்களிலும் நீண்ட காலமாகவே கேள்விக்குறியாக இருந்து வருகிறது,குடகனா றுத்திட்டம். இந்தச் சந்தர்ப்பத்தில் அதைப்பற்றிச் சுட் டிக்காட்டுவது சாலப் பொருந்தும் என நம்புகிறேன். குடகனாறு திட்டம் பற்றி இம் மாமன்றத்தில் பல ஆண்டு காலமாகப் பேசப்பட்டு வந்திருக்கிறது என்பதை இம் மன்றத்தின் வரலாற்று ஏடுகள் நமக்கு எடுத்துக் காட்டும். காங்கிரசு ஆட்சி காலத்தில் 1961-ம் ஆண்டில் குடகனாற் றின் கடை கோடிப்பகுதியில், வள்ளிப்பட்டி என்கிற ஊருக்கு அருகில் ஒரு சிறிய அணைகட்ட ஆய்வு செய்யப்பட்டது. பொது மக்களைக் கொண்டு பாதைகள்

செப்பனிடப்பட்டன. அளவுக் கற்கள் நடப்பட்டன. மக்கள் மத்தியில் மேற்படி திட்டம் நிறைவேற்றப்படும் என்கிற நம்பிக்கை ஊட்டப்பட்டது. வெள்ளியணைப்பகுதியிலுள்ள ஆறு குளங்களுக்கு நீர் வழங்கவும், ஏழு புதிய குளங்களுக்கு தண்ணீர் நிரப்பவும் திட்டம்தீட்டப்பட்டது. 2700 ஏக்கர் நிலத்திற்கு நீர்ப்பாசன வசதியளிக்க வழி வகை ஏற்படும் எனக்கருதப்பட்டது. மூன்றாவது திட்ட வரைவில் சேர்க்கப்பட்டது. காலப் போக்கில் மக்கள் காங்கிரசு அரசை கைவிட்டு விடுவார்கள் என்பதை ஏற்கனவே தெரிந்தோ தெரியாமலோ திட்டத்தை காங்கிரசு அரசு கைவிட்டுவிட்டது 1967 பொதுத் தேர்தலில் வெற்றி பெற்று கழக அரசு பதவி ஏற்ற பிறகு முன்னால் பொதுபணித்துறை அமைச்சரும் இந்நாள் முதலமைச்சருமான கலைஞர் அவர்கள் இந்தத் திட்டத்தை மறு பரிசீலனை செய்ய வேண்டும் என்று ஆணையிட்டார்கள் நானும் குடகனாறு திட்டம்பற்றி இம்மாமன்றத்தில் பல முறை பேசியிருக்கிறேன். கேள்விகள் கேட்டிருக்கிறேன். நம்பிக்கையூட்டும் வகையில் மாண்புமிகு பொதுப்பணித் துறை அமைச்சர் அவர்கள் பதில் அளித்துள்ளார் சென்ற ஆண்டு மறைந்த மாமேதை பேரறிஞர் அண்ணா அவர்களிடம், நானும் எனது தொகுதி மக்கள் சிலரும் குடகனாறு திட்டம்பற்றி கேட்டபோது அவசியம் பரிசீலனை செய்து ஆவன செய்கிறேன் எனக்கூறினார். 15—8—69ஆம் தேதி அன்று முதலமைச்சர் அவர்களையும் பொதுப்பணித்துறை அமைச்சர் அவர்களையும் வேளாண்மைத்துறை அமைச்சர் அவர்களையும் நானும், தொகுதி மக்கள் சிலரும் சந்தித்து கேட்டபோது திட்டத்தை சிறிய அளவிலாவது நிறைவேற்றித் தருவதாக எடுத்துக்கூறினார்கள். 16—8—69ஆம் தேதி பொதுப்பணித்துறை அமைச்சர் அவர்களின் வேண்டுகோளை ஏற்று நான் அவரது அறையில் சந்தித்து கலந்து பேசினோம் அப்போது நீர்ப்பாசனத்துறை தலைமைப் பொறியாளர் குடகனாறு திட்டத்தை நிறைவேற்றுவதற்குரிய சாத்தியக் கூறுகள் இல்லை என்பதற்குக் காட்டிய காரணங்கள் மூன்று. அவற்றில் முதலாவது இந்தத்

திட்டத்திளுல் அரசுக்கு இலாபம் இல்லை என்பது. இந்த சந்தர்ப்பத்தில் நிதி அமைச்சர் அவர்கள் தமது உரையில் குறிப்பிட்ட கருத்தினை எடுத்துக் காட்ட விரும்புகிறேன். சமுதாயத்திற்கு ஒரு திட்டத்தால் லாபம் இருக்கிறதா என்கிற முறையில் அணுக வேண்டுமேயல்லாது அரசுக்கு என்ன இலாபம் என்று பார்க்கக் கூடாது, என்று ஆணித் தரமாக எடுத்துப் பேசினூர் பொறியாளர்கள் வகுக்கும் திட்டம், பொறியாளர்கள் தீட்டும் திட்டம். பொறியாளர் கள் காட்டும் திட்டம் அரசுக்கு லாப நோக்குடன் இருக்க வேண்டும் என்று கூறுவது கூடாது. திட்டத்தால் மக்க ளுக்குப்பயன் உள்ளதா, சமுதாயம் நன்மை அடையுமா என்பதை ஆராய வேண்டும் என்று விரும்பி வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

நான்காவது திட்டம் பற்றிய பொதுநோக்கு உரையில் இரண்டாவது பத்தியில் மாண்புமிகு நிதி அமைச்சர் அவர்கள் "நாகரீகம் அடைந்த சமுதாயத்தில் குடிமக்க ளுக்கு குடிநீர்கூட கிடைக்காததொரு சூழல் ஏற்படு வதை பொறுத்துக் கொள்வது இயலாத காரியம் என்று முடிவு செய்துள்ளோம்" என்று கூறியிருக்கிறூர் நான் எந்தப்பகுதி மக்களுக்காக வாதாடுகிறேனே அந்தப்பகுதி தண்ணீர் இல்லாத பகுதி, நீர்வளம் குறைந்த பகுதி, நில வளம் நிறைந்த பகுதி, குடிக்கத் தண்ணீரின்றி மக்கள் கண்ணீர் வடிக்கும் நிலையுள்ள பகுதி, குளிக்கக்கூட தண் ணிரில்லாது மக்கள் அவதிப்படும் பகுதி, குடகனூறு திட் டத்தை நிறைவேற்றுவதால் இந்தப் பிரச்னைகள் தீர்ந்து விடும் என்பதால் மனிதாபிமானத்தோடு அணுகி அப் பகுதி மக்களின் கோரிக்கையை நிறைவேற்ற குடகனூறு திட்டத்தை விரைவில் மறுபரிசீலனை செய்து நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்துக் கொள்ள வேண்டிய பொறுப்பும், கடமையும் இந்த அரசுக்கு இருக்கிறது என் பதைப் பணிவன்போடு தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் மாண்புமிகு நிதி அமைச்சர் கொடுத்துள்ள பொது நோக்கு அறிக்கையில் எட்டாவது பத்தியில் வரும்

காலத்தைப் பற்றி எண்ணுகையில் ''புள்ளி விவரங்களைத் தொகுத்து அதன் அடிப்படையிலே கணக்குப் போடு கிறார்கள். இத்தகைய கணக்கின் மூலம் நாட்டின் வளர்ச் சிக்கு வழிகோல முடியாது'' என்று குறிப்பிட்டிருக்கிறார். பொறியாளர்கள் காட்டுகின்ற புள்ளி விபரம் குடகனாற்றில் போதுமான தண்ணீர் வராது. தண்ணீர் வருகின்ற அள வுக்கு பெய்யும் மழை அளவு குறைவு, நீர்வரத்து அதிகம் இல்லை என்பதாகும். வானம் எவ்வளவு மழை பெய்விக் கிறது என்பது பொறியாளர்களுக்கு எப்படித் தெரியும்? இத்தனை கன அடி தண்ணீர் தான் கிடைக்கும் என்கிற கணக்கு எப்படிப் போடுகிறார்கள்? பொறியாளர்கள் என்ன வருணபகவானின் தோழர்களா? அல்லது மேகக் கூட்டங்களின் கூட்டாளிகளா? மேகம் எப்போது வேண்டுமானாலும் கூடும். திடீர் திடீரென மழை பொழி யும். எதிர்பாராமல் வெள்ளம் வரும். குடகனாற்றில் போது மான தண்ணீர் வராது என்று எந்தக் கணக்கை வைத்து கொண்டு சொல்லுகிறார்கள்? மழை பொழிவது இயற்கை யின் சக்திக்கு உட்பட்டு அல்லவா நடக்கிறது. நான் சென்ற மே மாதம் கோடைப் பருவகாலத்தில் அமராவதி ஆற்றுப்பகுதிப் பக்கம் போயிருந்தேன். அமராவதி ஆற்றில் தண்ணீர் நிறைய வந்தது கோடை காலத்தில் தண்ணீர் எங்கிருந்து இவ்வளவு வருகிறது என்று கேட் டேன். குடகனாற்றிலிருந்து வந்து விழும் தண்ணீர் தான் அது என்று அப்பகுதி மக்கள் கூறினர். ஆகவே தான் சொல்லுகிறேன் குடகனாற்றின் கடைகோடிப் பகுதியில் சிறிய அணை அமைத்து ஆங்காங்குள்ள குளங்களில் நீர் நிரப்பிவைத்தால் விவசாயம் வளர்ச்சியடைய வாய்ப்பாக அமையும், குடிநீர்ப்பிரச்சினையும் தீரும் கேணிகளில் ஊற் றும் ஊறும் என்பதை மாண்புமிகு நிதி அமைச்சர் அவர் களுக்கும், பொதுப் பணித்துறை அமைச்சர் அவர்களுக் கும் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். மேலும் நிதி அமைச்சர் அவர்கள் திட்ட பொது நோக்கின் இறுதிப் பத்தியில் ''வருங்காலத்திற்காகத் துணிவுடனும், உறுதியுடனும் திட்டமிட வேண்டும் என்னும் கொள்கையையே அரசு

ஆதரிக்கிறது'' என்பதையும் எடுத்துக் காட்டியுள்ளார். வருங்கால சமுதாயத்தின் நல்வாழ்வுக்காகவும் விவசாய, பொருளாதார மேம்பாட்டிற்காகவும் குடகனாறு திட்டத்தை நிறைவேற்ற விரைவில் ஆவன செய்ய வேண்டும் என தொகுதி மக்களின் சார்பாகவும், கோடைகாலத்தில் குடிக்கக்கூட தண்ணீர் கிடைக்கவில்லையே என்று வெறும் குடத்தைப் பார்த்து கண்ணீர் வடிக்கின்ற பெண்களின் சார்பாகவும், கேட்டுக்கொள்கிறேன். துணிவோடு திட்டத்தை அணுகி உறுதியுடன் செயல்பட வேண்டும் என பணிவோடு கேட்டு எனக்கும் பேச வாய்ப்பளித்த பேரவைத் தலைவருக்கு நன்றி செலுத்தி விடை பெறுகிறேன்.

வணக்கம்.



# 16

## தமிழ்நாடு 1975-ஆம் ஆண்டு இந்து சமய அறக்கட்டளைகள் திருத்த சட்ட முன் வடிவாகிய தனியார் மசோதாவை சட்டப் பேரவையில் அறிமுகப்படுத்தி 8-11-75 ஆம் தேதியன்று

## திரு. பெ. சௌந்தரபாண்டியன், எம்.எல்.ஏ., அவர்கள் ஆற்றிய உரை

(ஆ) தமிழ்நாடு 1975 ஆம் ஆண்டு இந்து சமய அறக்கட்டளைகள் (திருத்த) சட்டமுன் வடிவு (சட்டமன்றப் பேரவை சட்ட முன்வடிவு எண் 2/75).

* திரு. பெ. சௌந்தரபாண்டியன் : தலைவரவர்களே, "தமிழ்நாடு 1975 ஆம் ஆண்டு இந்து சமய அறக்கட்டளைகள் (திருத்த) சட்டமுன்வடிவை * (சட்டமன்றப் பேரவை சட்ட முன்வடிவு எண் 2/75) ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட வேண்டும்" என்று நான் முன்மொழிகிறேன்.

திரு. செ. அரங்கநாயகம் : நான் அதை வழிமொழிகிறேன்.

திரு. பெ சௌந்தரபாண்டியன் : தலைவரவர்களே, இந்த மசோதாவை இந்த மாமன்றத்தில் அறிமுகம் செய்வதற்கும், ஆய்வுக்கு எடுத்துக்கொள்வதற்கும் வாய்ப்பளித்ததற்காக உள்ளபடியே நான் மெத்த மகிழ்ச்சி அடைகிறேன். இந்த மசோதா கொண்டு வருவதன் முக்கிய நோக்கம், நிர்வாகத் துறையில் இருந்து நீதி பிரிக்கப்பட வேண்டும் என்பதுதான்.

இன்றைக்கு நிர்வாகத் துறையில் நீதி செயல்படுகிறது. அந்தக் காட்சியை நாம் அறநிலையத் துறையில் பார்க்கி

*1975 நவம்பர் 4ஆம் தேதிய தமிழ்நாடு அரசிதழ் கெஜட்டில் வெளியிடப்பட்டுள்ளது.

றோம். அவர்களே வழக்குத் தொடுக்கிறார்கள், அவர்களே அவர்களே நீதிபதிகளாக அமர்கிறார்கள், அவர்களே குறுக்கு விசாரணை செய்கிறார்கள், அவர்களே சாட்சியங்களைத் தயாரிக்கிறார்கள், அவர்களே டாக்குமெண்ட்டுகளை உருவாக்குகிறார்கள். ஆகவே அவர்களுடைய வழக்குக்கு அவர்களே நீதிபதிகளாகவும், அவர்களே சாட்சியாகவும், அவர்களே டாக்குமெண்ட் தயாரிக்கும் அதிகாரிகளாகவும் இருக்கிற காரணத்தால், நிர்வாகத்தில் இருந்து நீதி பிரிக்கப்பட வேண்டுமென்று நான் விரும்பி வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

உலகத்திலே நிலவிவரும் நீதிக் கொள்கை, "No man can be a Judge of his own Case" என்பது தான். ஆனால் அற நிலையத் துறையைப் பொறுத்தவரையிலும் அவர்களுடைய வழக்குக்கு அவர்களே நீதிபதிகளாக இருக்கும் காட்சியை நாம் பார்க்கிறோம். ஆகவேதான் நிர்வாகத் துறையிலிருந்து நீதி பிரிக்கப்பட வேண்டுமென்று இந்தச் சட்டத்தை நான் இந்த அவையிலே கொண்டுவருவதற்கும், அதைக் குறித்து விரிவாக எடுத்துப் பேசுவதற்கும் முன் வந்து இருக்கிறேன்.

இந்தச் சட்டத்தை அலசிப் பார்ப்பதற்கு முன்பு இந்தச் சட்டம் எப்போது உருவாக்கப்பட்டது, எதற்காக உருவாக்கப்பட்டது, என்பதை எல்லாம் நான் முன்னாலே எடுத்து வைக்க விரும்புகிறேன்.

இந்து சமய அற நிலையச் சட்டம், தமிழ் நாட்டிலே உருவான போது கோவில்களின் சொத்துக்கள் பாதுகாக்கப்பட வேண்டும் என்பதற்காகத்தான் உருவானது. பிறகு, நிர்வாகத்தைப் பார்ப்பதற்காக அது விரிவாக்கப்பட்டது. இடையிலேதான் நீதியைப் புகுத்த வேண்டும் என்பதற்காக இந்தச் சட்டத்தில் நீதி முறை இணைக்கப்பட்டுள்ளது. ஆகவேதான் நிர்வாகத் துறையையும் நீதித், துறையையும் இணைத்து இருப்பது சரியல்ல என்ற அடிப்

படையில் நான் இதைக் கொண்டுவந்து இருக்கிறேன். அதற்குப் பல சான்றுகள் இங்கே வைக்க விரும்புகிறேன்.

நம்முடைய இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் ஆர்ட்டிகிள் 50 இல் தெளிவாகக் குறிப்பிட்டு இருக்கிறார்கள், " The State shall take steps to separate the judiciary from the executive in the public services of the State" என்று.

ஆகவே, நம்முடைய அரசியல் அமைப்புச் சட்டத்தில் தெளிவாக்கப்பட்டிருப்பது போல், நிர்வாகத் துறையில் இருந்து ரெவின்யூத் துறையாக இருந்தாலும், அல்லது அற நிலையத் துறையாக இருந்தாலும், வேறு எந்தத் துறையாக இருந்தாலும் — நீதி பிரிக்கப்பட வேண்டும், நிர்வாகம் தனியாக இயங்க வேண்டும், நீதித் துறை தனியாக இயங்க வேண்டும். அப்போதுதான் நியாயமான உரிமைகளைப் பொதுமக்கள் பெறுவதற்கும், நியாயமான முறையில் கடமையை நிர்வாகிகள் ஆற்றுவதற்கும் வசதியாக இருக்கும்.

ஆகவே, நம்முடைய அறநிலையத் துறையைப் பொறுத்த வரையிலும், நிர்வாகமும், நீதியும் இணைந்திருப்பதைப் பொதுவாக யாரும் வரவேற்கமாட்டார்கள் என்று கருதுகிறேன். நம்முடைய அறநிலையத் துறை அமைச்சர் அவர்கள் இதைக் கூர்ந்து கேட்டு, ஆழ்ந்து சிந்தித்து, வரும் காலத்தில் அதை எப்படி மாற்றியமைக்கலாம். அல்லது எப்படித் திருத்தி அமைக்கலாம் என்பதற்கு நல்ல பரிகாரம் காண வேண்டும் என்பதற்காகத்தான் இந்தச் சட்டத்தை நான் இந்த அவையிலே அறிமுகம் செய்து இருக்கிறேன்.

இந்தச் சட்டத்தைப்பற்றி நான் விரிவாகவும் விளக்கமாகவும் ஆதாரத்தோடு சுட்டிக்காட்ட முற்படுவதோடு, ஒருசில கருத்துக்களையும் இந்த மன்றத்தின் கவனத்திற்கும், மாண்புமிகு அமைச்சர் அவர்களின் கவனத்திற்கும், மாண்புமிகு முதலமைச்சர் அவர்களின் கவனத்திற்கும், இந்த அரசின் கவனத்திற்கும் கொண்டுவர விரும்புகிறேன்.

இந்தச் சட்டம் எதிர்க்கட்சி உறுப்பினரால் கொண்டு வரப்படுகிற சட்டம் ஆயிற்றே என்று கருதாமல், இதில் உள்ள நியாயமான கருத்தை, மக்களின் நியாயமான கோரிக்கை இது என்பதை அரசாங்கம் மனதில் கொண்டு, அரசாங்கம் இந்தச் சட்டத்தைப் புறக்கணிக்காது ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதற்காகத்தான் சிலவற்றைநான் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன்.

1938 ஆம் ஆண்டில் இந்த மாமன்றத்தில் முதலமைச்சராக இருந்த ராஜாஜி அவர்கள் காலத்தில், அன்றையக் காங்கிரஸ் ஆட்சிக்கு ஏறத்தாழ 160 உறுப்பினர்களுக்கு மேல் இருந்தார்கள் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது — அன்று எதிர்க்கட்சி வரிசையில் இருந்த திவான் பகதூர் எம். சி. ராஜா அவர்கள் 'The Removal of Civil Disabilities Act, 1938', என்ற ஒரு சட்டத்தை இந்த மாமன்றத்தில் அறிமுகம் செய்தார்கள். அந்த நேரத்தில் அந்தச் சட்டம் விரிவாக ஆய்வு செய்யப்பட்டது. திரு. ராஜாஜி அவர்கள் முதலமைச்சராக இருந்த காரணத்தால் சொன்னார்கள், "எம். சி. ராஜா அவர்கள் கொண்டு வந்தசட்டத்தைநான்பாராட்டுகிறேன். அவர்கள்கொண்டு வந்த நோக்கத்தின் உள்கருத்தை உள்ளபடியே நான் வரவேற்கிறேன், நீங்கள் எதிர்க்கட்சி வரிசையில் இருந்தாலும் நியாயமான சட்டத்தை, சமுதாய சீர்திருத்த சட்டத்தை, சமுதாய மக்களுக்காக, நாட்டின் முன்னேற்றத்திற்காக, நல்ல எண்ணத்தோடு கொண்டு வந்திருக்கிற சட்டத்தை நான் பாராட்டுகிறேன்" என்று கூறியதோடு அல்லாமல், காங்கிரஸ் கட்சியின் 160 சட்டமன்ற உறுப்பினர்களின் வாக்கு பலத்தை வைத்துக் கொண்டு அந்தச் சட்டத்தைத் தோற்கடிக்காமல் அந்த சட்டத்தின் நியாயத்தை உணர்ந்து, அதைச் சட்டமாக்கினார்கள். அதை நான் மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சரின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

[ முற்பகல் 10-30 ]

மரியாதைக்குரிய முதலமைச்சர் அவர்களும், இது நியாயமான சட்டமா என்பதை நான் எடுத்து வைக்கின்ற

வாதங்களைக் கேட்டு, இரவில் உறங்குகின்ற நேரத்தில் ஒரு நிமிட நேரம் மனதில் எண்ணிப் பார்த்து, இதன் நியாயத்தை உணர்ந்து, 1938 ஆம் ஆண்டு ஒரு எதிர்க் கட்சி உறுப்பினரால் கொண்டு வரப்பட்ட சட்டத்தை ராஜாஜி அவர்கள் எப்படி ஏற்றுக்கொண்டாரோ, அதே போல் இன்று முதலமைச்சராக இருக்கின்ற மாண்புமிகு கலைஞர் கருணாநிதி அவர்களும் இதை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதற்காகத்தான் நான் என்னுடைய முன்னுரையிலே இதை கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

இன்றைய சூழ்நிலையில், நிர்வாகத் துறையில் இருக்கிறவர்கள் நீதிசெலுத்துவது எப்படி நியாயமாகும் என்பது தான் இந்தச் சட்டம் கொண்டு வருவதன் முக்கிய நோக்கம். இன்று அறநிலையத் துறை என்ன செய்கிறது என்பதை நாம் முதலில் எண்ணிப் பார்க்க வேண்டும். அறநிலையத்துறையினர் ஒரு கோவிலையோ அல்லது வேறு எந்தச் சொத்தையோ எடுத்துக் கொள்ள வேண்டு மென்றால், தாங்களாகவே முன்வந்து வழக்குத் தொடு கின்றார்கள். அந்தச் சொத்துக்கு யார் உரிமையாளர் களாக இருக்கிறார்களோ, அவர்களை மனுப்போடச் சொல்கிறார்கள். மனுப்போட்ட பிறகு தன்னுடைய துறையில இருக்கின்ற அதிகாரியை அனுப்பி அதற்குரிய தடயங்களையும், இன்ன பிறவிவரங்களையும் விசாரித்து, எழுதித் தாக்கல் செய்யச் சொல்லுகிறார்கள்.

அப்படித் தொடுக்கப்பட்ட வழக்கினை நிர்வாக அதிகாரியே நீதிபதியாக அமர்ந்து, அவர்களே வழக்கினை விசாரிக்கின்ற நிலைமையும், சாட்சியங்களை குறுக்கு விசாரணை செய்கின்ற தன்மையும், தம்முடைய துறையைச் சேர்ந்த ஒருவரால் தாக்கல் செய்யப்படுகின்ற டாக்குமெண்டைப் பார்த்து, பரிசீலனை செய்து தமது முடிவினை அறிவிக்கும் சூழ்நிலையையும் இன்று நாம் ஏற்படுத்திக் கொண்டிருக்கிறோம். ஆகவே, தமது துறை யின் வழக்குக்கு தாமே நீதிபதியாக இருப்பது எப்படிப்

பொருத்தமாகும் என்பது தான் என்னுடைய கேள்வியாகும்.

அகில உலகத்தின் வரலாற்றைப் புரட்டிப் பார்ப்போமேயானால், அகில உலகத்தின் நிர்வாகத் துறையை அலசிப் பார்ப்போமேயானால், அகில உலகத்திலும் நிலவுகின்ற ஒவ்வொரு நீதித் துறையையும் பரிசீலனை செய்து பார்ப்போமேயானால் நமது இந்திய நாட்டைத் தவிர வேறு எந்த நாட்டிலும் நிர்வாகத் துறையும், நீதித் துறையும் இணைந்திருப்பதாக தடயங்களைக் காணோம். ஆகவேதான், நிர்வாகத்துறையிலிருந்து நீதித் துறையைப் பிரிக்க வேண்டும் என்பது என்னுடைய ஆணித்தரமான கோரிக்கையாகும் இதில் எவ்வளவு இடர்பாடுகள், எவ்வளவு முறைகேடுகள், எவ்வளவு குறைபாடுகள், நியாயத்தைப் புறக்கணிக்கின்ற தன்மைகள் இருக்கின்றன என்பதற்குப் பின்னாலே நான் பல ஆதாரங்களை இந்த மாமன்றத்திலே சுட்டிக்காட்டவிரும்புகிறேன். ஆகவே, நிர்வாகத் துறையிலிருந்து நீதியைப் பிரிக்க வேண்டுமென்பதுதான் இந்தச்சட்டத்தின் முக்கிய நோக்கமாக நான் கொண்டு வந்திருக்கின்றேன் என்று முதலிலே தெரிவித்துக் கொள்ளக் கடமைப் பட்டிருக்கின்றேன்.

இந்தச்சட்டத்தை அலசி ஆராயுமுன், இந்தச் சட்டம் எப்போது இயற்றப்பட்டது, ஏன் இயற்றப்பட்டது, எதற்காக இயற்றப்பட்டது என்கின்ற வரலாற்றை இந்த மாமன்றம் தெரிந்து கொண்டால்தான், இந்தச் சட்டம் உள்ளபடியே குறைபாடு உள்ளதுதானா, இந்தச் சட்டத்தை மேலும் திருத்த வேண்டியது அவசியம்தானா என்பதை நாம் அத்தனை பேரும் புரிந்து கொள்ள வாய்ப்பாக இருக்கும். ஆகவே இந்த மாமன்றத்தில் இருக்கின்ற அத்தனை உறுப்பினர்களும் 1922 ஆம் ஆண்டுக்கு முன்பிருந்த நிலைமை என்ன, அன்றைக்கு அறநிலையங்கள் எப்படி இருந்தன, எப்படிப் பாதுகாக்கப்

பட்டன என்பதை எல்லாம் புரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காக சிலவற்றை நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

தமிழ்நாட்டில் சங்க காலத்தில் ஏராளமான கோவில்கள் உருவாக்கப்பட்டன. நமது தமிழ்ச் சமுதாய மக்கள் தாங்கள் வழிபடும் தெய்வங்களுக்கு கோவில்கள் எடுத்து, அவற்றின் பராமரிப்புச் செலவுக்காக சொத்துக்களையும் இன்ன பிற உடைமைகளையும் அவற்றிற்கு உரிமையாக்கினார்கள் என்பதை நாம் நன்ருக அறிவோம்.

இப்படி உருவாக்கப்பட்ட கோவில்கள் வெள்ளைக்காரன் ஆட்சிக் காலத்திலே எந்த அளவுக்குப் பராமரிக்கப்பட்டன. அதில் என்னென்ன குறைபாடுகள் இருந்தன. கோவில்கள் புறக்கணிக்கப்பட்டு பாதுகாக்கப்படாமல் அன்ருட நிகழ்ச்சிகள் நடைபெருமல் தடையாக இருந்தன என்பதைக் கண்ட பொதுமக்கள், இதற்கு என்று ஒரு பாதுகாப்பு ஏற்பட வேண்டுமென்று பல கோரிக்கைகளை எழுப்பினுர்கள். பொதுமக்களின் நல்லெண்ணத்தையும், நல்ல நோக்கத்தையும் நிறைவேற்றுவதற்காக வெள்ளைக்காரன் ஆட்சிக் காலத்தில், இந்தக் கோவில்களின் சொத்துக்களை பராமரிக்க ஒரு தனியான அமைப்பையும், நிர்வாக அமைப்பையும் உருவாக்க முற்பட்டார்கள்.

வெள்ளையன் ஆட்சிக் காலத்தில் பனகல் அரசர், முதலமைச்சரானுர். அவர் முதலமைச்சர் ஆன பிறகு தான் கோவில்களின் சொத்து பற்றி ஆய்வு செய்வதற்கு முற்பட்டார். ஏனென்ருல், கோவில்களுக்காக எழுதி வைக்கப்பட்ட சொத்துக்கள், முறைப்படி அந்தக்கோவில்களின் பராமரிப்புக்காகவும், அபிவிருத்திக்காகவும், அன்ருடகாரியங்களைச் செய்வதற்காகவும் பயன்படுத்தப்படாமல் பல வழிகளிலே சொத்துக்கள் மோசடி செய்யப்பட்டு வேறு பல செலவுகளுக்கு பயன்படுத்தப்பட்டிருந்த காரணத்தால், அதை ஒழுங்கு படுத்துவதற்காக 1922

ஆம் ஆண்டு அன்றைய முதலமைச்சராக இருந்த பனகல் அரசர் அவர்கள் ஒரு ஆய்வுக் குழுவினை ஏற்படுத்தினார்.
அந்த ஆய்வுக் குழுவினர் கோவில்களின் சொத்துக்

களை எப்படிப் பராமரிப்பது, அந்தப்பொறுப்பை யாரிடம் ஒப்படைப்பது, யாரிடத்தில் ஒப்படைத்தால் கோவில் நிர்வாகம் சரியாக இயங்கும், சொத்துக்கள் மோசடி செய்யப்படாமல் பாதுகாக்கப்படும் என்பதையெல்லாம் ஆய்ந்து, விரிவான ஒரு அறிக்கையை அளித்தனர்.

அந்தஆய்வு அறிக்கையின் பிரகாரம் சொத்துக்களைப் பாதுகாப்பதற்காக எண்டோமெண்டு போர்டு என்று அப்போது உருவாக்கப்பட்டது. 1922 ஆம் ஆண்டு நியமிக்கப்பட்ட அந்தக் குழு 1923க்குள் அறிக்கையை அளித்திருக்கிறார்கள். 1923ஆம் ஆண்டு தான் முறை யான சட்டம்உருவாக்கப்பட்டது அன்றைய முதலமைச்ச ராக இருந்த பனகல் அரசரால்.

அதற்குப் பிறகு அந்தச் சட்டத்தில் இருக்கின்ற குறை பாடுகளை, கோவில் சொத்துக்களை நிர்வாகம் செய்வதில் இருக்கின்ற தவறுகளை முறைப்படுத்துவதற்காக 1927ஆம் ஆண்டு வரை அவ்வப்போது திருத்தங்களைச் செய்து, இறுதி வடிவமாக 1927 - ஆம் ஆண்டு இன்னொரு சட்டத்தை முறைப்படி தந்திருக்கிறார்கள். இந்தச் சட்டம் கொண்டு வந்ததன் நோக்கம் மூலச் சட்டம் இயற்றப் பட்ட பிறகும், முறையாக கோவில் சொத்துக்கள் பராமரிக் கப்படவில்லை, பல தில்லுமுல்லுகள் நடந்திருக்கின்றன, இவற்றை எந்த வகையிலே மாற்றியமைக்கலாம் என்பதற் காகத் தான் அடுத்தடுத்து பல திருத்தங்களை கொண்டு வந்துள்ளார்கள். அந்தச் சட்டத்திலும் குறைபாடுகள் இருந்தன. அதன் நோக்கம் நிறைவேற்றப்படாமல் தட்டிக் கழிக்கப்பட்டன.

இதைப் பார்த்த பிறகுதான் 1941 - ஆம் ஆண்டு மீண்டும் அந்தச் சட்டத்தை மறுபரிசீலனை செய்யு

வேண்டுமென்ற நோக்கத்தோடு, இந்த அவையின் செயலாளராக பணியாற்றியவரும், நமது சட்டப் பேரவையின் விதிமுறைகளை வகுத்துக் கொடுத்தவருமான திரு. ஆர். வி. கிருஷ்ண ஐயரை வைத்து ஒரு தனிநபர் ஆணைக் குழுவை அரசாங்கம் நியமித்தது. திரு. ஆர். வி. கிருஷ்ண ஐயர் தமது ஆய்வை விரிவாக நடத்தினர். எந்தெந்த இடத்தில் கோளாறு இருக்கிறது, எந்தெந்த விதிமுறை திருத்தப்பட வேண்டும், எந்தெந்த விதியை ஒழுங்குபடுத்தினல் அறநிலையத் துறை செம்மைப்படும், எந்தெந்த தவறை திருத்தியமைத்தால் அறநிலையத் துறையின் சொத்துக்கள் பாதுகாக்கப்படும், எந்தெந்த விதிமுறையை அகற்றினல் அறநிலையச் சட்டம் முழுமை பெற்ற வடிவமாக இருக்கும் என்பதையெல்லாம் பரிசீலனை செய்து ஒரு அறிக்கையைச் சமர்ப்பித்தார். அந்த அறிக்கையையும் அரசாங்கம் ஏற்றுக் கொண்டிருக்கிறது.

அதற்குப் பிறகு அந்த அறிக்கையை தீவிரமாகப் பரிசீலனை செய்வதற்காக 1943 - ஆம் ஆண்டு நீதிபதி வெங்கட்ரமண ராவ் அவர்களையும், ஆர். வி. கிருஷ்ண ஐயர் அவர்களையும், ராஜா சர் முத்தையா செட்டியார் அவர்களையும் கொண்ட மூவர் குழு ஒன்றினை அரசாங்கம் நியமித்தது. இந்த 3 பேர்களும் அறநிலையச் சட்டத்தில் செய்யப்பட்ட பல திருத்தங்களை ஆய்வு செய்தார்கள். அன்றைய சூழ்நிலைக்கேற்ப அப்போதுள்ள பல குறைபாடுகளை ஆராய்ந்து ஒவ்வொரு விதியாக பல மாற்றங்களை ஏற்படுத்தி தங்கள் அறிக்கையை 1946 ஆம் ஆண்டு அரசாங்கத்திற்கு சமர்ப்பித்தார்கள்.

ஆக, 1922 ஆம் ஆண்டிலிருந்து 1946 ஆம் ஆண்டு வரை செய்யப்பட்டுள்ள திருத்தங்களுடன் மாற்றப்பட்ட விதிமுறைகளுடன்தான் 1959 ஆம் ஆண்டு இந்து அறநிலையச் சட்டம் நிறைவேற்றப்பட்டது என்பதை நாம் முதலில் மனதில் கொள்ள வேண்டும்.

இந்த மாமன்றத்தை நான் சிந்திக்கச் சொல்வது, 1922 ஆம் ஆண்டு முதல் 1946 ஆம் ஆண்டு வரை

அலசிப் பார்த்து பல திருத்தங்களை செய்து 1959 ஆம் ஆண்டு கொண்டு வந்த சட்டத்தை நாம் இன்றைக்கு ஏற்றுக்கொண்டிருக்கிறோம்.

1947 ஆம் ஆண்டு, இந்தியா சுதந்திரம் அடைந்தது. சமதர்ம சமுதாயத்தை அமைப்பதற்கு நமது தலைவர்கள் பாடுபட்டார்கள். புதிய அரசியல் சட்டத்தை உருவாக்கு வதற்கு முற்பட்டார்கள். ஆகவே, புதிய அரசியல் சட்டத்தை உருவாக்கியதற்குப் பிறகு–1922 ஆம் ஆண்டு முதல் 1946 ஆம் ஆண்டு வரை சில குறைபாடுகளுடன் செய்யப்பட்ட திருத்த சட்டத்தை நாம் எந்த வகையில் பின்பற்ற முடியும் என்பதை முதலில் எண்ணிப் பார்க்க வேண்டும். அதற்குப் பிறகு நாம் ஆய்வு செய்தோமா என்றால் இல்லவே இல்லை.

இந்தச் சட்டத்தை ஆய்வு செய்த திரு. கிருஷ்ண ஐயர் அவர்களே, தன்னாலே ஆய்வு செய்யப்பட்ட சட்டம் திருத்தப்பட வேண்டும் — பல ஆண்டுகளுக்கு முன்னால் செய்யப்பட்ட சட்டம்—பல குறைபாடுகள் உடையது—ஆகவே மீண்டும் மறுபரிசீலனை செய்யப்பட்டு இச்சட்டம் குறைபாடுகளற்றதாக. முழுமையானதாகச் செய்யப்பட வேண்டுமென்று தம் அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

நமது மரியாதைக்குஉரிய பேரவைத் தலைவரிடம் 29—8—75 அன்று திரு. ஆர். வி. கிருஷ்ண ஐயரின் அறிக்கை எனக்குக் கொடுக்க வேண்டும் என்ற ஒரு மனுவைக் கொடுத்தேன். இது நாள் வரை அந்த அறிக்கை எனக்குக் கிடைக்க வில்லை. அந்த அறிக்கை இருக்கிறதா, இல்லையா என்றே கூட தெரிய வில்லை—பதில் கிடைக்க வில்லை என்பதை மெத்த வருத்தத்துடன் கூற விரும்பு கிறேன். அந்த அறிக்கை எனக்குக் கிடைத்திருக்குமானால் இன்னும் பல குறைபாடுகளை இந்தச் சட்டத்தில் நான் எடுத்து வைத்திருக்க முடியும். அந்த அறிக்கையை எனக்குத் தராவிட்டாலும் பரவாயில்லை, இருக்கிறதா,

இல்லையா என்ற பதிலைக்கூட அனுப்ப வில்லை என்று எண்ணும் போது மெத்த வருத்தப்படுகிறேன். ஆகவே குறைபாடு உடைய ஒரு சட்டத்தை இந்த அரசாங்கம் ஏற்றுக் கொள்கிறது என்றால் என்ன நியாயம் என்பதை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும்.

அன்றைக்கு அறநிலையத்துறை அமைச்சராக இருந்த மரியாதைக்குரியதிரு பக்தவத்சலம்அவர்கள் பேசும்போது கூறிய சில கருத்துக்களை நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். அதாவது 1959 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 8 ஆம் தேதி இந்து அறநிலையச் சட்டத்தினை இந்த மாமன்றம் ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட நேரத்தில் பல உறுப்பினர்கள் பல கருத்துக்களை எடுத்து வைத்திருக்கிறார்கள். அப்போது பேசும் போது நிர்வாகத் துறையினரிடமிருந்து நீதி பிரிக்கப்பட வேண்டுமென்ற கருத்தினை பல எதிர்க்கட்சித்தலைவர்களும் உறுப்பினர்களும் இங்கே வலியுறுத்திப் பேசி இருக்கிறார்கள். அதை எல்லாம் நான் இங்கே சுட்டிக்காட்டுவது சாலப் பொருத்தமானதாக இருக்குமென்று நம்புகிறேன்.

1959 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 8ஆம் தேதி இந்த மசோதாவின் மீது பேசிய திரு பக்தவத்சலம் என்ன சொன்னார்கள் என்றால்—

"மேலும் கனம் அங்கத்தினர் அவர்கள் கருதுவது போல இந்தச்சட்டம் இப்போது புதிதாகக் கொண்டுவரப் பட்ட சட்டம் அல்ல. 30 ஆண்டுகளுக்கு முன்பாகவே இந்த சட்டம் கொண்டுவரப்பட்டது. இந்த மாதிரியான ஸ்தாபனங்கள் எல்லாம் சரியான முறையில் நடைபெற வேண்டும் என்ற நோக்கத்தோடுதான் இந்தச் சட்டம் கொண்வரப் பட்டது. அத்தோடு அவ்வப்போது ஏற்படுகின்ற அனுபவங்களை வைத்துக்கொண்டு பல மாறுதல்கள் சட்டத்தில் செய்யப்பட்டது. கடைசியாக 1951 இல்திருத்த மசோதாவைக் கொண்டு வந்து நிறைவேற்றப்பட்டது. அப்போது தான் அரசாங்கத்தின்கீழ் இது தனி இலாகா

வாக இயங்கி வந்தது. அதன் பின்னர் ஏற்பட்ட பல அனுபவங்களின் காரணமாக சட்டத்தில் பல மாறுதல்கள் செய்யப்பட்டு இந்த திருத்த மசோதா இப்போது சபைக்கு சமர்ப்பிக்கப்படுகிறது.'' என்றும், மேலும்,

'' இந்த மன்றத்தில் நீண்ட காலமாக காரியதரிசியாக இருந்த திருவாளர் ஆர். வி. கிருஷ்ணஐயரை ஸ்பெஷல் ஆபீசராகப் போட்டு இது சம்பந்தமாக ஆலோசனைகள் கேட்டோம். அவர் சட்டத்தை ஒவ்வொரு பிரிவாக நன்றாக பரிசீலித்து அறிக்கை சமர்ப்பித்தார். அந்த அறிக்கையில் இதை ஒரு தனி இலாகாவாக அமைப்பதுதான் சரி; 1951-க்கு முன்பு இருந்த நிலைமை சரியானதல்ல என்று அவர் சொன்னார். மேலும், முன்பு ஒரு கமிட்டி கூட இது சம்பந்தமாக அமைக்கப்பட்டது. சென்னை உயர்நீதிமன்ற நீதிபதியாகவும் மைசூர் உயர் நீதிமன்றத்தில் பிரதம நீதிபதியாகவும் இருந்திருக்கும் திருவாளர் வெங்கட்டரமணராவ் அவர்களை தலைவராகக் கொண்ட கமிட்டி அது. மேலும் சென்னை உயர்நீதிமன்றத்திற்கும் இது அனுப்பப்பட்டது. சென்னை உயர்நீதி மன்றத்தாரும் இதுஒரு இலாக்காவாக இருந்தால் நன்றாக நடக்கும் என்ற அபிப்பிராயத்தைத் தெரிவித்தார்கள். இந்த அபிப்பிராயத்தை எல்லாம் கேட்டு அதன்படிதான 1951 இல் இது இலாகாவாக அமைக்கப்பட்டது. அந்த அபிப்பிராயங்களையும் உயர்நீதிமன்றத் தீர்ப்புகளையும் அனுசரித்துத் தான் இந்த மசோதா அமைக்கப்பட்டு இங்கே கொண்டு வரப்பட்டிருக்கிறது '' என்று மரியாதைக்குரிய முன்னாள் முதல்வர் திரு. பக்தவத்சலம் அவர்கள் இந்த அவையில் இந்தச் சட்டம் எந்த வகையில் கொண்டு வரப்பட்டிருக்கிறது. எதற்காகக் கொண்டு வரப்பட்டது, ஏன் திருத்தங்கள் எல்லாம் அவ்வப்போது செய்யப்பட்டன என்ற ஒரு விளக்க உரையை இந்த மன்றத்தில் வைத்திருக்கிறார்கள்.

இந்த மன்றம் இப்போது எண்ணிப் பார்க்க வேண்டியது. முன்னாள் முதலமைச்சர் திரு. பக்தவத்சலம்

அவர்கள் எந்த ஆர். வி. கிருஷ்ண ஐயரின் ஆய்வு உரையைப் பின்பற்றித்தான் மூலச்சட்டம் இயற்றப்பட்டது என்று சொன்னார்களோ, அந்த ஆய்வு உரை எங்கே போயிற்று என்பதை இந்த மாமன்றம் எண்ணிப்பார்க்க வேண்டும். அந்த ஆய்வு உரையைப் பாதுகாக்க முடியாத அளவுக்கு என்ன நிலைமை ஏற்பட்டது என்பதையும் தயவுசெய்து சிந்தித்து பார்க்க வேண்டுமென்பதற்காகத்தான் இதைக் கூறுகிறேனே தவிர, வேறு குறை சொல்ல வேண்டுமென்ற நோக்கத்தோடு அல்ல.

அடுத்து, திரு. வெங்கட்டரமண ராவ் தலைமையில் ஏற்படுத்தப்பட்ட மூவர் குழு என்ன சிபாரிசு செய்தது? அந்த அறிக்கை இப்போது எங்கே இருக்கிறது? என்பதை எல்லாம் மரியாதைக்குரிய பேரவைத் தலைவர் ஆராய்ந்து பார்த்து இந்த அவைக்கு அளிக்க வேண்டுமென்று இந்த நேரத்தில் நான் கேட்டுக்கொள்கிறேன். அந்த அறிக்கை எனக்குக் கிடைத்திருக்குமேயானால் இன்னும் பல விவரங்களை இங்கே நான் எடுத்துரைப்பதற்கு ஒரு வாய்ப்பாக இருந்திருக்கும். ஆனால் அந்த வாய்ப்பை மரியாதைக்குரிய பேரவைத் தலைவர் அவர்கள் பெற்றுத் தரத் தவறிவிட்டார்கள் என்று நான் குற்றஞ்சாட்ட விரும்பவில்லை—இருந்தாலும் அந்த அறிக்கை மிகவும் நமக்குத் தேவையானது—ஆகவே அதைத் தேடி எடுத்து இந்த அவைக்குத் தரவேண்டுமென்று நான் விரும்பி வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன். இந்த நேரத்தில் நான் இன்னொன்றையும் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

மாண்புமிகு பேரவைத் துணைத்தலைவர் : மாண்புமிகு உறுப்பினர் பேசும்போது தேடி எடுத்துக் கொடுக்க வேண்டும் என்று கூறினார். யார் தேடித் தர வேண்டுமென்று கேட்கிறார் என்பதை அறிய விரும்புகிறேன்.

திரு பெ. சௌந்தரபாண்டியன் : பேரவைத் தலைவர் மூலம் இதை நான் கேட்கிறேன்.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர்: என்னைத்தான் தேடி எடுத்துத் தரவேண்டும் என்று கேட்கிறீர்களோ என்று நினைத்தேன்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: 1959 ஆம் ஆண்டில் இந்த மூலச் சட்டம் இயற்றப்படுகிற நேரத்தில் அன்றைக்கு எதிர்க்கட்சி வரிசையில் இருந்த உறுப்பினர்களும், எதிர்கட்சித் தலைவரும் நிர்வாகத் துறையிலிருந்து நீதியைப் பிரிக்க வேண்டும், நீதித்துறையில் அனுபவம் உள்ளவர்களை கமிஷனராகவும், டிபுடி கமிஷனராகவும் போடவேண்டும் என்பதாகப் பேசிய நேரத்தில் அப்போது முதலமைச்சராக இருந்த மரியாதைக்குரிய பக்தவத்சலம் அவர்கள் ஒரு கருத்தினை இங்கே சொல்லியிருக்கிறார்கள்.

1959-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 8-ம் தேதி பக்தவத்சலம் கூறியிருக்கிறார்கள், "டெபுடி கமிஷனரைப் போடும்போது ஜுடிஷியல் ஒர்க், அட்மினிஸ்ட்ரேட்டிவ் ஒர்க் என்று தனித் தனியாகப் பிரித்து விட வேண்டுமென்று எதிர்க்கட்சித் தலைவர் அவர்கள் சொன்னார்கள். இந்தச் சட்டத்தின் அடிப்படை அதுவல்ல. நிர்வாகத்திலே நீதியும் சேர்ந்து அவரவர்களுக்கு கிடைக்க வேண்டிய உரிமையை நிர்ணயிப்பது முதலிய காரியங்களையும், அதோடு கூட நிர்வாகத்தையும் கவனித்துக் கொள்ள வேண்டும் என்பதுதான் இந்தச் சட்டத்தின் அடிப்படை, அப்படிச் செய்யத் தகுதியுள்ளவர்கள் தான் டெபுடி கமிஷனராக நியமிக்கப்படுகிறார்கள். அவர் நீதிபதியாக இல்லாமல் இருக்கலாம். இதையெல்லாம் பரிசீலித்துத் தீர்ப்புக் கொடுக்கத் தகுதியுடையவர்கள், ஆற்றல் உள்ளவர்கள் நியமிக்கப்படுகிறார்கள், இந்த மசோதாவில் கமிஷனராக இருப்பவர் நீதி இலாகாவைச் சேர்ந்தவராக இருக்கவேண்டுமென்று இருக்கிறது. டெபுடி கமிஷனர் நீதி இலாகாவைச் சேர்ந்தவராக இல்லாமல் இருப்பது சரியல்ல என்று சொன்னார்கள்.

"இப்பொழுதே சில மாதங்களாக ஒரு டெபுடி கமிஷர் சப்-ஜட்ஜ் கேடரில் இருந்து நியமிக்கப்பட்டிருக்கிருர். நீதி இலாகாவைச் சேர்ந்தவர் இப்பொழுது டிபுடி கமிஷனராக இருக்கிருர்" என்று கூறியிருக்கிருர்கள்.

எதிர்க்கட்சி உறுப்பினர்களும், எதிர்க்கட்சித் தலைவரும் 1959-ம் ஆண்டு நிர்வாகத்துறையிலிருந்து நீதியை எடுத்துவிட வேண்டுமென்று வலியுறுத்திக் கூறியிருக்கிருர்கள். அதற்கு திரு. பக்தவத்சலம் சொல்லியிருக்கிருர் "இப்போது இருக்கிற சட்டப்படியே நிர்வாகத் துறையிலே இருந்த சிலர் நீதிபதியாக சட்டம் படித்தவர்கள் நியமிக்கப்பட வாய்ப்பு இருக்கிறது. ஆகவே அதைப் பின்பற்றித்தான் இப்போது நாங்களும் நியமித்திருக்கிறோம்", என்ற கருத்தினை அன்றைய முதலமைச்சர் திரு. பக்தவத்சலம் எடுத்துச் சொன்னதை இப்போது சுட்டிக் காட்ட ஆசைப்படுகிறேன்.

நாம் எண்ணிப் பார்க்க வேண்டியது காங்கிரஸ் அரசாங்கம் ஓரளவிற்கு அன்றையதினம் எதிர்க்கட்சி உறுப்பினர்களும், எதிர்க்கட்சித் தலைவரும் கூறிய கருத்துக்களை ஏற்றுக் கொண்டு சப்-ஜட்ஜ் கேடரில் டிபுடி கமிஷனரையும் நீதித் துறையில் அனுபவம் பெற்றவரை கமிஷனராகவும் நியமித்து, இந்தத் துறையைச் செம்மைப் படுத்தி நீதியை நிலைநாட்டி வந்ததை நாம் பார்க்கிறோம்.

ஆனால் இந்த அரசாங்கம் பொறுப்பு ஏற்ற பிறகு கடந்த ஆண்டு ஒரு திருத்தத்தைக் கொண்டு வந்து என்ன செய்திருக்கிருர்கள் என்பதை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். நம்முடைய அறநிலையத்துறை அமைச்சர் அவர்கள் 1974-ம் ஆண்டு ஒரு திருத்தத்தை இந்த அவையின் முன் கொண்டு வந்தார்கள். உள்ளபடியே அந்தத்

திருத்தம் மெத்த வருத்தத்தை உண்டு பண்ணக் கூடியதாக இருந்தது என்பதை நான் இங்கே சுட்டிக்காட்ட கடமைப்பட்டிருக்கிறேன். அறநிலையத் துறையில் நெடு நாட்கள் அனுபவம் பெற்றவர்கள், சட்டப்படிப்பைபடித்தவர்கள், நீதியைச்செலுத்துவதற்குத் தேவையான பயிற்சி பெற்றவர்கள் ஆகியவர்களைத்தான் கமிஷனராகவும், டிபுடி கமிஷனராகவும் நியமிக்க வேண்டுமென்ற ஒரு விதி முறை மூலச் சட்டத்திலே இருந்தது. ஆனால் இந்த அரசாங்கம் 1974-ம் ஆண்டு ஒரு திருத்தத்தைக் கொண்டு வந்து அதிலே objects and Reasons-லே என்ன சொல்லியிருக்கிறார்கள் என்றால்

'Where the post of the Commissioner is not held by a Member of the Madras State Higher Judicial Service or of the Madras State Judicial Service at least one of the posts of Deputy Commissioners shall be held by a member of the Madras State Judicial Service. This makes the appointment of a sub judge as Deputy Commissioner compulsory when the post of the Commissioner is not held by a member of the madras State Higher Judicial Service or of the Madras State Judicial Service. This provision affected the promotions of the Member of the Hindu Religious and Charitable Endowments Department to the post of Deputy Commissioner which are only a few' என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். என்ன அர்த்தம்? அவர்களுடைய பிரமோஷன் பாதிக்கப்படுவதாகச் சிலர் சொல்லுகிற காரணத்தால், இப்படி அவர்களுடைய பிரமோஷன் பாதிக்கப்படுவதால் அந்தச் சட்டத்திற்கு திருத்தம் தேவைப்படுகிறது என்ற காரணத்தை இந்த அவையில் காட்டி ஒரு திருத்தச் சட்டத்தை மரியாதைக்குரிய அறநிலைய அமைச்சர் அவர்கள் கொண்டு வந்து இருப்பதை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும்

மூலச் சட்டத்தில் நீதித்துறையில் அனுபவம் பெற்ற வர்கள், சப்-ஜட்ஜ் கேடரில் உள்ளவரில் ஒருவர் டிபுடி கமிஷனராக இருக்க வேண்டுமென்றிருந்த விதி முறையை மாற்ற வேண்டிய அவசியம் ஏன் ஏற்பட்டது? பிரமோஷன் தரவேண்டும் என்பதற்காகவா?

ஏற்கெனவே நிர்வாகத்துறையினரே நீதி செலுத்துகிற காரணத்தினால், அங்கே அரசாங்கத்தின் தலையீடு இருக்கிற காரணத்தால் நியாயமான தீர்ப்பை எதிர்பார்க்க முடியாமல் வழக்குகள் பல வருடங்களாக தள்ளிப் போடப்படுகின்றன. வழக்கு குறிப்பிட்ட காலத்தில் முடிவ தில்லை. தனக்கு வேண்டியவர்கள்தான் நிர்வாக நீதிபதி என்ற நிலைமை இருந்து வருகிறது. ஆகவே தான், நீதித் துறையில் அனுபவம் உள்ளவர்கள், தகுதி வாய்ந்தவர் கள், பயிற்சி பெற்றவர்கள் நீதி செலுத்துவது நியாயம் என்ற நோக்கத்தோடு தான் இந்தச் சட்டத்தின் 9-வது ஷரத்து இருந்தது என்பதை நாம் மனதில் வைத்துக் கொள்ள வேண்டும்.

ஆகவே, இந்த அரசாங்கம் பொறுப்பு ஏற்ற பிறகு இந்த அடிப்படை நோக்கத்தை மாற்ற வேண்டிய அவ சியம் ஏன் ஏற்பட்டது? யாரோ ஒருசிலருக்கு பிரமோஷன் பாதிக்கப்படுகிறதனாலே அரசாங்கம் இந்த அளவிற்கு தன்னுடைய கொள்கையை வகுத்துக் கொண்டிருக்கிறதே என்பதை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். யாரோ சில அதிகாரிகள் பாதிக்கப்படுகிறார்கள் என்பதற்காகச் சட்டத்தைத் திருத்த வேண்டுமா? யாரோ சில பேருக்கு பிரமோஷன் கிடைக்க வில்லை என்பதற்காக நியாயத்தை நிலைநாட்ட வேண்டிய இந்த அரசு நியாயத்தைப் புறக் கணித்து சில பேருக்கு சலுகை காட்டுவது உள்ளபடியே நேர்மைதானா என்பதை நாம்எண்ணிப்பார்க்க வேண்டும்.

ஆகவே, இந்தச் சட்டத்திருத்தம், 1974-ம் ஆண்டு கொண்டு வந்தது தேவையற்றது, நியாயமற்றது, நீதித் துறையை அவமதிப்பதாகும் என்பதை நான் இந்த நேரத்தில் சுட்டிக்காட்ட ஆசைப்படுகிறேன்.

மேலும் இந்தச் சட்டத்தின் ஒவ்வொரு பிரிவையும் இங்கே அலசிப் பார்த்து அதிலே இருக்கிற குறைபாட்டை நான் சுட்டிக் காட்டுவது மிக, மிக அவசியமானது. இந்த நாட்டுக்கும், எதிர்காலத்தில் இந்தச் சட்டத் திருத்தம் ஏன் தேவை என்பதைப் புரிந்து கொள்வதற்கு ஒரு வாய்ப்பாக அமையும் என்பதை நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

நம்முடைய பழைய சட்டத்திலே, 1959ஆம் ஆண்டுச் சட்டத்திலே செக்ஷன் 9-லே என்ன சொல்லுகிறது என்பதை நாம் பார்க்க வேண்டும்.

The Government shall appoint the Commissioner and such number of Deputy and Assistant Commissioners as they think fit.'

அதிலே (C) பிரிவில்--

(c) Where the post of the Commissioner is not held by member of the Madras State Higher Judicial Service, at least one of the posts of Deputy Commissioners shall be held by a member of the Madras State Judicial Service.'
இதற்குத்தான் 1974-ம் ஆண்டு இந்த அரசாங்கம் ஒரு திருத்தத்தைக் கொண்டு வந்து இருக்கிறது.

ஆகவே, இந்தத் திருத்தம் தேவையற்றது, திரும்பப் பெற வேண்டியது. நிர்வாகத் துறையிலும் நீதிசெலுத்த வேண்டியவர்கள் கண்டிப்பாக நீதிபதிகளாக இருக்க வேண்டும். அப்படியில்லை என்றால் நிர்வாகத்திலேஇருந்து நீதியைப்பிரித்து விடுவது தான் நியாயம் என்பதை நான் இங்கே சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

இன்னொன்றையும் நான் குறிப்பிட விரும்புகிறேன். அதே சட்டத்தில் 63-வது பகுதியில்

'Subject to the rights of suit or appeal hereinafter provided, the Deputy Commissioner shall have power to inquire into and decide the following disputes and matters :

(d) whether any property or money is a specific endowment.

என்று தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. (மணி அடிக்கப்பட்டது).

நிறைய பாயின்ட்ஸ் இருக்கின்றன. இன்னும் ஒரு மணியாவது வேண்டும்.

மாண்புமிகு பேரவைத் தலைவர் : இப்போதே ½ மணிக்கு மேலாகிவிட்டது. இன்னும் பத்து நிமிடங்களில் முடித்துக் கொள்ளுங்கள்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன் : ப்ரைவேட் மெம்பர் பில்—இதில் சொல்ல வேண்டியவைகள் நிறைய இருக்கின்றன.

மாண்புமிகு பேரவைத் தலைவர் : ப்ரைவேட் பில்களே நிறைய இருக்கின்றன. சீக்கிரம் முடித்து விடுங்கள்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன் : தலைவர் அவர்களே, 63-வது விதியில் 'Subject to the rights of suit or appeal' என்று பல உள் விதிகள் இருக்கின்றன.

இவற்றிலே என்ன என்ன விதிமுறைகள் பின்பற்றப் படுகின்றன என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும்.

அறநிலையத்துறை ஒரு கோவிலை எடுக்க வேண்டுமென்றால் ஒரு நோட்டீஸ் அனுப்புகிறார்கள். அந்தக் கோவிலின் சொந்தக்காரர் 63-வது விதிப்படி மனுதாக்கல் செய்ய வேண்டும். "கோவில் என்னுடைய அனுபவத்

தில் இருந்து வருகிறது. இதில் இருந்து நானே, என் குடும்பத்தினரோ எந்தவிதமான வருவாயையும் பெற வில்லை. எங்களுக்கு சொந்தம்", என்று மனுதாக்கல் செய்ய வேண்டும்.

மனுவைப் பெற்றுக்கொண்டு அறநிலையத்துறை ஒரு அதிகாரியை அனுப்பி அந்த இடத்தைப் பார்வையிட்டு, அங்குள்ள பலரையும் விசாரித்து, இது தனியார் கோவிலா பொதுக் கோவிலா என்பதற்கு தம்முடைய அறிக்கையை இவர் கொடுக்கிறார்.

தனியார் கொடுத்த மனு, அதன் பேரில் விசாரணை நடத்திய அறநிலையத்துறை அதிகாரி கொடுத்த பதில் — இரண்டையும் — அறநிலையத்துறை கமிஷனர் அல்லது டெபுடி கமிஷனர் உட்கார்ந்து நீதிபதியாக விசாரணை நடத்துகிறார். சாட்சிகளை அழைக்கிறார். வாதி கோவிலை நிர்வகித்து வருகிறவர். பிரதிவாதி அறநிலையத்துறை அதி காரி. நீதிபதியாக அறநிலையத் துறையைச் சேர்ந்தவரே இருந்தால் எந்த வகையில் நியாயம் கிடைக்கும் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். தன்னுடைய வழக்கை தானே நீதிபதியாக அமர்ந்து விசாரிப்பது என்பது எந்த வகையில் நியாயம்என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். தம்முடைய சட்டத்தில் சிவில் ப்ரோஸீஜர் கோடில் பின் பற்றக் கூடிய முறை என்ன?

சிவில் கோர்ட்டில் வாதி இருந்து, பிரதிவாதி இல்லை யென்றால் எக்ஸ்பார்ட்டியாக தீர்ப்பு அளிக்கப்படுகிறது. அறநிலையத்துறை இந்த முறையைப் பின்பற்றலாம் இல்லையா? பிரதிவாதி இல்லாத கேசுக்கு தானே வக்காலத்து வாங்கிக் கொண்டு, தானே நீதிபதியாக அமர்ந்து — ஐந்தாண்டு, ஏழாண்டு, பத்தாண்டு வழக்கை இழுத்துப் போவது என்ன நியாயம்? வயதான காரணத்தி னால் கமிஷன் போட்டு விசாரிக்க வேண்டுமென்று மனுக் கொடுத்தால் அதை அறநிலையத்துறை ஏற்றுக்கொள்வ

தில்லே. அந்த மனுவைத் தள்ளுபடி செய்து — அவர் எப்படிப்பட்டவராக இருந்தாலும், சாகும் தருவாயில் இருந்தாலும், நேரில் வந்துதான் ஆஜராக வேண்டும். சாட்சி சொல்ல வேண்டும் என்று தூண்டுகிறார்களே தவிர சட்டப்படி கமிஷன் போட்டு விசாரிப்பது கிடையாது. இது நியாயமா என்பதைச் சிந்திக்க வேண்டும்.

அதே விதிமுறையில் இன்னொன்றும் சொல்லப் பட்டிருக்கிறது. 'whether any property or money is a specific endowment' property title and rights are important'. வழக்கில் தனக்கு நியாயம் கிடைக்கவில்லையென்றால், சிவில் கோர்ட்டில் அப்பீல் செய்யலாம் என்றும் கூறப் பட்டிருக்கிறது. ஆகவே, ஒரு வழக்கை இரண்டு வகை யான நீதி மன்றத்தில் விசாரிக்கும் நிலைமையை உருவாக்கி யிருக்கிறோம். ஒரு ரைட்டை நிர்ணயம் செய்ய வேண்டு மென்றால் சிவில் கோர்ட்டுக்கே அந்த அதிகாரம் இருக்க வேண்டுமே தவிர நிர்வாகத்துறைக்கு இருப்பது நியாயம் இல்லே.

இன்றுகூட சிவபுரம் சிலேவழக்கில் டைட்டில் யாரு டையது என்பதை நிருபிக்க வேண்டுமென்று இலண்டன் கோர்ட்டில் தீர்ப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது ஒரு ப்ராப்பர்டிக்கு டைட்டிலும், ரைட்டும் முக்கியம் என்று சிவபுரம் சிலேபற்றி இலண்டன் கோர்ட்டில் தீர்ப்பு அளிக் கப்பட்டிருப்பதையும் கவனிக்க வேண்டும்.

இங்கே அறநிலேயத்துறை அதிகாரிகளே நீதிபதியாக உட்கார்ந்து விசாரிப்பது என்றால் — தீர்ப்பு வழங்குவதில் அவர்களுக்கே பல வழக்குகளில் சாதகமாக ஏற்பட்டு விடுகிறது . ......

திரு. கு. காமாட்சி : மாண்புமிகு உறுப்பினர் பேசும் போது மேல் அப்பீல் சிவில் கோர்ட்டுக்கு செய்து கொள்ள லாம் என்று இருக்கிறது என்றார்கள். அப்போது நிர் வாகம் வேறு, நீதிவேறாகத்தானே வைக்கப்பட்டிருக் கிறது?

டாக்டர் எச். வி. ஹண்டே : திரு சௌந்தரபாண்டியன் சொன்னது அந்த இலாக்காவையே நிர்வாகம் வேறு நீதி வேருகப்பிரித்து இருப்பது கூடாது என்பதுதான்.

திரு கு. காமாட்சி : எனக்குச் சட்டம் தெரியாது. அவரே தான் சிவில் கோர்ட்டுக்குப் போகலாம் என்று இருக்கிறது என்று சொன்னுர். அதுதான் நீதி வேருக இருக்கிறதே என்று கேட்டேன்.

திருமதி த. ந. அனந்தநாயகி: நீதிபதியாக அந்தத்துறை யில் இருந்து விசாரணை நடத்தக்கூடிய டி. ஸி., ஏ. ஸி. க் களை நீதித்துறையைச் சேர்ந்தவர்களையே போட வேண் டும். நிர்வாகத்துறையில் இருப்பவர்களை அந்தப் பதவி களில் போடக்கூடாது என்பதுதான்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன் : நான் சொல்லி வந்த அடிப்படை வாதத்தையே திரு. காமாட்சி புரிந்துகொள்ள வில்லை என்று கருதுகிறேன், என்னுடைய வாதம் எல்லாம் அறநிலையத்துறை நிர்வாகிகளையே நீதிசொல்லக்கூடிய நீதிபதிகளாகப் போடக் கூடாது என்பதுதான். நிர்வாகத் தில் இருந்து நீதி பிரிக்கப்பட வேண்டுமென்பது என்னு டைய அடிப்படை வாதம். ஒரு சொத்து யாருக்குச் சொந்தம் என்பதை தீர்மானிப்பது நிர்வாகஅதிகாரியல்ல. சிவில் கோர்ட்டுதான் தீர்மானிக்க வேண்டும். அந்த அடிப்படை நியாயம் இதில் இல்லை என்பதுதான் என்னு டைய வாதம் என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

மாண்புமிகு பேரவைத் தலைவர் : (மணியடித்து) ஒரே ஆர்க்யூமென்ட்டுதான். சுருக்கமாகச் சொல்லி விட்டு போங்கள். இன்னும் 5 நிமிஷத்திலே முடித்து விடுங்கள்.

திரு. ஏ. சுப்பிரமணியம் : பிரைவேட் மெம்பர் தினத்திலே யாவது அந்த மணிக்குக் கொஞ்சம் ஓய்வு கொடுத்தீர் களானுல் .........

மாண்புமிகு பேரவைத் தலைவர் : திரு. சுப்பிரமணியம் எனக்கு ஒன்றுமில்லை. கே. டி. கே. தன் பில் வரவேண்டு மென்று சொல்கிறார். மற்ற அங்கத்தினர்கள் தங்களுடைய பில்கள் வரவேண்டுமென்று சொல்கிறார்கள்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன் : நிவாரணச் சட்டத்தை நாம் 8 நாள் விவாதித்திருக்கிறோம்.

மாண்புமிகு பேரவைத் தலைவர் : 8 நாள் அல்ல, 80 நாள் கூட விவாதியுங்கள்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன் : நாம் இன்னொன்றையும் பார்க்க வேண்டும் இந்த 1959-வது ஆண்டு சட்டத்தில் 110 விதி முறையில் என்ன சொல்லப்பட்டிருக்கிற தென்றால்—

(1) Where a Commissioner or a Deputy Commissioner makes an inquiry or hears an appeal under Chapter V or Chapter VI. the inquiry shall be made and the appeal shall be heard, as nearly as may be. in accordance with the procedure applicable under the Code of Civil Procedure. 1908 (Central Act V of 1908) to the trial of suits or the hearing of appeals, as the case may be.'

(2) The provisions of the Indian Evidence Act, 1872 (Central Act I of 1872), and the Indian Oaths Act, 1873 (Central Act X of 1873), shall apply to such inquiries and appeals ......... என்று இருக்கிறது.

அறநிலையத் துறையில் நீதி செலுத்துகின்றவர்கள் நிர்வாகத்திலே பயிற்சி பெற்றவர்கள் சிலர் வேண்டு மானால் சட்டம் படித்தவர்களாக இருக்கலாம். சட்டம் படித்தவர்கள் அத்தனை பேரும் நீதித் துறையில் அனுப

வம் பெற்றவர்கள் அல்ல, நீதி செலுத்துவதிலே பயிற்சி பெற்றவர்கள் அல்ல. நிர்வாக அதிகாரிகளாக இருந்தவர்கள் அங்கே பதவி உயர்த்தப்பட்டு நீதி செலுத்த தகுதி பெற்றிருக்கிறார்கள். அதிலே பல பேர் இண்டியன் எவிடன்ஸ் ஆக்டைப் படித்திருக்கமாட்டார்கள். ப்ரொஸிஜர் கோடை படித்திருக்க மாட்டார்கள்; தெரிந்திருக்க மாட்டார்கள். கிரிமினல் ப்ரொஸிஜர் கோடில்என்னென்ன விதிமுறைகள் இருக்கின்றனவோ, அவை அத்தனையும் படித்தவர்கள். அனுபவம் பெற்றவர்கள், அலசிப் பார்த்தவர்கள் சில பேர் தான் இருப்பார்களே தவிர, பலபேர்கள் அல்ல. ஆகவே, ஒரு சாட்சியைக் குறுக்கு விசாரணை செய்யவோ, அல்லது அந்தச் சாட்சி சொல்கின்றவற்றில் ஷரத்துக்களையும் டாக்குமென்ட்டுகளையும்எவ்வப்பொழுது ஏற்றுக்கொள்ளலாம், அந்த டாக்குமென்ட் உண்மையான டாக்குமென்ட்டா என்பதை அலசி ஆராய்ந்து, அதை ஏற்றுக்கொள்வதற்கு போதிய அனுபவம் அவர்களுக்கிருக்கிறதாவென்றால் நிச்சயமாகச் சொல்வேன், இல்லவே இல்லை. இவையெல்லாம் அனுபவத்தில் வரவேண்டியவையே தவிர, திடீரென்று வந்து விடக்கூடியதல்ல.

ஆகவே, சட்டம் படித்தவர்கள் அத்தனை பேரும் நீதிபதிகளாகி விட முடியாது. நீதி செலுத்துவதாலே அவர்கள் அந்தத் துறையிலே பயிற்சிபெற்றவர்களாகவோ அல்லது சட்டம் தெரிந்தவர்களாகவோ ஆகிவிட முடியாது. இந்தியன் எவிடன்ஸ் ஆக்டைப்பற்றி தெரியாதவர்கள், சிவில் ப்ரொஸிஜர் கோடைப் பற்றி தெரியாதவர்கள், அவற்றைப் படிக்காதவர்கள் இப்படிப்பட்ட சூழ்நிலையில் நீதி செலுத்துவது எந்த விதத்தில் நியாயம் என்பதை நாம் எண்ணிப்பார்க்க வேண்டும். ஆகவே, இன்றிருக்கிற சட்டத்தில் பல கோளாறுகள் இருக்கின்றன என்பதை நாம் எண்ணிப்பார்த்து, இந்தச் சட்டத்திற்கு ஒரு திருத்தம் கொண்டு வருவது அல்லது மீண்டும் இந்தச் சட்டத்தை அலசி ஆராய்ந்து பார்த்து மறுபரிசீலனை செய்வது நியாயம் என்பதுதான் என்னுடைய வாதமாகும்.

இந்த நேரத்தில் நான் இன்னொரு ஆதாரத்தையும் இந்த மாமன்றத்திற்கு அளிக்க விரும்புகிறேன். அறநிலையத் துறையிலே இருக்கிறவர்கள் சிவில் சூட்டை மட்டும் நடத்துவதில்லை. இன்னும் கிரிமினல் சம்பந்தப்பட்டவைகளையும் நடத்திக் கொண்டிருக்கிறார்கள். அதற்கு உதாரணம் வேண்டுமென்றால் திருத்தணி சம்பந்தப்பட்ட ஒரு வழக்கினை இங்கே நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அந்த வழக்கைப் பற்றி இந்த மாமன்றத்தில் பல்வேறாகப் பேசப்பட்டதையும் அதிலே வாதங்கள் எதிர் வாதங்கள் இங்கே வைக்கப்பட்டதையும் அறநிலையத் துறையினர் வழக்குத் தொடர்ந்ததையும் அவர்கள் மேல் அப்பீல் செய்ததையும் அதையெல்லாம் எண்ணிப் பார்க்கிறபொழுது இந்தச் சட்டத்தில் எவ்வளவு குறைபாடு இருக்கிறது என்பதற்கு இதுவும் ஒரு ஆதாரம் என்பதை நாம் மனதிலே வைக்க வேண்டும்,

திருத்தணியில் ஒரு தாழ்த்தப்பட்டவர் அறங்காவலராக இருந்தார். அந்த அறங்காவலர் ஏதோ தவறு செய்தார் என்பதற்காக பதவியிலிருந்து நீக்கப்பட்டதை இந்த மாமன்றத்தில் விரிவாகப் பேசினோம். அப்பொழுது மதிப்பிற்குரிய உறுப்பினர் மணலி கந்தசாமி அவர்கள் 1973-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 10-ந்தேதி இங்கே பேசினார்கள். அதற்கு மாண்புமிகு முதலமைச்சரவர்களும், அறநிலையத் துறை அமைச்சர் அவர்களும் அளித்த பதில் நடவடிக்கைக் குறிப்பில் பார்ப்போமானால் இந்தச் சட்டத்தை இந்த நிர்வாகத் துறையினர் எந்த அளவுக்குப் பின்பற்றி நியாயம் வழங்கியிருக்கிறார்கள் என்பதற்கு ஒரு சான்றாக அது அமையும் என்பதைத்தான் நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அப்பொழுது மதிப்பிற்குரிய பெரியவர் மணலி அவர்கள் குறிப்பிட்டார்.

"திரு. மணலி சி. கந்தசாமி: அடுத்தபடியாக, ஆளும் கட்சிக்கு ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன் சுதேசமித்திரன் தலையங்கம் பற்றிச் சொல்ல விரும்புகிறேன். முன்

ஞள் முதலமைச்சர் திரு. பக்தவத்சலம் அவர்கள் ஒரு விஷயத்தைப் பற்றி எழுதியிருக்கிருர்கள். தயவுசெய்து படித்துப் பார்க்க வேண்டும். திருத்தணி தலத்தில் அங்கு இருக்கக்கூடிய கோயில் தர்மகர்த்தா நடந்து கொண்ட விதத்தைப்பற்றி பத்திரிகையில் முன்ஞள் முதலமைச்சர் அவர்கள் எழுதி இருக்கிருர்கள் " தயவு செய்து படித்துப் பார்க்கவேண்டும். "திருத்தணி தலத்தில் அங்கு இருக்கக்கூடிய கோயில் தர்மகர்த்தா நடந்து கொண்ட விதத்தைப் பற்றி பத்திரிகையில் முன்ஞள் முதலமைச்சர் அவர்கள் எழுதி இருக்கிருர்கள். அந்த ஸ்தலத்திற்குத் தரிசனம் செய்ய வந்திருந்த பெண்ணை அங்கிருக்கக்கூடிய தர்மகர்த்தா ஒருவர் கெஸ்ட் ஹவுசில் துன்புறுத்தியிருக்கிருர். கணவன் வந்து தடுத்திருக்கிருன். இதைப்பற்றி பக்வத்சலம் அவர்களாலே எழுதப்பட்டிருக்கிறது "
என்று மதிப்பிற்குரிய மணலி அவர்கள் இங்கே அன்று குறிப்பிட்டார்.

அதற்கு முதலமைச்சரவர்கள், " அந்த அரிசனத் தோழர் செய்த தவறுதான் அது. விசாரிக்காமல் அந்தத் தோழர் மீது நடவடிக்கை எடுத்துவிட்டால், அரிசனத் தோழர் மீது அரசாங்கம் விசாரிக்காமலேயே கடுமையான நடவடிக்கை எடுத்துவிட்டது என்ற புகார்கூட வரும். விசாரித்து, உண்மை என்று ஆகிவிட்டால் நிச்சயமாக ஏற்ற நடவடிக்கை எடுக்கப்படும் " என்று சொல்லியது மட்டுமல்ல, பின்ஞலே என்ன சொல்கிருர்கள்.

" தன்னைத் தற்காலிகமாக விலக்கி வைத்திருக்கிருர்கள் என்றும் மன்னிக்க வேண்டும் " என்றும் கூறிஞர். " இவ்வளவு பெரிய தவறைச் செய்த நீங்கள் என் முகத்தில் கூட விழிக்கக் கூடாது, வெளியே போய்விடுங்கள்' என்று சொன்னேன். நிச்சயமாக விசாரணை செய்தபிறகு நடவடிக்கை எடுக்கப்படும் என்று கூறி அமைகிறேன் " என்று மதிப்பிற்குரிய இன்றைய முதலமைச்சரவர்கள் அன்று குறிப்பிட்டதை நாம் இணைத்துப் பார்க்கவேண்டும்.

அதற்குப் பிறகு 1974-ம் ஆண்டு இதே அவையில் நானும் ஒரு கருத்தைச் சொல்லியிருக்கிறேன்-

"...திருத்தணியைப் பொருத்தவரையில் அங்கே தாழ்த்தப்பட்ட சமூகத்தைச் சார்ந்தவரை அறங்காவலராக நியமித்தது இந்த அரசு. ஆனால், அந்த அறங்காவலர் மீது தவறான குற்றச்சாட்டு சாட்டப்பட்டு, அதன் பேரில் பதவியில் இருந்து நீக்கப்பட்டதை நாம் எண்ணிப் பார்க்கவேண்டும். இதில் உண்மை என்னவென்பதை இந்தத் துறை பரிசீலிக்கத் தவறிவிட்டது. தற்போது தீர்ப்பு வழங்கும் நிலையில் வழக்கு இருந்து வருகிறது. ஆகவே, சர்க்கார் இந்தத் தவறுக்கு யார் காரணம் என்பதை முதலில் சிந்தித்துப் பார்த்து தவறு செய்கிறவர்களைத் தண்டிக்க வேண்டுமே தவிர தவறு செய்யாதவர்களைத் தண்டிப்பது பொருத்தம் ஆகாது"
என்று 1974-ம் ஆண்டு இதே அவையில் நானும் சுட்டிக் காட்டியிருக்கிறேன்.

நாம் எண்ணிப் பார்க்கவேண்டியது இரண்டு கருத்து; ஒன்று, அறநிலையத் துறையில் தர்மகர்த்தாவாக இருந்த ஒரு தாழ்த்தப்பட்ட மகன் உள்ளபடியே தவறு செய்தானா என்பதை முதலிலே எண்ணிப் பார்க்கவேண்டும். 'இது வேண்டுமென்றே சொல்லப்படுவது. அறங்காவலர் என்னைத் துன்புறுத்தவில்லை', என்று அந்த அம்மையாரே வாக்குமூலத்தில் கூறியிருக்கிறார். இது ஒரு கிரிமினல் குற்றமாகும். கிரிமினல் குற்றமாக இருக்குமானால் முறைப்படி போலீசில் புகார் கொடுத்திருக்க வேண்டும். போலீசார் நடவடிக்கை எடுத்திருக்க வேண்டும். நீதிமன்றத்தில் வழக்குத் தாக்கல் செய்திருக்க வேண்டும். நீதிமன்றத்தில் எதிரி வக்கீல் வைத்து வாதாடி நீதியை நிலைநாட்ட உரிமை தந்திருக்க வேண்டும். ஆனால், இத்தனையையும் தராமல் நிர்வாகத் துறையே இந்த வழக்கை......

மாண்புமிகு பேரவை தலைவர்: இப்போது ஒரு மணிநேரம் ஆகிவிட்டது மற்ற பில்களெல்லாம் இருக்கிறதே. (குறுக்

கீடு) எந்த நாளாக இருந்தாலும் சுருக்கமாகச் சொல்ல வேண்டும். தனியார் அலுவல் நாள் என்றால் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் பேசலாமா? மற்ற பில்கள் எல்லாம் இருக்கின்றன, உங்கள் பில் முக்கியம் என்று எப்படிக் கருதுகிறீர்களோ அதைப் போலத்தான் மற்ற உறுப்பினர்களுக்கும் இருக்கும். ஒரு மணி நேரத்திற்கு மேலாகி விட்டது. இன்னும் ஐந்து நிமிடங்களில் முடிந்துவிடுங்கள்.

திரு பெ. சௌந்தரபாண்டியன்: தலைவரவர்களே, தர்மகர்த்தா விவகாரத்தில் கிரிமினல் கோர்ட்டுக்குச் செல்லாமலே இந்த வழக்கு முடிக்கப்பட்டிருக்கிறது என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். ஆகவே, கிரிமினல் வழக்குகளின் மீதும், தீர்ப்புச் சொல்லும் அதிகாரத்தை இன்றைய தினம் அறநிலையத் துறையினர் வைத்துக் கொண்டிருப்பது எந்தவிதத்தில் நியாயமாக இருக்கும்? இது கிரிமினல் கோர்ட்டுக்குச் சென்றிருந்தால் நியாயம் நிலைநாட்டப்பட்டிருக்கும்.

மாண்புமிகு திரு மு. கண்ணப்பன்: தலைவரவர்களே, பாதிக்கப்பட்டிருப்பதாக யார் கருதுகிறார்களோ அவர்கள் கிரிமினல் கோர்ட்டுக்குச் செல்ல அதற்குரிய உரிமையிருக்கிறது. தாராளமாகச் சென்றிருக்கலாம். அதை யாரும் தடை செய்யவில்லை, இந்தச் சட்டத்திலேயும் தடை செய்யவில்லை.

திரு பெ. சௌந்தரபாண்டியன்: தலைவரவர்களே, கிரிமினல் குற்றவாளியைக் கண்டுபிடிக்க வேண்டியவர்கள் போலீசார், புகார் செய்ய வேண்டியவர்கள் பாதிக்கப்பட்டவர்கள் ஆனால் பாதிக்கப்பட்டவர்கள் போலீஸ் ஸ்டேஷனில் புகார் தரவில்லை, கோர்ட்டுக்கும் செல்லவில்லை. நிர்வாகத் துறையினரே வழக்கை எடுத்துக் கொண்டார்கள், இதுதான் என்னுடைய வாதம்.

மாண்புமிகு திரு. மு. கண்ணப்பன்: தலைவரவர்களே, தவறு செய்தவர்கள்மீது நடவடிக்கை எடுத்தது தவறு என்று உறுப்பினரவர்கள் கருதுகிறார்கள்?

திரு பெ. சௌந்தரபாண்டியன் : தலைவரவர்களே, என்னுடைய வாதம், தவறு செய்யாதவர்கள் மீது நடவடிக்கை எடுத்ததுதான் தவறு அவர் தவறு செய்திருந்தால்...

மாண்புமிகு திரு மு. கண்ணப்பன் : யாரோ ஒரு பெண் சம்பந்தப்பட்டதாகச் சொல்கிறார்கள். அந்தத் தவறுக்காக மட்டும் நடவடிக்கை எடுத்ததாகத் தெரியவில்லை. மற்றக் காரணங்களோடு இதுவும் ஒன்றாகத்தான் இருந்தது. அந்தப் பெண் இல்லத்திலே தங்கியிருந்த நேரத்தில் முறைகேடாக நடந்து கொண்டார் என்ற அதுவும் ஒரு காரணமாக இருந்ததே தவிர, இந்தக் காரணத்திற்காகத் தான் விலக்கப்பட்டார் என்று சொல்ல முடியாது ஆணையாளர் விலக்கியது தவறு என்றால் மேல் நீதிமன்றத்தில் அப்பீல் செய்ய வழி இருக்கிறது, அதைத் தடை செய்யவில்லை.

திருமதி சத்தியவாணி முத்து : தலைவர்களே, மாண்புமிகு உறுப்பினரவர்கள் கொண்டு வந்திருக்கின்ற இந்தத் தனித் தீர்மானம் வரவேற்கக் கூடியதுதான் ஆனால், இந்த திருத்தணி விவகாரத்தில் அறங்காவலர் தவறு செய்தார், குறிப்பாக ஒரு பெண்ணைக் கற்பழித்தார் என்பது குற்றச் சாட்டு. அவருடைய வாதமெல்லாம் விசாரிப்பவர்களே குற்றத்திற்கு ஆளாக்கப்பட்ட நிலையிருந்தால் யாரைத் தண்டிப்பது என்பதுதான். ஏ. சி. டி. ஓ., டி. சி. டி. ஓ, எக்சிகியூடிவ் ஆபீசர் குற்றம் செய்திருப்பார்களேயானால் அவர்களை யார் விசாரணை செய்வது? விசாரிப்பவர்களும் அவர்களாகவே இருந்தால் எப்படித் தீர்ப்பு கிடைக்கும்? கோர்ட்டுக்குப் போக வேண்டுமென்றால், சாதாரண அறங்காவலர் அல்லது ஒரு பியூன் எப்படி போவது? இப்படி எல்லா இலாக்காகளிலேயும் இருக்கிறது, கமர்சியல் டேக்ஸ் இலாகாவிலேயும் இருக்கிறது. ரெவின்யூ இலாக்காவிலேயும் இருக்கிறது.

ஆகவே, சாதாரண பியூரோ அல்லது சிப்பந்தியோ இருக்கும் பொழுது அந்தக் குற்றத்திற்கு ஆளாக்கப்பட்ட வர்கள் மற்ற அதிகாரிகளாக இருந்தால், அவர்களே விசாரணை செய்பவர்களாக இருந்தால் என்ன நியாயம் கிடைக்கும்? சாதாரண சிப்பந்தி.........

மாண்புமிகு பேரவைத் தலைவர்: இந்த விவாதத்திலே கலந்து கொண்டு பின்னால் பேசுங்கள். ஆனால், குறுக்கிட்டு இவ்வளவு கருத்துக்களைச் சொல்ல முடியாது.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: தலைவரவர்களே, மாண்பு மிகு அறநிலையத் துறை அமைச்சரவர்கள் அந்தத் தர்ம கர்த்தா இந்தத் தவறு செய்ததற்காக இல்லை, வேறு பல காரணங்கள் என்று சொன்னார்கள். நம்முடைய சட்டப் பேரவை நடவடிக்கைக் குறிப்பிலே, அவர் இந்தத் தவறு செய்ததன் காரணமாக நீக்கப்பட்டார் என்று தெளிவாக இருக்கிறது. மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சரவர் கள் மாண்புமிகு முதலமைச்சரவர்கள் இந்த அவையிலே எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள் என்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். ஆகவே, அவர் உண்மையிலேயே அந்தப் பெண்ணிடம் தகாத முறையில் நடந்திருந்தால்...

மாண்புமிகு பேரவைத் தலைவர்: அந்த வாதம் இப்போது வேண்டியதில்லை. பில்லைப் பற்றிப்பேசுங்கள். (குறுக்கீடு) ஆதாரத்தை மட்டும் சொல்லுங்கள், அது நடந்தநிகழ்ச்சி என்னென்ன என்பதையெல்லாம் பற்றிச் சொல்ல வேண்டாம். வாதம் வேறு எங்கேயோ போகிறது.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: தலைவரவர்களே, நீதி செலுத்துவதில் எங்கெங்கு தவறு இருக்கிறது என்பதற் கான ஆதாரத்தைச் சொல்கிறேனே தவிர .........

மாண்புமிகு பேரவைத் தலைவர்: அந்தக் கேஸைப் பற்றி மட்டுமே விளக்கிக் கொண்டிருந்தால் முடியாது. அதை 'கோட்' செய்யலாமே தவிர, அதையே டெவலப் செய்து கொண்டு போக வேண்டாமென்று சொல்கிறேன்.

திரு. பெ சௌந்தரபாண்டியன் : நான் 'கோட்' பண்ணுவது மட்டுமல்ல, நிர்வாகத் துறையில் நீதி செலுத்துவதனுல் எப்படிக் தவறு செய்கிருர்கள் என்பதைச் சுட்டிக் காட்டுகிறேனே தவிர வேறு எதற்கும் அல்ல. உள்ளபடியே சொல்கிறேன், அந்த தர்மகர்த்தா மீது தவறு இருக்குமேயானுல் பாதிக்கப்பட்டவர்கள் போலீசில் புகார் செய்திருக்க வேண்டும். கிரிமினல் கோர்ட்டில் வழக்கு தொடர்ந்திருக்க வேண்டும். அது தான் நியாயம். ஆனுல் அறநிலையத் துறை அதிகாரிகள் அந்த வழக்கை எடுத்துக் கொண்டு அதற்கு ஆதாரங்கள் தயார் செய்து, அவர் மீது குற்றஞ்சாட்டி, பழி சுமத்தி பதவியிலிருந்து நீக்குவது எந்தவிதத்திலே நியாயம் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். (மணியடிக்கப்பட்டது) பிரைவேட் மெம்பர் பில்லில்கூட அவசரப் படுத்திஞல் என்ன செய்வது?

மாண்புமிகு பேரவைத் தலைவர்: பிரைவேட் மெம்பர் பில் என்ருலும்கூட இது ஒரு பில் மட்டுமல்ல, சௌந்தர பாண்டியன் கொடுத்த ஒரு பில் மட்டுமல்ல, மற்ற உறுப்பினர்கள் கொடுத்திருக்கின்ற பிரைவேட் மெம்பர் பில்களும் இருக்கின்றன. சௌந்தரபாண்டியன் பில்லை மட்டும் ஒரு நாள் முழுவதும் எடுத்துக்கொள்ள முடியாது.

திரு. பெ. சௌந்தரபாண்டியன் : போன பில் மூன்று நாட்கள் நடந்திருக்கிறதே.

மாண்புமிகு பேரவைத் தலைவர் : அதற்காக எல்லாவற்றிற்குமே மூன்று நாட்கள் என்று சொல்ல முடியாது.

திரு: பெ. சௌந்தரபாண்டியன் : ஒரு உறுப்பினருக்கு ஒரு மாதிரி, இன்னெரு உறுப்பினருக்கு ஒரு மாதிரி என்ருல் ...

மாண்புமிகு பேரவைத் தலைவர் : நீங்கள் சுருக்கமாகத்தான் முடிக்க வேண்டும். 11-30 மணிக்கு முடித்து விடுங்கள்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன் : அது எப்படி முடியும் ?

மாண்புமிகு பேரவைத் தலைவர்: வழக்கைப் பற்றி நீதி மன்றத்திலே சொன்னாலும் நீதிபதிகளுக்கு எரிச்சல் வரும் அளவிற்கு, பொறுமையைச் சோதிக்கும் அளவிற்குச் சொன்னால் நீதியே கிடைக்காமல் கூட போகலாம்.

திரு. எஸ். வடிவேல்: தலைவரவர்களே, நான் ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். திருத்தணிக்கு வந்த ஒரு பெண்ணிடம் ஒரு அறங்காவலர் ... ... ...

மாண்புமிகு பேரவைத் தலைவர்: இது திருத்தணியைப் பற்றிய வாதம் அல்ல

திரு எஸ். வடிவேல்: திருத்தணியில் ஒரு பெண்ணிடம் அறங்காவலர் தவருக நடந்து கொண்டார் என்ருல் அது சம்பந்தமாகத் தீர்ப்பு அளிக்க வேண்டியது நிர்வாகத்திலேயா? அல்லது நீதி இலாக்காவிலேயா?

மாண்புமிகு பேரவைத் தலைவர்: அதை 'கோட்' பண்ணுகின்ற அளவிலே இருக்கலாமே தவிர என்ன நடந்தது என்பதையெல்லாம் எடுத்துச் சொல்வது முறையல்ல.

திரு. பெ சௌந்தரபாண்டியன்: தலைவர்களே, நான் அந்த விவரங்களுக்குள் செல்லவில்லை. தீர்ப்பு வழங்கியதைத்தான் சொல்கிறேன்.

மாண்புமிகு டாக்டர் மு கருணாநிதி: தலைவரவர்களே, ஏதோ அரிசன அறங்காவலர் மீது இப்படிப்பட்ட தவருன தீர்ப்பு வழங்கப்பட்டுவிட்டது என்று சொல்லப்படுகிறது. நான் அந்தத் தீர்ப்புக்கு உள்ளே போகவில்லை, நடந்த விவகாரத்திற்குள்ளே செல்ல விரும்பவில்லை. மணலி அவர்கள் பேசுகின்ற நேரத்தில் முன்னுள் முதல்வர் பக்தவச்சலம் அவர்கள் குறிப்பிட்டு பத்திரிக்கையிலே அறிக்கை விட்டிருக்கிருர்கள், இப்படி அறங்காவலர் தவருக நடந்து கொண்டிருக்கிருர் என்று, இதைக்

கவனிக்க வேண்டுமென்று மணலி அவர்கள் குறிப்பிட்டார்கள். கவனிக்கப்படும் என்று சொன்னேன். அரிசன அறங்காவலர் பழி வாங்கப்பட்டார் என்று திசை மாற்றுவது நல்லதல்ல. அந்த அறங்காவலருக்குப் பதிலாக நியமிக்கப்பட்டிருக்கின்ற இன்னொரு அறங்காவலரும் அரிசன் தான். இன்னும் சொல்லப்போனால் தண்டிக்கப்பட்டவர் முன்னேற்றக் கழகத்தைச் சார்ந்தவர்தான், அவர்தான் தண்டிக்கப்பட்டார்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன் : தலைவரவர்களே, அரிசன அரங்காவலரா என்ற வாதத்தை நான் எடுத்துக்கொள்ளவில்லை. இந்த அறங்காவலர் மீது நடவடிக்கை எடுத்தது சரியா என்பதுதான் என்னுடைய வாதம். நிர்வாகத் துறையினர் அதை ஏற்றுக்கொண்டு செய்தது நியாயமா என்பதுதான் என்னுடைய வாதமே தவிர, அரிசனா அல்லது பிற்பட்ட வகுப்பைச் சார்ந்தவரா என்பது என்னுடைய வாதம் அல்ல.

பேரவைத் தலைவர்கள் ஒரு கருத்தைச் சொன்னார்கள். நீதிபதியின் பொறுமையைச் சோதிக்கக் கூடாது. எவ்வளவு சுருக்கமாகச் சொல்ல வேண்டுமோ அவ்வளவு சுருக்கமாகச் சொன்னால்தான் நீதிபதி ஏற்றுக் கொள்வார் என்று கூறினார்கள். உள்ளபடியே சொல்கிறேன், நீதிமன்றமாக இருக்குமேயானால் நான் சுருக்கமாகத்தான் சொல்லியிருப்பேன். ஆனால் இது சட்ட மன்றம்.

மாண்புமிகு பேரவைத் தலைவர் : இது நீதிமன்றத்தைவிட மேலானது. ஆகவே, இதிலே ரொம்பவும் சுருக்கமாகச் சொல்லப் பழகிக் கொள்ள வேண்டும்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன் : இது சட்டமன்றம். எவ்வளவுதான் வாதிட்டாலும், எவ்வளவுதான் ஆதாரங்களைச் சொன்னாலும்... (மணியடிக்கப்பட்டது)

மாண்புமிகு பேரவைத் தலைவர்: திரு. கே. எம். சுப்பிரமணியம் அவர்கள் பேசுவார்கள்.

THIRU K. M. SUBRAMANIAM : Hon Speaker, Sir...

DR. H. V. HANDE : Sir, on a point of order. I just would like to know whether it would be in order for the Hon. Speaker to suddenly ask the hon. Member who is speaking, to resume his seat The Chair could have given him a few minutes to complete his speach. If the Chair had given him one or two minutes, he would have wound up his speech At least in to-day's meeting, let there be no heat generated in regard to the matter/under discussion.

(முற்பகல் 11-30)

மாண்புமிகு பேரவைத் தலைவர்: இதிலே பாயின்ட் ஆப் ஆர்டர் எதுவும் இல்லை. நேரம் குறிப்பிட பேரவைத் தலைவருக்கு உரிமை உண்டு. நான் பலமுறை கூறிவிட்டேன், 11-15 மணியிலிருந்து அவர் 5 நிமிஷம், 3 நிமிஷம் என்று சொல்லிக் கொண்டே வருகிறார். ஒரே கருத்தைத் திருப்பித் திருப்பிச் சொல்லி வருகிறார்கள் என்பதை நீங்களே பார்த்தீர்கள்.

திரு. பெ. சௌந்தரபாண்டியன்: ஒரே கருத்தைச் சொல்லவில்லை. ஒரு கருத்துக்குப் பல ஆதாரங்களைச் சுட்டிக் காட்டினேன். நிர்வாகத் துறையிலே நீதித் துறையும் இணைந்திருப்பது எந்த விதத்திலும் நியாயம் இல்லை இந்திய அரசியல் சட்டத்திலேயே தெளிவாகக் குறிப்பிடப் பட்டிருக்கிறது. ஆர்டிகிள் 50-ல் நிர்வாகத் துறையிலிருந்து நீதியைப் பிரித்து தனித்து இயங்குவதுதான் பொருத்தம் என்று கூறுகிறது.

வேறு எந்த நாட்டிலும் இல்லாத வழி முறை நம்முடைய தமிழகத்தில், குறிப்பாக அறநிலையத்துறையில் பின்பற்றப்பட்டு வருகிறது. அறநிலையத் துறையில் நிர்வாகிகளாக இருப்பவர்கள் நீதியையும் ஏற்றுச் செய்வதால் பல பொதுமக்களுக்கு நியாயம் கிடைக்கவில்லை, நீதி நிலைநாட்டப்படவில்லை. ஆகவே, இந்த நியாயமான மசோதாவை, ராஜாஜி அவர்கள் 1938-ஆம் ஆண்டு முதலமைச்சராக இருந்த காலத்தில் எதிர்க்கட்சியிலிருந்து எம். சி. ராஜா அவர்கள் கொண்டு வந்த மசோதாவை ஏற்றுக் கொண்டதுபோல் இந்த அரசாங்கம் மீண்டும் நன்கு சிந்தித்து ஆய்ந்து பார்த்து இந்த நியாயமான மசோதாவை அரசியல் சட்டத்திற்கு உட்பட்ட மசோதாவை ஏற்று நிறைவேற்றித் தரவேண்டுமென்று கேட்டுக் கொண்டு இந்த அளவோடு என்னுடைய உரையை முடிக்கிறேன். வணக்கம். (ஆரவாரம்)



